வெளியீடு எண் : 408

5/-

உ

சிவமயம்

# மாயையும் மாயா காரியங்களும்

அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள் தரும்

# தத்துவ விளக்கம்

162

அதன் விளக்க உரையுடன்

T.N. Olaganathan,



திருவாவடுதுறை ஆதீனம்

1992






சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிட மாபாடிய ஆசிரியர்

# அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள்

# 207-ஆம் ஆண்டுச சிறப்பு வழிபாட்டு விழாமலர்

ஆங்கீரச - சித்திரை - ஆயில்யம்

9—5—1992



கையளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T



ஆதீனக் குருமுதல்வர்
அருள்திரு நமசிவாயமூர்த்திகள்

வெளியீடு எண்: 408. 70-3

உ

சிவமயம்

# மாயையும் மாயாகாரியங்களும்

## அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள் தரும்

## தத்துவ விளக்கம்

(அதன் விளக்கவுரையுடன்)



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.



திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை - 609 803.

1992

சிவமயம்

# திருமரபு வாழ்த்து



கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருஆ வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள்.

சிவமயம்

# முகவுரை

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நான்அறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின்று ஏத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

— *திருநாவுக்கரசர்*

சைவ சித்தாந்தத்தை முறையாக உணர்த்துவன மெய்கண்ட சாத்திரங்கள். சாத்திரங்கள் உணர்த்தும் பொருள்களில் அடிப்படை யானது தத்துவ ஞானம்.

கணக்கு அறிய விரும்புவார் முதல்முதல் கற்பது வாய்பாடு. நூல் கற்க விரும்புவார் முதல்முதல் அறிவது நெடுங்கணக்கு. வாய்பாடு தெரியாதார்க்குக் கணக்கு வராது. நெடுங்கணக்கு அறியா தார் நூலறிவு பெறுர்.

அதுபோலவே சமயப் பொருளைத் தளராது தெளிய முதல்முதல் வேண்டுவது தத்துவ அறிவு.

உணரவேண்டும் பொருள்வகை மூன்று. அவை இறையும் உயிரும் தளையும் என்பன. தளையே பாசம். அதுவும் மூன்ருகும். நம் அறிவை மறைக்கும் இருள்குற்றம் ஒன்று. நம் இன்ப துன்பக் காரணங்களான இருவினை ஒன்று. வினை செய்தற்கும் அதன் பயன் நுகர்தற்கும் உள்ள கருவியும் நிலமுமான மாயை ஒன்று.

முப்பொருளையும் உணர முற்படுவார்க்கு முதலாகத் தெரிய வேண்டியது மாயையைப் பற்றிய அறிவு.

மாயை இரு நிலைகளை உடையது. ஒன்று முதல் ( காரண ) நிலை. மற்றது ஆக்க (காரிய) நிலை. முதல் நிலையில் மாயையை அறிய முடியாது. ஆக்க நிலையில் ஓரளவு அறிந்து கொள்ள முடியும்.

மாயையிலிருந்து ஆக்கப்பட்ட பொருள்கள் மாயையின் ஆக்க நிலை. அப்பொருள்கள் மாயா காரியங்கள். மாயையின் ஆக்கங்கள் தத்துவங்கள். அவற்றை முப்பத்தாறு வகையாகக் கண்டது சித்தாந்த சைவம்.

முப்பத்தாறு தத்துவங்கள் யாவை? அவை எப்படி உண்டாயின? அவை எப்படிப்பட்டவை? அவை நமக்கு எப்படி எந்த வகையில் பயன்படுகின்றன? - இவற்றை விளக்குவது தத்துவ விளக்கம்.

இத்தத்துவ விளக்கத்தைப் பெரிதும் வாய்பாடு போலப் பெயர் அளவில் தருவன தத்துவக் கட்டளை நூல்கள். தமிழில் கட்டளை நூல்கள் பல. எல்லாம் சொல்வது செய்தியளவில் ஒன்றே. இக் கட்டளை நூல்கள் தத்துவங்கள் எத்தனை? யாவை? என்பன போன்ற அடிப்படை அறிவை உண்டாக்கும்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கில் ஒன்று உண்மை விளக்கம். அது மெய்கண்ட தேவரின் மாணாக்கருள் ஒருவராகிய மனவாசகம் கடந்தாரால் அருளப்பட்டது. பின்னர் வந்த கட்டளை நூல்களின் பாங்கினை இந்த நூலிலும் காணலாம். ஆனாலும் அவற்றைவிட இந்த நூல் விளக்கம் உடையது. சைவ சித்தாந்தத்தை முறையாகக் கற்க முயல்வார் உண்மை விளக்க நூலை முதலாவது கற்பது இன்றும் வழக்கில் இருந்துவருவது. இந்நூல்தரும் தத்துவ விளக்கத்தை மேலும் சில விளக்கங்களோடும் உதவுவன சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் போன்ற நூல்கள்.

பவுட்கரம் முதலான சைவ ஆகமங்களில் தத்துவங்கள்பற்றிய விரிவான விளக்கத்தைக் காணலாம் என்பது மாபாடியம் அருளிய மாதவச் சிவஞான யோகிகள் போன்றூர் திருவாக்கால் அறிகின்றோம். ஆகமங்கள் வடமொழியில் இருப்பதால் தமிழொன்றே அறிவார் அவற்றைக் கற்றறிய வாய்ப்பில்லை. ஆதலால் வடமொழி அறியாதாரும் இத்தத்துவ விளக்கத்தைப் பெறவேண்டும் என்று இரங்கியது முனிவரது திருவுள்ளம்.

சிவஞான போதத்திற்கு அகலவுரை செய்யும் வாய்ப்பு அவர்க்குக் கிடைத்தது. அங்கு இரண்டாம் சூத்திரப் பகுதி மாயையைப் பற்றி உணர்த்தும் இடமாக அமைந்தது. மீளப் படைத்தல் பற்றிப் பேசும் இடம் அது. அப்போது உலகப்

படைப்புப் பற்றி விளக்கித்தானே ஆதல் வேண்டும். இது தத்துவ விளக்கம் தரப் பெரியதோர் வாய்ப்பாயிற்று.

படைப்பு மாயையிலிருந்து ஆவது. அது மாயையின் ஆக்கம். மாயையின் ஆக்கம் இரண்டு, மூன்று வகையாகக் காணப்படுவது. அதற்குக் காரணம் முதற் பொருளாகிய மாயையிலேயே இருக்கிறது. ஆதலால் மாயை ஒன்றே யென்றாலும் ஆக்க வேறுபாடு கருதி அதுவும் இரண்டு, மூன்று வகையாக அறியப்பட்டது.

ஆக்கத்தைச் சொல்லும்போது முதலையும் சொல்லியாக வேண்டும். அந்த முறையில் முனிவர் பெருமான் மாயையின் வகையும் அவ்வகையில் உண்டான ஆக்கம் பற்றியும் மிகவும் விளக்கமாக அருளிச் செய்தார். அவர் தந்துள்ள விளக்கம் பற்றி விரித்துரைப்பின் அஃது ஒரு நூலாகிவிடும். அதற்கு இது இடம் அன்று. ஆறுலும் ஒன்று குறிப்பிட்டாக வேண்டும்.

உலகத்தையும் உலகத்துப் பொருள்களையும் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து காண்பன இக்கால அறிவியல்கள். ஆதலால் அறிவியல்கள் பல ஆயின. இங்கு உலகம் பற்றிய ஆராய்ச்சியே படைப்புப்பற்றிய விளக்கம். ஆதலால் இங்கும் அறிவியல் நோக்குப் பலவும் அமைந்தே கிடக்கும்.

பூத இயல், வேதியியல், உளவியல், வானியல் – இப்படிப் பல அறிவியல் நுட்பங்களை ஒருங்கே கொண்டது சிவஞானபோதம் இரண்டாம் சூத்திர விரிவுரைப் பகுதி. மாபாடியத்தில் பெரிதும் இடம் கொண்டது இப்பகுதி.

மேலை நாட்டில் வளர்ந்துவந்துள்ள அறிவியல்களில் மூன்று பேரண்ட அறிவியல் (Cosmology) அறிவறிவியல் (Epistemology) உளவியல் (Psychology) என்பன. அந்த அறிவியல்களைக் கண்டார் கண்டனவும், இன்னும் காணவேண்டியனவுமான அறிவியல் நுட்பங்களை ஒருங்கே கொண்டு விளங்குவது முனிவர் பெருமானின் இப்பேருரைப் பகுதி என்ற உண்மையை இரண்டும் அறிவார் அறிவார். இவைபோன்ற பிற பலவும் இங்கு உண்டு.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த தத்துவ விளக்கப் பகுதியாய் அமைந்த இரண்டாம் சூத்திரப் பேருரைப் பகுதியின் முதலில்

தமிழுலகு நன்குக அறியவேண்டும். ஆனால் முனிவர்தம் முழுவுரையை அப்படியே தளராது கற்பார் எத்தனையர்! ஆனாலும் அவரை எங்ஙனமும் அறியவைக்கவேண்டும். அதற்கு ஒரு வழி :

விரிவாக ஆராய்ந்துரைக்கும் பகுதிகளில் முதன்மையாகத் தெரிந்துகொள்ள வேண்டியவற்றை மட்டும் திரட்டித் தொகுத்துக் கொடுக்கலாம். இதனைத் தெரிந்து கொண்டபின் முழுவுரை கற்க ஊக்கம் உண்டாகும். எளிதும் ஆகும்.

திருவாவடுதுறை ஆதீனம் 23-ஆவது குரு மகாசந்நிதானம் அவர்களின் அருள்மிகுந்த திருவுள்ளத்தின் இங்ஙனம் மலர்ந்ததோர் குறிப்பின் அருளாணை பிறந்தது. அத்திருவாணையைச் சென்னிமேற் கொண்டமையால் குருவருளே துணையாகத் தொகுத்துத் தரப்பட்டது இந்நூல்.

இந்நூல் இரு பகுதிகளாக அமைந்துள்ளது. முதலாவது விளங்குவது மாதவச் சிவஞான யோகிகளின் திருவாக்கின் தொகுப்பு. குரு மகாசந்நிதானம் அவர்கள் மேலும் ஆணையிட்டருளியபடியே பிற்பகுதி முனிவர் பெருமான் அருளிய விளக்கத்தை அடியேனால் இயன்றமட்டும் எளிமையாக்கித்தரப்பட்ட பகுதி. தொடக்கத்தில் பிற்பகுதியைப் படித்துவிட்டு முனிவர் பெருமான் உரைப்பகுதியைக் கற்க முற்படின் சிலர்க்கு அஃது உதவியாதலுங் கூடும் என்ற எண்ணத்தின் விளைவே பிற்பகுதி. இந்நூலில் எளியேன் அறிவுச் சோர்வினால் ஆன குறைகள் இருப்பின் அறிவின் நல்லார் அறிவித்துதவின் மேல்வரும் பதிப்பில் செம்மை செய்வேன்.

திரு மாதவச் சிவஞான சுவாமிகளின் சிறப்பு வழிபாடு திரு ஆவடுதுறை ஆதீனத்தின் சார்பில் சீர் வளர் சீர் குரு மகா சந்நிதானம் அவர்களின் திருவுள்ளப் பாங்கின் வண்ணம் ஆண்டு தோறும் சிறப்பாக நடந்து வருவதும், அதுவும் முனிவர் பெருமானுக்குத் தொடர்புடைய விக்கிரமசிங்கபுரம், திருவாவடுதுறை, காஞ்சிபுரம் ஆகிய மூன்று இடங்களிலும் சிறப்பாக விழாச் செய்து முனிவரின் அறிவு விளங்கும் நூல்களை அன்றைய சிறப்பு விழா மலராக வெளியிட்டுச் சைவத் தமிழுலகிற்கு வழங்கி வருவதும் உலகம்நன்கறியும். அந்த முறையில் இவ்வாண்டு வழிபாட்டுச் சிறப்பு மலராக மலையும் மாயா காரியங்களும்: தத்துவ விளக்கம் என்னும் இந்நூல் மலர்ந்து வெளிவருகிறது.

சித்தாந்த அறிவுக்குத் திறவுகோல் போன்ற இந்த நூற்பணியை முறையாக உணர்வு பெருகுக என்று அடியேற்கு அருளிய திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 23-ஆவது குரு மகாசந்நிதானமாக வீற்றிருந்து உலக அறிவும் உயர் அறிவும் அவரவர் நிலைக்கு ஏற்ப அருளிவரும் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி** அவர்களின் பொன்னார் திருவடி மலர்களைப் புந்தியில் வைத்துப் போற்றி மகிழ்வேன்.

அடியேன்,

**ஆ. சி. முருகவேள்**

ஆதீனப் புலவர்

உ

சிவமயம்

## அருள்திரு சிவஞான யோகிகள் துதி

கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவாய் அழகும்
பெருமைதரு துறவோடு பொறைஉளத்தில் பொறுத்தே
பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் **சிவஞான மாமுனிவன்** மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுஉளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினில்என்றும் உன்னிவைத்தே உரைப்பாம்.

— **அருள்திரு மதுரகவி சுப்பிரமணிய முனிவர்**



திராவிட மாபாடியகாரர்

*அருள்திரு சிவஞான யோகிகள்*

உ
சிவமயம்

# அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள் வரலாறு



செந்தமிழ் நாட்டில் தண்தமிழ்ப் பொதியில் சாரலில் விளங்குவது விக்கிரமசிங்கபுரம் என்னும் திருநகரம். அங்கே சிவநெறி திளைக்கும் சைவ வேளாளர் குடியில் சைவம் தழைக்கவும் தமிழ் சிறக்கவும் ஆனந்தக் கூத்தர்க்கும் மயிலம்மையார்க்கும் அருமை மகவாகத் தோன்றினார் மாதவச் சிவஞான சுவாமிகள். அவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் முக்களாலிங்கர் என்பது.

முக்களாலிங்கர்க்கு பள்ளியிற் சென்று கல்வி பயின்றுவரும் காலம். ஒருநாள் வீடு திரும்பும் வழி. கல்லாடை புனைந்த முனிவர் சிலரைக் கண்டார். அவர்கள் திருக்கயிலாய பரம்பரைத் திருஆவடுதுறை ஆதீனத்து முனிபுங்கவர்கள். யாத்திரைப் பொருட்டு வந்தவர்கள்.

முக்களாலிங்கர்க்கு முன்னைத் தவப்பயன் கை கூடும் காலம் வந்தது. முனிவர் பெருமக்களை வணங்கி நின்றார். தம் இல்லத்து வந்து திருவமுது செய்தருள வேண்டினார். குழந்தை அன்பு அடியவர் மனத்தைக் குழைவித்து. இசைந்தனர். இல்லம் சென்றனர்.

அருமைத் தாயாரிடம் அடியவர் வரவு கூறினார் முக்களாலிங்கர். அம்மையாரும் அகம் கனிந்து அவரை வரவேற்று உபசரித்தார். திருவமுது படைத்து உண்டுமகிழச் செய்தார். அம்மை அமுதளித்த அருமையைச் சிறப்பித்து வெண்பா ஒன்று பாடினார் பிள்ளை முக்களாலிங்கர்.

வீடு அடைந்த தந்தையார் இல்லத்து நிகழ்ந்த இனிய செய்தியை அறிந்து பெரிதும் மகிழ்ந்தார். முனிவர் தங்கியிருந்த திருமடத்திற்குத் திருமகனாரொடு சென்றார். அடியவரைப் பணிந்தார்.

அவ் அடியாரொடும் தாமும் செல்ல விரும்பினார், தந்தைக்குக் கூறினார். சிறுவராயினும் பக்குவம் முதிர்ந்த பாங்கினை யுணர்ந்த தந்தையும் மகனார் கருத்துக்கு இசைந்தார்.

ஆதீனத்து அடியவரோடும் உடனுகச் சென்ற முக்களாலிங்கர் அப்போது சுசீந்திரத்தில் ஆதீனத்துச் சின்னப்பட்டத்தில் இருந்த பின் வேலப்ப தேசிகர் அருளைப் பெற்றார். சைவத்துறவும் தீக்கையும் பெற்றார். தமிழிலும் வடமொழியிலும் சான்ற புலமை அடைந்தார். தேசிகரிடத்தில் மொழியறிவு மட்டும் அன்றிச் சித்தாந்த அறிவையும் சிறப்பாகப் பெற்றார். அன்று முதல் முக்களாலிங்கர் சிவஞான யோகியானார்.

சிவஞான யோகிகள் சிவஞான வள்ளலானார். மெய்கண்டார் அருளிய தமிழ்ச் சிவஞான போதத்தின் உண்மைப் பொருளை உலகறியச் செய்த பெருமை அன்னார்க்கே உரியதாகும். வடமொழியில் இருந்த பாடியங்களுக்கும் மேலாகத் தமிழில் சிவஞான போத மாபாடியத்தைச் செய்தருளினார். அத்துடன் சிவஞான போதத்திற்குச் சிற்றுரை ஒன்றும் செய்துதவினார்.

சிவஞான முனிவரின் கல்விச் சிறப்பும், பன்னூல் அறிவும், இலக்கண அறிவும் இலக்கிய ஆக்கமும், செய்யுட் புலமையும் சித்தாந்த நுட்பமும், வாதத்திறனும் மயக்கம் இன்மையும், இன்னும் இவை போன்ற மாண்புகளை இன்றும் நின்று காட்டுவன, அவரால் இயற்றப்பட்ட அரும்பெரும் தமிழ் நூல்கள்.

அவர் அருளிச் செய்த நூல்களாகத் தொல்காப்பியச் சூத்திர விருத்தி காஞ்சிப் புராணம், அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், சோமேசர் முதுமொழி வெண்பா, பதிற்றுப்பத்தந்தாதி சில, சிவஞான மாபாடியம், சிவஞான போதச் சிற்றுரை, சித்தாந்த மரபு கண்டன கண்டனம் முதலாக முப்பது நூல்கள் நமக்குக் கிடைத்துள்ளன.

சுசீந்திரத்தில் துறவு பூண்ட முனிவர் பெருமான் திருவாவடுதுறைக்கு எழுந்தருளினார். அங்குக் குரு முதல்வர் அருள் திருநமச்சிவாயர் அடியரானார். சிலகாலம் அங்கு வதிந்திருந்து பின்னர்க் காஞ்சியை அடைந்தார். அத்திருத்தலத்தில் இருந்த காலத்தேயே அவர் நூல்களில் பல மலர்ந்தன.

சிங்கையில் தோன்றித் துறைசையைச் சார்ந்து காஞ்சியில் கனிந்த முனிவர் பெருமான் திரு கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் முதலான பன்னிரு மாணக்கர்க்கு ஆசிரியராயிருந்து தமிழுக்கும் சைவத்திற்கும் நிலைத்த புகழுக்குரிய நூல்கள்

பல வழங்கி இறுதியில் திரு ஆவடுதுறையை அடைந்தார். அங்கு விசுவாவசு ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் நாள் (சகாத்தம் 1708) ஞாயிற்றுக்கிழமை ஆயிலிய நன்னாளில் எங்கும் நிறை பரம் பொருளாகிய சிவத்தொடும் கூடிச் சிவானந்தப் பெருவாழ்வு எய்தினர்.

மாதவச் சிவஞான சுவாமிகள் சிவப்பேறடைந்த திருவாவடு துறையிலும் பிறப்பிடமாகிய விக்கிரம சிங்கபுரத்திலும் நீண்டநாள் தங்கி நிலையான நூல்பல செய்த திருக் காஞ்சிமா நகரிலும் அவர்க்கெனத் திருக்கோயில்கள் விளங்கி நிற்கின்றன. காஞ்சியில் அன்னார் தங்கியிருந்த திருமடம் இடைக்காலத்தே பொலிவிழந்த நிலை கண்ட திருவாவடுதுறை ஆதீனத்து 22 ஆவது குரு மகாசந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்களின் அருளால் இன்று கருவறையும் அதன் முன்மண்டபமும் அழகுற அமைக்கப் பட்டும் திருமடத்து வருவார் தங்கியிருத்தற்கென வசதியொடும் புதிய கட்டிடம் எழுப்பப்பட்டும் சீருடன் விளக்க முறுகிறது.

குரு மகா சந்நிதானம் அவர்கள் அங்குச் சிவஞான சுவாமிகள் பெயரால் நூலகம் ஒன்று அமைக்கவும் திருவுள்ளம் கொண்டுள்ளார்கள் என்பதும் சைவத் தமிழுலகம் மகிழ்தற் குரியதாகும்.

உ

சிவமயம்

இருபத்துமூன்ருவது குரு மகாசந்நிதானம்

## சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்

கயிலாய மரபில்வரு சிவஞா னத்தைக்
கைவரச்செய் துறைசைவளர் நமச்சி வாயன்
பயில்ஞான இருக்கைஇரு பதின்மூன் ருன
பாங்கினில்வீற் றிருந்தருளும் பண்பின் மிக்கான்
செயிர்தீர்ந்த உள்ளத்தின் **சிவப்பிர காசச்**
செம்மையன்சீர் பணிகள்பல சிறக்கச் செய்வான்
மயர்நீங்க அருளவல மாண்பின் ஓங்கும்
மலரடிகள் சிந்தையினில் வயங்க வாழ்வாம்.

— ஆதி. முருகவேள்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்ருவது குரு மகாசந்நிதானம்

*சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்*

# உள்ளுறை

௳

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான போத மாபாடியத்துள்

## திரு மாதவச் சிவஞான யோகிகள் தரும்

# தத்துவ விளக்கம்

### மாயையின் வகை

**இருவகை மாயை :**

........பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாய், நித்தமாய்ச், சடமாய், முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாய், முதல்வனின் வியாப்பியமாய், மெய்ப் பொருளாய், அருவாய் உள்ளது எனப் போந்த மாயை - சுத்த மாயை, அசுத்த மாயை என்று இருவகைப்படும்.

சுத்த மாயை, மாமாயை, குடிலை, குண்டலினி, விந்து - என்பன ஒருபொருட் கிளவி.

அசுத்த மாயை, அதோ மாயை, மாயை, மோகினி - என்பன ஒரு பொருட் கிளவி.

இவற்றுள், சுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்த மாயை. அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்த மாயை.

### 1. சுத்த மாயை

சுத்தப் பிரபஞ்சம் - சிவ தத்துவம் முதலாயின. அசுத்தப் பிரபஞ்சம் - கலை முதலாயின.

*  *  *  *  *

........பெயர், சாதி முதலிய சவிகற்ப உணர்வு எழுத்தான் ஆகிய சொல்லான் அன்றிப் பெறப்படாது. .. அவ் எழுத்தோசைக்குக் காரணம் .. சுத்த மாயை.

*  *  *  *  *

## நால்வகை வாக்கு

இவ் எழுத்தோசை - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி – என நான்கு வகைப்பட்டு, ஒன்றற்கு ஒன்று காரணமாய்ச், சவிகற்ப உணர்விற்கு ஏதுவாய்ப், படம் குடில் ஆறுற்போலச் சுத்த மாயையின் விருத்தியாய்ச், சாந்தியதீதை முதலிய பஞ்ச கலைகளைப் பற்றிச், சிவதத்துவம் முதலிய சுத்த தத்துவங்களின் ஐவகைப்பட்டு நிற்கும்.

**ஐவகை :**

வைகரி - தன் செவிக்குக் கேட்கும் சூக்கும வைகரியும், பிறர் செவிக்குக் கேட்கும் தூல வைகரியும் என்று இருவகைப்படும். ஆகலின், ஐவகை ஆமாறு கண்டுகொள்க.

வைகரியை ஒன்றாக வைத்து எண்ணிச், சூக்குமை வாக்குச் - சூக்குமை, அதிசூக்குமை என்று இருவகைப்பட்டு, ஐந்து ஆம் என்பாரும் உளர்.

*  *  *  *  *

**வாக்கு – மூன்று நிலை :**

எழுத்தோசை ஆகிய வாக்கு ஒன்றுதானே–உபாதி இன்மையின்– சுத்த மாயா காரியங்களின் சூக்குமம் ஆயும், இசையோசை முதலிய உபாதிவயத்தான் – அசுத்த மாயா காரியங்களின் தூலம் ஆயும், பிரகிருதி மாயா காரியங்களின் அதிதூலம் ஆயும் நிற்றலின் – அவ் உபாதிவயத்தானே நம்மனோர்க்குப் புலப்படும்.

*  *  *  *  *

**சுத்த மாயை – இருவகை உருவம் :**

சுத்த மாயை ஒன்றுதானே – சத்த ரூபமும், அத்த ரூபமும் ஆகிய இரண்டு தன்மையை உடைத்தாய், அவ் இரண்டிற்கும் முதற்காரணம் எனக் கொள்ளப்படும்.

*  *  *  *  *

## (அ) சுத்த மாயா காரியம்

**இருவகை :**

........சுத்த மாயையின் காரியம் – சத்தப் பிரபஞ்சம், அத்தப் பிர பஞ்சம் என்று இருவகைப்படும். ....சத்தப் பிரபஞ்சத்தின் இயல்பு மேலே தொகுத்துக் கூறினும்.

**இருவகை அத்தப் பிரபஞ்சம் :**

அத்தப் பிரபஞ்சம் – சுத்த தத்துவமும், கலையும் என்று இருவகைத்து.

**சுத்த தத்துவம் - ஐவகை :**

அவற்றுள், சுத்த தத்துவம் – சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்று ஐந்து வகைப்படும். இவை தோன்றுமாறு முறையே கூறுதும்.

### 1. சிவ தத்துவம்

**மீண்டும் உண்டாக :**

சுத்த மாயை, மகாசங்கார காலத்துத் தனது காரியங்கள் எல்லாம் ஒடுங்கிக் காரணமாத்திரையாய் நின்றவழி, முதல்வனும் தனது சத்திவியாபாரங்களை ஒழித்துப், பகுப்பு இன்றித் தானேயாய் நிற்பன் அன்றே. அத்தன்மையன் ஆகிய முதல்வன், அத்தன்மைத்து ஆகிய சுத்த மாயை மீளக் காரியப்படுதற்கு யோக்கியம் ஆம்படி, தன்னின் நின்றும் வெளிப்பட்ட ஞான சத்தி மாத்திரையானே அதனை நோக்கி நிற்பன்.

அங்ஙனம் நோக்கி நின்றவழிச் – சுத்த மாயையில் கலக்குண்ட பாகம் -

**சிவ தத்துவத்தின் பெயர்கள் :**

ஞானம் மாத்திரையாய் நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலின் சிவதத்துவம் என்றும்,

இலயித்த மாத்திரையாய் நிற்றலின் இலய தத்துவம் என்றும்,

வடிவம் இன்மையின் நிட்கள தத்துவம் என்றும்,

காரியப்படுதற்கு யோக்கியம் ஆகலின் சத்திமான் என்றும்,

நால்வகை வாக்குக்களில் சூக்குமை வாக்கு ஆகிய நாதத்திற்குப் பற்றுக்கோடு ஆகலின் நாத தத்துவம் என்றும் — பெயர் பெற்று நிற்கும்.

அதனை அதிட்டிக்கும் முதல்வனும் இவ் ஐவகைப் பெயரும் உற்றுநிற்பன்.

**இடம் ஆவது :**

சுத்த மாயையின் முந்திய விருத்தி ஆகிய இச் சிவ தத்துவம் — முதல்வனது ஞான சத்திக்கும், அதன் பேதம் ஆகிய இந்திகை முதலிய பத்துக் கலைகட்கும், காமிகம் முதலிய பேதம் தோன்றாது, சூக்குமை வாக்கு ரூபமாய் நிற்கும் சிவாகமத்திற்கும், சிவ தத்துவ புவனத்தை விரும்பிச், சிவ தீக்கை பெற்று, நாத மூர்த்தியை வழிபட்டு, அதிகார மல வாசனையும் நீங்கி, முத்தராய்ச், சூக்கும லய வாசனை மாத்திரம் உடைய ஆன்மாக்களுக்கும், ஆண்டு உள்ள புவன போகங்கட்கும் இடம் ஆம் என்று உணர்க.

## உ. சத்தி தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, அங்ஙனம் ஞானசத்தியால் கலக்குண்ட பாகத்தில், சிவ தத்துவம் என விருத்திப்பட்டுக், காரியப்படுதற்கு யோக்கியம் ஆய் நின்ற சுத்த மாயை காரியப்படுமாறு, சூக்கும லய அவத்தையின் நின்ற முதல்வனது கிரியா சத்தி வெளிப்பட்டுப், பொதுமையின் சங்கற்பித்தவழிச் — சுத்த மாயை காரியப்படுவதாய் நின்ற இரண்டாம் விருத்தி —

**பெயர்கள் :**

சத்தி என்று ஓதப்படும் சிவனால் அதிட்டிக்கப்படுதலின் சத்தி தத்துவம் என்றும்,

சிவ தத்துவத்தின் இயல்பை நோக்கத் தூலம் ஆகலின் தூல லய தத்துவம் என்றும்,

தூல நிட்களை தத்துவம் என்றும்,

பைசந்தி என்னும் வாக்கிற்குப் பற்றுக்கோடு ஆகலின் விந்து தத்துவம் என்றும் — பெயர் பெற்று நிற்கும்.

அதனை அதிட்டிக்கும் முதல்வனும் அப் பெயர் பெற்று நிற்பன்.

**இடம் ஆவது :**

இது, முதல்வனது கிரியா சத்திக்கும், அதன் பேதம் ஆகிய நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகட்கும், பைசந்தி ரூபமாய் நிற்கும் சிவாகமங்கட்கும், விந்து தத்துவ புவனத்தை விரும்பித், தீக்கை உற்று, விந்து மூர்த்தியை வழிபட்டு, மலபந்தம் நீங்கித், தூல லய வாசனை மாத்திரம் உடைய முத்தர்க்கும், அவர்க்கு உரிய புவன போகங்கட்கும் இடம் ஆம் என்று உணர்க.

## 3. சதாசிவ தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, அங்ஙனம் காரியப்படுவதாய்ச், சத்தி தத்துவம் என விருத்திப்பட்டு நின்ற சுத்த மாயையைக் காரியப்படுத்துமாறெல்லாம், அங்ஙனம் தூல லய அவத்தையின் நின்று பொதுவகையான் சங்கற்பித்த முதல்வன், பின்னர்ப், போக அவத்தையின் நின்று, தனது ஞானசத்தியால் சிறப்பு வகையான் நோக்கிக், கிரியா சத்தியான் சிறப்புவகையான் சங்கற்பித்தவழிக் –

காரியங்களைத் தோற்றுவித்தற்கு உன்முகியாய் நின்ற சுத்த மாயையின் மூன்றும் விருத்தி –

**பெயர்கள் :**

சதாசிவம் எனப் பெயர் பெற்ற சிவனால் அதிட்டிக்கப் படுதலின் சதாசிவ தத்துவம் என்றும்,

உன்முகமாய் நிற்றலின் உத்தியுத்த தத்துவம் என்றும்,

போகம் என்னும் அவத்தை உடைமையின் போக தத்துவம் என்றும்,

சதாசிவ மூர்த்தி சத்தி கலை உண்மையான் சகளம் ஆதலும், மாயா கலை இன்மையான் நிட்களம் ஆதலும் உடைமையானும்

இலயித்த மாத்திரையாய் நிற்றலின் இலய தத்துவம் என்றும்,

வடிவம் இன்மையின் நிட்கள தத்துவம் என்றும்,

காரியப்படுதற்கு யோக்கியம் ஆகலின் சத்திமான் என்றும்,

நால்வகை வாக்குக்களில் சூக்குமை வாக்கு ஆகிய நாதத்திற்குப் பற்றுக் கோடு ஆகலின் நாத தத்துவம் என்றும் — பெயர் பெற்று நிற்கும்.

அதனை அதிட்டிக்கும் முதல்வனும் இவ் ஐவகைப் பெயரும் உற்றுநிற்பன்,

**இடம் ஆவது :**

சுத்த மாயையின் முந்திய விருத்தி ஆகிய இச் சிவ தத்துவம் — முதல்வனது ஞான சத்திக்கும், அதன் பேதம் ஆகிய இந்திகை முதலிய பத்துக் கலைகட்கும், காமிகம் முதலிய பேதம் தோன்றாது, சூக்குமை வாக்கு ரூபமாய் நிற்கும் சிவாகமத்திற்கும், சிவ தத்துவ புவனத்தை விரும்பிச், சிவ தீக்கை பெற்று, நாத மூர்த்தியை வழிபட்டு, அதிகார மல வாசனையும் நீங்கி, முத்தராய்ச், சூக்கும லய வாசனை மாத்திரம் உடைய ஆன்மாக்களுக்கும், ஆண்டு உள்ள புவன போகங்கட்கும் இடம் ஆம் என்று உணர்க.

## உ. சத்தி தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, அங்ஙனம் ஞானசத்தியால் கலக்குண்ட பாகத்தில், சிவ தத்துவம் என விருத்திப்பட்டுக், காரியப்படுதற்கு யோக்கியம் ஆய் நின்ற சுத்த மாயை காரியப்படுமாறு, சூக்கும லய அவத்தையின் நின்ற முதல்வனது கிரியா சத்தி வெளிப்பட்டுப், பொதுமையின் சங்கற்பித்தலிச் — சுத்த மாயை காரியப்படுவதாய் நின்ற இரண்டாம் விருத்தி —

**பெயர்கள் :**

சத்தி என்று ஓதப்படும் சிவனால் அதிட்டிக்கப்படுதலின் சத்தி தத்துவம் என்றும்,

சிவ தத்துவத்தின் இயல்பை நோக்கத் தூலம் ஆகலின் தூல லய தத்துவம் என்றும்,

தூல நிட்கள தத்துவம் என்றும்,

பைசந்தி என்னும் வாக்கிற்குப் பற்றுக்கோடு ஆகலின் விந்து தத்துவம் என்றும் — பெயர் பெற்று நிற்கும்.

அதனை அதிட்டிக்கும் முதல்வனும் அப் பெயர் பெற்று நிற்பன்.

**இடம் ஆவது :**

இது, முதல்வனது கிரியா சத்திக்கும், அதன் பேதம் ஆகிய நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகட்கும், பைசந்தி ரூபமாய் நிற்கும் சிவாகமங்கட்கும், விந்து தத்துவ புவனத்தை விரும்பித், தீக்கை உற்று, விந்து மூர்த்தியை வழிபட்டு, மலபந்தம் நீங்கித், தூல லய வாசனை மாத்திரம் உடைய முத்தர்க்கும், அவர்க்கு உரிய புவன போகங்கட்கும் இடம் ஆம் என்று உணர்க.

## 3. சதாசிவ தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, அங்ஙனம் காரியப்படுவதாய்ச், சத்தி தத்துவம் என விருத்திப்பட்டு நின்ற சுத்த மாயையைக் காரியப்படுத்துமாறெல்லாம், அங்ஙனம் தூல லய அவத்தையின் நின்று பொதுவகையான் சங்கற்பித்த முதல்வன், பின்னர்ப், போக அவத்தையின் நின்று, தனது ஞானசத்தியால் சிறப்பு வகையான் நோக்கிக், கிரியா சத்தியான் சிறப்புவகையான் சங்கற்பித்தவழிக் –

காரியங்களைத் தோற்றுவித்தற்கு உன்முகியாய் நின்ற சுத்த மாயையின் மூன்றும் விருத்தி –

**பெயர்கள் :**

சதாசிவம் எனப் பெயர் பெற்ற சிவனால் அதிட்டிக்கப் படுதலின் சதாசிவ தத்துவம் என்றும்,

உன்முகமாய் நிற்றலின் உத்தியுத்த தத்துவம் என்றும்,

போகம் என்னும் அவத்தை உடைமையின் போக தத்துவம் என்றும்,

சதாசிவ மூர்த்தி சத்தி கலை உண்மையான் சகளம் ஆதலும், மாயா கலை இன்மையான் நிட்களம் ஆதலும் உடைமையானும்

பிரவிருத்தி, நிவிர்த்தி இரண்டற்கும் பொது ஆகலானும் சகள நிட்கள தத்துவம் என்றும் –

தன்னை அதிட்டிக்கும் முதல்வனுக்கு உரிய பெயர் அனைத்தும் பெற்று நிற்கும்.

**இடம் ஆவது :**

இது, சதாசிவனுக்கும் சதாசிவ மூர்த்திக்கும் முடி முதலிய உறுப்புகள் ஆகிய பஞ்ச சத்திகட்கும், அவற்றின் பேதம் ஆகிய சசினியாதி முப்பத் தெட்டுக் கலைகட்கும், ஆரணி சனனி முதலிய சத்திகட்கும், மத்திமை வாக்கு ரூபமாய் நின்ற சிவாகமத்திற்கும், அச்சிவாகமம் – காமிகம் முதல் வாதுளம் ஈறுக இருபத்தெட்டாய்ப் பாகுபடுதற்குக் காரணம் ஆன பிரணவர் முதலியோர்க்கும், சுத்த சாமீப்பியம் முதலிய முத்தி பதங்களில் போக வாசனை உடைய அணுசதாசிவர் முதலியோர்க்கும், அவர் தநு கரண புவன போகங் கட்கும் இடம் ஆம் என்று உணர்க.

## 4. ஈசுர தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, உன்முகியாய் நின்ற சுத்த மாயையில், சூக்குமம் ஆய்க் காரியம் தோன்றுதற்கு, அங்ஙனம் உத்தியுத்தனாய் நின்ற முதல்வன், அதிகார அவத்தையின் நின்று, கிரியா சத்தியை மிக்குச் செலுத்திப் பிரவிருத்தி செய்த வழிச் – சூக்குமமாய்க் காரியப்பட்ட சுத்த மாயையின் நாலாம் விருத்தி –

**பெயர்கள் :**

ஈசுரனாய் நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலின் ஈசுர தத்துவம் என்றும்,

சூக்கும அதிகார தத்துவம் என்றும்,

சூக்குமப் பிரவிருத்தி தத்துவம் என்றும்,

சூக்கும சகள தத்துவம் என்றும் –

தன்னை அதிட்டிக்கும் முதல்வனுக்கு உரிய பெயர் அனைத்தும் பெற்று நிற்கும்.

**இடம் ஆவது :**

இஃது, ஈசுரனுக்கும், சூக்கும வைகரி உருவாய் நின்ற சிவாகமங்கட்கும், அதிகார மல வாசனை உடையவராய் அசுத்த மாயையைக் காரியப்படுத்தும் அநந்த தேவர் முதலிய வித்தியேசுரர் எண்மர்க்கும், அவரை வழிபட்டு அப் பதத்தைப் பெற்ற உருத்திரர்க்கும், அவர் தநு கரணம் முதலியவற்றிற்கும் இடம் ஆம் என்று உணர்க.

## 5. சுத்த வித்தியா தத்துவம்

**ஆகும் ஆறு :**

இனி, அங்ஙனம் நின்ற சுத்தமாயையின், தூல காரியம் தோன்றுதற்கு, அம்முதல்வனும் தூல அதிகார அவத்தையின் நின்று, ஞான சத்தியை மிக்குச் செலுத்திப் பிரவிருத்தி செய்தவழித் – தூலம்ஆய்க் காரியப்பட்ட சுத்த மாயையின் ஐந்தாம் விருத்தி –

**பெயர்கள் :**

வித்தைக்கு ஏதுவாகிய ஈசுரனாய் நின்ற சிவனால் அதிட்டிக்கப் படுதலின் சுத்த வித்தியா தத்துவம் என்றும்,

தூல ஈசுர தத்துவம் என்றும்,

தூல அதிகார தத்துவம் என்றும்,

தூலப் பிரவிருத்தி தத்துவம் என்றும்

தூல சகள தத்துவம் என்றும் –

தன்னை அதிட்டிக்கும் முதல்வனுக்கு உரிய பெயர் அனைத்தும் பெற்றுநிற்கும்

**இடம் ஆவது .**

இது, தூலமாய் நின்ற ஈசுரனுக்கும், தூல வைகரி ரூபமாய் நின்ற சிவாகமம் முதலிய சாத்திரங்கட்கும், ஏழுகோடி மந்திரங்கட்கும், நந்தி முதலிய கணங்கட்கும், வாமை முதலிய ஒன்பது சத்திகட்கும், முத்தி பெற்று மலவாசனை மாத்திரம் உடையவராய்க் கீழ் உள்ள உருத்திரன், மால், அயன், இந்திரன் முதலியோரைத் தொழிற்படுத்துவோர் ஆகிய உருத்திரன், மால், அயன், இந்திரன் முதலியோர்க்கும் அவர் தநு கரணாதிகட்கும் இடம் ஆம் என்று உணர்க.

**இவை ஐந்தின் இன்றியமையாமை :**

இவை ஐந்தும் – சுத்த மாயையின் விருத்தியாய்த், தம்மை அதிட்டிக்கும் முதல்வனுக்கு உரிய பெயர்களை உடையவாய், முறையே – பத்தும், ஐந்தும், ஒன்றும், எட்டும், ஒன்பதும் ஆகிய புவனங்களை உடையவாய், முதல்வனுக்கு இலயம், போகம், அதிகாரம் என்னும் அவத்தைக்கு இடம்ஆதற் பொருட்டும், சிவ தீக்கையால் பசுத்துவம் நீங்கி, வாசனு மலம் மாத்திரம் உடையராய், இலயிகள், போகிகள், அதிகாரிகள் என நிற்கும் ஆன்மாக்கள் – விசித்திரமாய்ச், சுத்தமாய், இன்பமயம் ஆகிய போகங்களைத் தாம்தாம் இச்சித்தவாறே அநுபவித்தற்பொருட்டும் உளவாயின என்க.

* * * * *

........அசுத்த அத்துவாவிற் போலச், சுத்த அத்துவாவினும் கா்லம் முதலிய தத்துவங்கள் அனைத்தும் உள. அவை சுத்த மாயா காரியம் ஆகலின், அசுத்த மாயா காரியம் போல அசுத்தம் ஆதல் இன்றிச் சுத்த மாய் உள்ளன ஆகலான், ஆண்டும் போகநுகர்ச்சிக்கு இழுக்கு இன்மை அறிக.........

**வகைப்பாட்டில் வேறுபாடு :**

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை – என்னும் இவை ஐந்தும் – இலயம், போகம், அதிகாரம் என மூன்றாய் அடங்குதல் பற்றிச், சுத்த தத்துவம் மூன்று என்றும்,

சிலவற்றின் – சிவம், சத்தி, சதாசிவம் மூன்றும் சிவனால் அதிட்டிக்கப் படுதலின், ஒன்றாக வைத்து, ஈசுரமும், சுத்த வித்தையும் அநந்த தேவர் முதலியோரான் அதிட்டிக்கப்படுவன என வேறு வைத்து எண்ணி, மூன்று என்றும்,

அதில் சிலவற்றின், ஈசுரமும், சுத்த வித்தையும் சிவன் ஏவல் வழி நிற்போரான் அதிட்டிக்கப்படும் தன்மையான் ஒன்று என வைத்து எண்ணி நான்கு என்றும்,

சிலவற்றின், சத்தி தத்துவம் சிவ தத்துவத்தின் வேறு அன்மையான் ஒன்று என வைத்து எண்ணி, நான்கு என்றும் கூறப்படும்.

வகையான் அங்ஙனம் கூறினும், விரியான் ஐந்து என்றலே அவற்றிற் கெல்லாம் கருத்து ஆகலின், மாறுகோள் இன்மை உணர்க.

இக் கருத்தே பற்றிச்—சில ஆகமங்களில்—சிவம், சத்தி, சதாசிவம் என்னும் மூன்று தத்துவமுமே முதல்வனது இலய, போக, அதிகாரங் கட்கு முறையே இடம் ஆம் என்றும், ஏனைய — ஈசுரமும், சுத்த வித்தையும் — விஞ்ஞானகலர், பிரளயாகலரின் பசுத்துவம் நீங்கி, முத்தராய், அதிகார மல வாசனை மாத்திரம் உடைமையான், முதல்வன் ஏவல்வழி நின்று ஐந்தொழில் நடாத்துவோர் ஆகிய அநந்த தேவர் முதலியோர்க்கே இடம் என்றும் கூறும் எனக் கொள்க.

* * * * *

## பஞ்ச கலைகள்

இனிப், பஞ்ச கலைகள் ஆமாறு.

**1. நிவிர்த்தி :**

ஆன்மாக்களைப் பந்தத்தின் நின்றும் நிவிர்த்தி செய்யும் சிவசத்தி — நிவிர்த்தி எனப் பெயர் பெறும்.

அச் சத்திக்கு இடமாகிய சுத்தமாயையின் விருத்தியும் நிவிர்த்தி எனப் பெயர் பெறும். மேலும் இவ்வாறே கண்டுகொள்க.

**2. பிரதிட்டை :**

பந்தத்தின் நின்றும் நிவிர்த்தி பெற்ற ஆன்மாக்கள் மீள நோக்காத வண்ணம் பிரதிட்டை செய்யும் சிவசத்தி — பிரதிட்டை எனப் பெயர் பெறும்.

**3. வித்தை :**

அங்ஙனம் நிலைபெற்ற ஆன்மாக்கட்கு — அநுமான ஞானம், ஆகம ஞானம் அன்றி அநுபவ ஞானத்தைப் பயப்பிக்கும் சிவசத்தி — வித்தை எனப் பெயர்பெறும்.

**4. சாந்தி :**

அங்ஙனம் அநுபவ ஞானம் பெற்ற ஆன்மாக்கட்கு விருப்பு, வெறுப்புச், சங்கற்பம் முதலிய எல்லாத் துன்பங்களும் சாந்தமாகச் செய்யும் சிவசத்தி — சாந்தி எனப் பெயர் பெறும்.

**5. சாந்தியதீதை :**

அங்ஙனம் சாந்தமாய் நின்றதும் ஒழியச்செய்யும் சிவசத்தி – சாந்தியதீதை எனப் பெயர் பெறும்.

**முதல்வனும் அவ்வாறே :**

இங்ஙனம், சிவசத்தி ஒன்றே, காரிய வேறுபாட்டான், நிவிர்த்தி முதலிய பெயர்பெற்று ஐவகைப்பட்டவழி அவற்றிற்கு முதல்வனும், நிவிர்த்திபதி, பிரதிட்டாபதி, வித்தியாபதி, சாந்திபதி, சாந்தியதீதபதி எனப் பெயர்பெற்று ஐவகைப்பட்டு நிற்பன்.

**கலைகளின் பெயரில் சுத்த மாயா விருத்தியும் :**

அவற்றிற்கு இடம் ஆகிய சுத்த மாயா விருத்தியும் ஐவகைப் பட்டுத், தன்னை அதிட்டிக்கும் சத்திகளின் பெயர் பெற்று – நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என நின்று, தத்துவம் முதலிய ஐவகை அத்துவாக்களையும் உள்ளடக்கி, அவற்றிற்கு ஆதார மாய் நிற்கும்.

**வேறு வேறு பஞ்ச கலைகள் :**

இத் தன்மைய ஆகிய நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளும், சத்தி தத்துவத்தின், புவன ரூபம் ஆகிய- நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளும் வேறு ஆயினும், பெயர் ஒற்றுமை பற்றி ஒன்ருக வைத்து ஓதுப.

**கலைகளின் தியானப் பயன் :**

பிருதிவி தத்துவம் முதலியவற்றின் வைகுவோர் பஞ்ச கலைகளைப் பஞ்ச பூத ருபமாக வைத்துத் தியானம் செய்யின், அவை அவ்வப் பயன்களைப் பயப்பிக்கும் என்று உணர்க.

இங்ஙனம், சுத்த மாயையின் இயல்பும் அவற்றின் காரியங்களும் ஒருவாற்ருன் கூறிப்போந்தாம்.

## உ. அசுத்த மாயை

**இயல்பு :**

இனி, அசுத்த மாயையாவது – மெய்ப்பொருளாய், நித்தமாய், சடமாய், ஒன்ருய்க், கலைமுதல் நிலம் ஈருகிய அசுத்தப் பிரபஞ்சத்

திற்குக் காரணமாய், அவற்றின் வியாபகமாய், வினைக்குப் பற்றுக் கோட்டாய், ஆணவ மலம் போலச் சிறப்பு வகையான் அன்றிப், பொது வகையான் வினையில் கட்டுண்ட ஆன்மாக்களை மயக்குவதாய், அருவமாய் நிற்கும் என்பது, மேற் கூறியவாறு பற்றிக் கண்டு கொள்க.

* * * * *

**மாயை அருவம் :**

காரிய அவத்தையின் உளதாகிய உருவம் – காரணத்தின் தோன்றாது சூக்குமமாய் நிற்றல் பற்றியே மாயை அருவம் என்று ஓதப்பட்டது....

அருவமும் உருவமும் தம்முள் மாறுகோள் அன்மை....

காரிய அவத்தையின் உருவம் உடையதற்கு அன்றி அருவம் ஏலாது என்பது. ஆகலின் அன்றே, பதி முதலிய பொருளின் இயல்பு கூறும் இடத்து அவற்றை அருவம் என்றுதூஉம்,

*"நிலவும் அரு உரு இன்றி" (சிவப். 13)*

*"அசித்தரு வியாபகம்போல் வியாபகம் அருவம் இன்றாய்"*
*(சித்தி. சுபக். 210)*

எனவும் கூறியதூஉம் என்க.

* * * * *

இவ் அசுத்த மாயையின் காரியங்கள் ஆமாறு கூறுதும்.

## (ஆ) அசுத்த மாயா காரியம்

**ஐந்து காரியங்கள் :**

அநந்த தேவர் சத்தி கலக்கக் கலக்குண்ட அசுத்த மாயா தத்துவத்தின் நின்றும் – முறையே-காலமும், நியதியும், கலையும், கலையின் வித்தையும், வித்தையின் அராகமும் தோன்றும்.

### 1. கால தத்துவம்

**கலை முதலியவற்றின் பின் காலமும் நியதியும் :**

அவற்றுள் கலை, வித்தை, அராகங்களால்–தொழிலும், அறிவும், இச்சையும் விளங்கிப், போக நுகர்ச்சிக்கண் சென்ற ஆன்மாக்

களுக்குக்–கணம், இலவம், துடி என்றல் தொடக்கத்தான் பல்வேறு வகைப்பட்டுப்–போக வரையறைப் படுத்துவது–கால தத்துவம்.

* * * * *

கலை முதலிய மூன்றும்–வினைமுதல் ஆகிய ஆன்மாக்களுக்குத்– – தொழில், அறிவு, இச்சைகளை விளக்கி நேரே உபகரிப்பன.... ஆகலான் ஆன்மாக்களுக்குத் – தொழில், அறிவு, இச்சை நிகழ்ந்தபின் அன்றிக் கன்மத்தோடு இயைபு கூடாமையின் – காலம், நியதிகளின் உபகாரம் அவற்றின் பின்னர்த்து ஆயிற்று என்க.

* * * * *

**கலைக்கு முன் காலம் :**

... காரிய மாத்திரைக்குக் காலம் காரணம் ஆகலின், கலை முதலியன தோன்றுதற்கும் காலம் வேண்டு(ம்) ...

* * * * *

**காலம் இரு வகை :**

... சுத்தப் பிரபஞ்சத்தில் சுத்த காலம் உண்டு என்பது மேலே கூறிப்போந்தாம். ஆகலின், அதுவே அசுத்த காலம் தோன்றுதற்கும், அநந்த தேவர் அசுத்த மாயையைக் கலக்குதற்கும், அதிகாரம் செய்தற்கும் காரணம் எனக் கொள்க.

... அசுத்த மாயையையின் காரியத்திற்குச் சுத்த காலம் காரணம் ஆகாமையின்–அசுத்த காலம் ஒருதலையான் வேண்டும்.....

...காலம் என்னும் சாதி ஒருமையான், அசுத்த காலம் மாத்திரைக் குச் சுத்த காலம் துணைக்காரணம் ஆதல் பொருந்தும் என்க.

* * * * *

**காலம் துணைக் காரணம் :**

... கால வரையறையின் அகப்பட்ட அநந்த தேவர் முதலியோர், நம்மனோரால் செய்யப்படும் காரியம் மாத்திரைக்கே காலம் காரணம் ஆதல் வேண்டுவது அன்றிக், கால வரையறையைக் கடந்து, காலத்தினையும் தோற்றித் தொழிற்படுத்தும் காலகாலன் ஆகிய முதல்வனால் செய்யப்படும் காரியத்திற்குக் காலம் வேண்டாமை யானும், காலவரையறையைக் கடந்த முதல்வன் தொழிற்பாட்டிற்குக் காலத்தான் செய்யக் கடவது ஒன்று இன்மையானும், ஆண்டு அம்

முதல்வனை—கலையித்திரி என்னும் சத்தியொடு கூடிக், காலத்தானமாய் நிற்பன். ஆகலின், ஏனைக் காரியம் மாத்திரைக்கே காலம் துணைக்காரணம்.

* * * * *

**கலைக்கு முன் நியதி :**

இனி, நியதி தத்துவத்தின் உபகாரமும், கலை முதலியவற்றின் தொழிற்பாட்டிற்குப் பின்னர்த்து ஆயினும், கலை முதலியன-தொழில், அறிவு, இச்சைகளை—வினைக்கு ஈடாக விளக்குதற்கும் நியதி வேண்டும் ஆகலின் காலத்தின் பின்னர்க் கலைக்கு முன்னுகவே நியதி தத்துவம் தோன்றியவாறு என்று அறிக.

**கால முன்னும் கலை முன்னும் :**

தோற்றம் முறைமைபற்றிக் காலம் முன் ஆயினும், தொழிற் பாட்டு முறைமைபற்றிக் கலை முன் ஆகலின்,

" கலையாதி மண் அந்தம் " ( சிவ. போ. 3 – 7 – 23 ) என வழங்கப்படும்.

* * * * *

**கலையின் ஆவன :**

" கலா தத்துவம் – காலமும், நியதியும் தனக்குத் துணைக்கருவி யாகக் கொண்டு, முதற்காரணமாய் நின்று—வித்தை, அராகம் முதலிய தத்துவங்கள் எல்லாவற்றையும் தன்பால்நின்றும் தோற்றுவிக்கும். " ( தத்துவப்பிரகாசம் )...

* * * * *

**முதற் காரணம் :**

விந்து, மோகினி, மூலப்பகுதி – கள், சூக்கும கலாதி, முக்குணம் ஒழித்து ஒழிந்தவற்றிற்கும் பரம்பரையான் முதற்காரணம்.

* * * * *

**வினையும் காலமும் :**

வினையும் காலம் துணையாகக் கொண்டு அன்றி உற்பத்திக்கு ஏது ஆகாது. ...

அல்லதூஉம், மாந்தளிர் முதலியன-இளவேனிற் காலம் முதலிய வற்றின் அன்றி உற்பத்தி ஆகாமையும், முல்லைப்பூ முதலியன - கார் காலம் முதலியவற்றின் அன்றி உற்பத்தி ஆகாமையும், நசித்தலும் அவ்வக் காலம் வந்துழி அன்றி நசியாமையும் காண்டும். காலம் இல்லை என்பார்க்கு-அவ்வக் காலம் இன்றியும், அவையவை உற்பத்தியாய், உற்பத்தியான பொழுதே எல்லாப் பொருளும் நாசம் எய்தவும் வேண்டும். அங்ஙனம் காணுமையானும், செய்த வினைக்குப் பயன் நீட்டித்து வருதலானும், ஒரு கணத்தில் தோன்றும், ஒரு கணத்தில் அழியும் என்று வழங்கப்படுதலானும், இன்னோர் அன்னவற்றிற்குக் காரணம் ஆகிய காலம் உண்டு - என்பது தெற்றென உணர்க.

* * * * *

## முன்னும் பின்னும் :

இதனுனே, காலம் பற்றிய முன், பின் என்னும் வழக்கிற்கு வேருகிய, இடம் பற்றிய முன், பின் என்னும் வழக்கிற்கு - வேறு காரணம் இன்மையின், அதற்குக் காரணமாய்த், திக்கு என்று ஒரு தத்துவம் உண்டு என்பதூஉம் மறுக்கப்பட்டது. நிலம், ஆகாயம் முதலியவற்றின் ஏகதேசமே அங்ஙனம் வழங்குதற்கு ஏது ஆகலான் - என்க.

ஓர் இடம்தானே - ஒன்றை நோக்கி முன் எனவும், ஒன்றை நோக்கிப் பின் எனவும், ஒன்றை நோக்கிக் கிழக்கு எனவும், ஒன்றை நோக்கி மேற்கு எனவும், ஒன்றை நோக்கி வடக்கு எனவும், ஒன்றை நோக்கித் தெற்கு எனவும் வழங்கப்பட்டுப் பயன்தந்து, திக்கு எனப் பெயர் பெற்று நிற்கும் ஆகலின், திக்கு என்பது வேறு பொருள் அன்மை உணர்க.

* * * * *

## காலம் பல :

... பல பொருளின்கண் நிகழ்தல் பற்றிக் காலம் பல ஆதல் இல்லை. ஆயினும்,

ஒரோவொரு பொருளின்கண்ணே மற்றொன்றை நோக் காமையே முக்காலமும் நிகழ்தல்பற்றிப் பல எனத் துணியப்படும்...,

* * * * *

காலம் ஒன்று ஆயின், நடத்தல் முதலிய தொழில்களும்-இறப்பு, நிகழ்வு முதலியவற்றான் வேறுபடுதல் இன்றி, ஒன்றே ஆதல்

வேண்டும். அவ்வாறு அன்றி, இறப்பு, நிகழ்வு முதலியனவாய் நிகழும் தொழிற் பாகுபாட்டிற்குக் காரணம், காலத்தினது பாகுபாடே ஆகலின், காலம் பல ஆதல் அறிக.

* * * * *

... நடத்தல் தொழில் இயற்கையான் ஒன்றே ஆகலின், அது பலவாய்வேறுபடுதல் செயற்கையான் அன்றி ஆகாது என்க. ...

* * * * *

... ஞாயிற்றின் செலவு முதலியனவும் தொழிலின் வேறு அன்மை யான் இறப்பு, நிகழ்வு முதலிய தொழிற்பாகுபாடுகள் எல்லாம் காலப் பாகுபாட்டான் அன்றி நிகழாமையானும், ...

* * * * *

ஞாயிற்றின் செலவு முதலியவற்றைக் குறியாது, ஒரு குடம் உடைந்தது, உடையாநின்றது, உடையும் – என – அறியவும், வாங்கவும் காண்டும் ஆகலானும்,

இங்ஙனம் உணர்தற்கும் வழங்குதற்கும் ஞாயிற்றின் செலவு முதலியன ஏது அன்மையானும்,

நாழிகை கழிந்தது, நாள் கழிந்தது, திங்கள் கழிந்தது என்று – உணர்தலும், வழங்கலும் ஞாயிற்றின் செலவு முதலியவற்றைக் குறித்து அன்றி உளஆகாமையும், அங்ஙனம் உணர்தற்கும் வழங்குதற்கும் ஞாயிற்றின் செலவு முதலியனவே ஏது ஆதலும் காண்டும் ஆகலானும்,

நாழிகை, நாள், பக்கம், திங்கள், பருவம், அயனம், ஆண்டு – என்றல் தொடக்கத்துக் காலப் பாகுபாடு மாத்திரையே – ஞாயிற்றின் செலவு முதலியவற்றான் ஆய செயற்கை ஆவது அன்றி – இறப்பு, நிகழ்வு, எதிர்வு, கணம், இலவம் – என்றல் தொடக்கத்துக் காலப் பாகுபாடுகள் - ஞாயிற்றின் செலவு முதலியவற்றான் ஆகிய செயற்கை அல்ல ஆகலான்,

இயற்கையான் இறப்பு, நிகழ்வு என்றல் தொடக்கத்துப் பலவேறு வகைப்படும் காலம் – ஒன்று ஆமாறு ( இல்லை ) ...

* * * * *

... தன்மம் முதலிய பாவங்கள் ஒன்றற்கு ஒன்று மாறுபட்டன அல்ல. அவை எல்லாம் புத்தியின் காரியம் ஆகிய ஞான விசேடங்

களே ஆம். ஆண்டு அஞ்ஞானம் என்றது-ஞானம் இன்மை என்னும் பொருட்டு அன்று. திரிவு ஆகிய ஞானம் என்னும் பொருட்டேயாம்.

சாத்துவிகமும் தாமதமும் தம்முள் மாறுபட்டன அல்ல. உள்ளபடி உணர்விப்பது சாத்துவிகம், வேறுபட உணர்விப்பது தாமதம். உணர்வித்தல் விசேடமே இரண்டற்கும் ஆகலின் மாறுபாடு இன்மை உணர்க.

* * * * *

... ஒருவன்தானே தந்தையை நோக்கி மகனும், மகனை நோக்கித் தந்தையும் ஆதலும், நெடியனை நோக்கிக் குறியனும், குறியனை நோக்கி நெடியனும் ஆதலும்-போலப், பலவேறு வகைப்பட்ட பொருள்களை நோக்கிப் பலவேறு வகைப்பட வழங்கும் இறப்பு முதலியன மாறுபட்ட தன்மைய அல்ல ஆகலின், அவற்றை நோக்கிக் காலம் ஒன்றே ஆயினும், ஒரு குடத்தின் கண்ண ஆகிய இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பன மாறுபட்ட தன்மைய ஆதல் காட்சிப் புலன் ஆகலின், அவற்றை நோக்கிக் காலம் பல ஆதல் சாலும் என்க.

இதனானே - இறப்பு, நிகழ்வு முதலிய வேறுபாட்டால் காலம் பலவேறு வகைப்படும் என்பது பெறவே -

**காலம் அநித்தம், ஏக தேசம் :**

தம்முள் பலவுமாய்ச் சடமும் ஆகலின் தோன்றி நின்று அழியும் அநித்தமே என்பதூஉம், அநித்தப் பொருள் ஆகலின் - ஏக தேசமே என்பதூஉம் தாமே போதரும் என்று உணர்க.

* * * * *

**நித்தம் ஆவது :**

... காலவரையறையின் அகப்படாது நிற்பதே நித்தப்பொருள் எனக் கொள்க.

இங்ஙனம் ஆகலான், காலம் நித்தம் ஆகாமைபற்றி நித்தப் பொருள் உண்மைக்கு இழுக்கு இன்மையும் அறிக.

* * * * *

**முக்கால உண்மை :**

... சூக்கும நிகழ்காலம் அறிவிற்கு விடயம் ஆகாது ஆயினும், தூலநிகழ்காலம் அறிவிற்கு விடயம் ஆம். ஆகலின், அதுபற்றி, முக்காலமும் உள - எனக் கொள்க.

## தூல நிகழ்காலம்

... சற்காரிய வாதத்தின் – முதற் காரணமும், காரியமும் வேறு அன்மை மேற் கூறிப் போந்தாம். ஆகலின்,

இறந்த காலத்தின் மட்பிண்ட வடிவிற்றாயும், எதிர் காலத்தின் ஓட்டு வடிவிற்றாயும் நிற்கும் குடம் – அவ் இரண்டு காலத்திற்கும் இடையே அன்றிப், புனல் முகத்தல் முதலிய காரியத்திற்கு உரித்து ஆகாமையானும், ஏனை இரண்டு காலத்தினும் மறைந்து நின்று, இடைப்பட்ட காலத்தின் குடவடிவம் வெளிப்படக் காண்டலானும், இறந்த காலத்திற்கும் எதிர் காலத்திற்கும் இடையே, புனல் முகத்தல் முதலிய காரியத்திற்கு உரிந்தாய்க் – குடம் வெளிப்பட்டு நிற்றற்கு ஏதுவாகிய காலம் நிகழ்காலம் – எனக் கொள்க.

இதனால் போந்தது : குடம் முதலிய காரியப் பொருள்களின் உளவாய, மூன்று அவத்தை உண்மை காணப்படுதலின், அவற்றிற்கு ஏது ஆகிய காலம் மூன்று உள என்பது பெறப்படும் – என்று ஓதிய வாறு என்க. இங்ஙனம், கால தத்துவத்தின் இயல்பு ஒரு வகையான் தொகுத்துக் கூறப்பட்டது.

## ௨. நியதி தத்துவம்

**நியதி ஆவது :**

இனிக், கலை முதலிய மூன்றானும் தொழில், அறிவு, இச்சை விளங்கிப், போக நுகர்ச்சிக்கண் செல்லும் ஆன்மாக்கள் உயர்ந்த போகத்தின் விழைவும், இழிந்த போகத்தின் வெறுப்பும் உடையர் அன்றே. அதனால், பிறரான் ஈட்டப்படும் நல்வினைப் பயனைக் கவரவும், தம்பால் ஈட்டப்படும் தீவினைப் பயனை நீக்கவும் எண்ணுதல் உடைமையின், அங்ஙனம் ஆக ஒட்டாது அவரவரான் ஈட்டப்படும் வினையின் பயனை அவரவரே நுகருமாறு அரசர் ஆணைபோல் நியமித்து நிறுத்துவது நியதி தத்துவம் என்க.

நியதி, பால், ஊழ், தெய்வம், விதி – என்பன ஒரு பொருட் கிளவி.

* * * * *

**நியதி உண்மை :**

புதல்வனுக்கும் தந்தைக்கும் இயைபு உண்மையின், தந்தையை நோக்கிப் புதல்வன் செய்யும் வினையின் பயன் தந்தைக்கும், புதல்வனை நோக்கித் தந்தை செய்யும் வினையின் பயன் புதல்வனுக்கும் ஆயின.

மள்ளர் – ஏவல்வழி நின்று வினைசெய்து, தம் தொழிற்கு ஏய்ந்த கூலி பெற்றொழிதலின், உழவு முதலிய வினையான் வரும் பயன் – ஏவும் வினைமுதல் ஆகிய நிலம் உடையானுக்கும்,

இருத்துவிக்குக்களும் – ஏவல்வழி நின்று வினைசெய்து, தம் தொழிற்குத் தக்க தக்கணை பெற்றொழிதலின், வேள்வி வினையான் வரும் பயன் – ஏவும் வினைமுதல் ஆகிய இயமானனுக்கும் - ஆயின.

ஆகலான், அவ்வாறு யாதானும் ஓர் இயைபு இன்றி, ஒருவர் செய்த வினைப்பயன் ஒருவர்க்கு ஆதல் இல்லை. ஆகலான், நியமத்திற்கு இழுக்கு இன்மையின், அதுபற்றி நியதி தத்துவம் உண்டு எனக் கொள்க.

ஒருபால் கோடாது, நடுநின்று செங்கோல் செலுத்தும் அரசன் ஆணை இல்வழி, எளியோர் பொருளை வலியோர் கவர்ந்துகொள்வது போல, நியதி தத்துவம் இல்வழி, ஒருவர் செய்த வினைப்பயன் மற்றொருவர் கவர்வதாய் முடியும். ஆகலின், நியதி தத்துவம் உண்டு என்பது தெற்றென உணர்க.

... இருவினை - போகத்தைப் பயத்தல் மாத்திரையே அன்றி, அப்போகம் கருத்தாவைச் சென்று அடைவிக்குமாறு செய்யமாட்டா, அடைவிக்கும் எனின், ஒரு கருவியும் வேண்டாது, உடம்பு முதலியனவும் வேண்டாது, இருவினை – தாமே போகம் நுகர்வித்தல் வேண்டும். அவை எல்லாம் – இருவினைகள் போகம் நுகர்வித்தற்குத் துணைக்கருவி ஆதல் வேண்டும் எனின், அவ்வாறே நியதி தத்துவமும் துணைக்கருவி ஆதல் வேண்டும். ஆகலான், இருவினை – தாமே நியமிக்க மாட்டாமை அறிக.

... முதல்வனது சத்தி அவ்வக் கருவிகளை முன்னிட்டு அவ்வக் காரியங்களைச் செய்வது அன்றித் தானே முன்னின்று செய்யாது, செய்யும் ஆயின், பிற காரணங்கள் இன்றியே வீடு பெறுதல் வேண்டும். அஃது இன்மையான், முதல்வனது சத்தி – கருவிகளை முன்னிட்டே காரியம் நடாத்துவது ஆகலின், அது போகத்தை நியமித்து நிறுத்துதற்குக் கருவி – நியதி தத்துவம் எனக் கொள்க.

## கலா தத்துவம்

**கலை ஆவது :**

இனிக், கலா தத்துவம் ஆவது -

மூல மலத்தின் மறைப்புண்டு, சூனியம்போல் நின்ற ஆன்மாக்களுக்குப், போக நுகர்ச்சியின் பொருட்டு, மல சத்தியின் சிறிதே நீக்கி, ஆன்மாக்களுக்குக் கிரியா சத்தியை விளக்குவது.

**பெயர்க் காரணம் :**

கலித்தல்: நீக்குதலும் செலுத்துதலும் ஆகலின், மலத்தை நீக்குதலான் கலை எனப் பெயர் ஆயிற்று.

**மல நீக்கம் :**

மலம் வியாபகம் ஆகலின், அதனை நீக்குதல் ஆவது—நெருப்பினது சுடுதல் சத்தியை நிகழ ஒட்டாது தடுக்கும் குளிகை போல, மலத்தினது மறைத்தல் சத்தியை, ஆன்மாவின் கிரியா சத்தியின்கண் நிகழ ஒட்டாது தடுத்து நிற்றலாம்.

சிறிதே நீக்குதல் ஆவது - வினைக்கு ஈடாகப், புத்தி தத்துவத்தின் வியாபாரத்திற்கு யாது யாது விடயம் ஆம்- அவ்வவ் விடயத்தின் நிகழும் மறைத்தல் சத்தி மாத்திரையே நீக்குதல் – எனக் கொள்க.

**கலையின் இன்றியமையாமை :**

... புத்தி தத்துவம் சடம் ஆகலின், சேதனன் ஆகிய ஆன்மாவால் அன்றித் தொழிற்படாமையான், அதனை, மலத்தின் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாத் தொழிற்படுத்துதற்குக், கருவி இன்றியமையாமையின், ஆன்மாவின் கிரியா சத்தியை விளக்கிப், புத்தி தத்துவத்தின் செலுத்துவது ஆகிய கலை, ஒருதலையான் வேண்டப்படும் என்க.

உடம்புபோல், அந்தக்கரணம் முதலியனவும்— ஆன்மா அதிட்டித்து அன்றித் தொழிற்படாமையின் | முதல்வனது சத்தி சேதனம் ஆகலின் அது புத்தி தத்துவத்தைத் தொழிற்படுத்தும் ... என்னும்.

அந் நியமம் இல்லையாயின், குயவன் முதலியோர் உடம்பினும், அவர் அதிட்டானம் இன்றி, முதல்வன் அதிட்டித்தல் மாத்திரையானே குடம் முதலியன உளவாதல் வேண்டும் என்று ஒழிக.

**கலையின் தொழிற்பாடு :**

... முதல்வனது சத்தியான் அதிட்டிக்கப்படும் சுத்த தத்துவங்களே கலை முதலியவற்றைத் தொழிற்படுத்தும் பிரேரக கருவி என்று உணர்க.

....பசுத்துவம் உடைய ஆன்மாக்களுக்குச், சுத்த தத்துவம் கருவி ஆகாமையான் | ஆன்மாக்கள் – புத்தி தத்துவத்தைத் தொழிற்படுத்துதற்குச், சுத்த தத்துவமே கருவி ஆதல் அமையும் என்றல் (ஆகாது). ... வித்தை முதலியவற்றிற்கும் இவ்வுரையை உய்த்துரைக்க.

**வினைமுதல் காரகம் :**

இத்தன்மைத்து ஆகிய கலை – கருவிக் காரகம் ஆயினும், ஆன்மாக்கள் வினைமுதல் ஆதற்கு உரிய கிரியா சத்தியை விளக்கிப், போக நுகர்ச்சிக்கண், வேறுஇன்றி உடனாய் நிற்றலின், வினைமுதல் காரகம் என்று உரைக்கப்படும் என்க.

## வித்தியா தத்துவம்

**வித்தியா தத்துவம் ஆவது :**

இனிக், கலையால் கிரியா சத்தி விளங்கி, வினைமுதல் ஆதலை எய்தி நின்ற ஆன்மாக்களுக்குக், கலையின்நின்றும் தோன்றி, ஞானசத்தியை விளக்கி, அதனால் அதிட்டிக்கப்பட்டுப், புறத்தின்கண் விடயம் ஆகிய குடம் முதலியவற்றைச், சவிகற்பக் காட்சியான் நிச்சயிக்கும் புத்தி தத்துவம் ஆகிய அகத்தின்கண், விடயத்தை அறியும் தன்வேதனைக் காட்சி அறிவிற்கும்,

புத்தி தத்துவத்தொடு கூடாமையான், புறப்பொருளை விகற்பம் இன்றி அறிவதாகிய நிருவிகற்பக் காட்சி அறிவிற்கும்,

மனம், புத்தி, அகங்காரங்களின் தொழிற்பாடு ஆகிய-சங்கற்பம், நிச்சயம், அபிமானம் என்பனவற்றை அறியும் அறிவிற்கும் – கருவியாய் நிற்பது வித்தியா தத்துவம் என்று உணர்க.

**வித்தையின் இன்றியமையாமை :**

... குருடு சிறிது நீங்கியவழிக், கண்ஒளி சிறிது விளங்கினும் திகைப்புற்று நிற்கும் அன்றிக், குருடு நீங்கிய பொழுதே விடயங்

களைப் பகுத்துக்காண மாட்டாது. அது போலக், கலையான் மல சத்தி நீங்கியவழி, ஞான சத்தி விளங்கினும், புத்தி தத்துவத்தைப் பற்றி, விடயத்தைப் பகுத்து உணர மாட்டாது, திகைப்புற்று நிற்கும். அத் திகைப்பு நீக்குதற்குக், கலையின் நின்றும் தோன்றிய வித்தையே கருவி, ஆகலின், அஃது ஒருதலையான் வேண்டப்படும் என்க.

...ஒரு தொழிற்கு அமைந்த கருவி மற்றொரு தொழிற்கு ஆகாமையின் | மலசத்தியை நீக்கிய கலையே திகைப்பினை நீக்குதற்கும் .. அமையாது.

...நீக்குதல் இரண்டும் மறுதலைத் தொழில் அன்மை பான் மறுதலைப் படாத இரண்டு தொழில் ஒரு கருவியான் அமைதல் உலகத்தில் காண்டும்.. ஆயினும், ஒரு கருவி இரண்டு தொழில் ஒருங்கு செய்தல் கூடாமையின், ஈண்டுத் திகைப்பு நீக்கத்தினும் மல நீக்கம் ஒருங்கு நிகழவேண்டுதலின்,

**கலையும் வித்தையும் :**

மலசத்தியை நீக்குவது ஆகிய கலையே – தனது ஏகதேசத்தின் வித்தையாய்ப் பரிணமித்துத், திகைப்பினை நீக்கிப், புத்தி தத்துவத்தின் கோசரம் ஆன விடயத்தை அறிதற்குக், கருவியாய் நிற்கும் எனக் கொள்க.

- அற்று ஆகலின் அன்றே, வித்தை – மாயையின் தோன்றும் என்னது, கலையின் தோன்றும் என்றதூஉம் என்க.

**உற்பத்தி முறை :**

இவ்வாறே ஏனைத் தத்துவங்களும், தம்முள் காரண காரியங்களாய், ஒன்றின் ஒன்று தோன்றும் – என்னும் உற்பத்திமுறை எல்லாம்–ஆகம அளவை மாத்திரையான் அன்றி, வழியளவையானும் உய்த்துஉணர்ந்துகொள்க. ...

**வித்தை செய்வது :**

.. வாயிற் காட்சி – மானதக் காட்சிக்கு வாயிலும், அந்தக் கரணங்கள் – கருவியும், – சந்தனம், மாலை முதலிய புறப்பொருள்கள் – விடயமும் ஆம்.

அவற்றின் பின் நிகழும் தன்வேதனைக் காட்சி அறிவிற்கு, சந்தனம், மாலை முதலிய புறப்பொருள் – விடயம் ஆகா. என்னை,

சந்தனம், மாலை முதலியன – போக்கியத்திற்கு ஏது ஆதல் அன்றிப், போக்கியம் அன்மையின், தன்வேதனைக்காட்சி அறிவிற்குப் போக்கியம் மாத்திரையே விடயம் ஆகலின்.

மற்று என்னையோ அதற்கு விடயம் ஆவது எனின் – சந்தனம், மாலை முதலியவற்றின் பற்றி, அவையவையாய்ப் பரிணமித்த, போதம் ஆகிய புத்தி தத்துவமே – தன்வேதனைக் காட்சி உணர்விற்கு விடயம் ஆம் என்க. அதுவே இன்பத் துன்ப வடிவு ஆகிய போக்கியம் ஆகலான் ...

இங்ஙனம் ஆகலின், கேவலமாய் நின்ற புத்தி தத்துவம்–சந்தனம், மாலை முதலியவற்றின் பற்றி, அவையவையாய்ப் பரிணமித்து நின்று, ஆன்மாவின் ஞான சத்திக்கு விடயம் ஆம் ஆகலின், அதனை விடயம் ஆக்குதற்குக் கருவி – வித்தை என்னும் தத்துவம் என்று உணர்க.

சிவப்பிரகாசத்தில்,

"வாயில்களின் பயனைப் புத்தி தர, வித்தை - இடை நின்று அறிவை உயிர்க்குப் பொருந்தியிடும் வகை புணரும்" (சிவப். 39) என்றதும் அப் பொருட்டு.

... இயல்பானே நிரதிசய இன்பத்தினை நுகர்வது ஆகிய ஆன்மாவின், ஞான சத்திக்கு, 'யான் இன்பம் உற்றேன், துன்பம் உற்றேன், என்று – இன்பத் துன்பம் முதலிய ஞானங்களை அறிதல் – செயற்கையான் அன்றி ஏலாமையின், ஞான சத்தி கருவி என்பார்க்கும் – வித்தையொடு கூடிக் கருவி ஆம் என்றல் வேண்டும். ஆகலின், ஒருதலையான் வேண்டப்படும் வித்தையே ஆண்டுக் கருவி எனக் கொள்க.

... எதிரே காணப்படுவது ஒரு பொருளைப்-பெயர், சாதி முதலியவற்றுன் நிச்சயித்து அறிவதாகிய சவிகற்பக் காட்சி, பொதுமையான் கண்டறிவதாகிய – நிருவிகற்பக் காட்சி நிகழ்ந்த பின் அன்றி நிகழாமையான், அத்தன்மைத்து ஆகிய நிருவிகற்பக் காட்சி அறிவு ஒன்று உண்டு என்பது பெற்றும்.

பெறவே, அவ் அறிவு நிகழ்ச்சிக்குக், கருவி வேண்டும். கண், செவி முதலிய வாயில்களே அதற்குக் கருவி ஆயினும், வாயில்கள் – ஆன்மா அதிட்டித்தால் அன்றித் தொழிற்பட மாட்டாமையின், நிருவிகற்பக் காட்சியின்கண், ஆன்மா வாயில்களை அதிட்டித்தற்குக் கருவியாய் நிற்பது வித்தை எனக் கொள்க.

**ஆன்மாவிற்கு உணர்வின் கருவி வித்தையே :**

... புத்தி நிச்சயிப்பது ஆகலின், நிருவிகற்பமும் சவிகற்பமாய் முடியும் ஆகலின் |

சவிகற்பக் காட்சியின் போல, நிருவிகற்பக் காட்சியினும், புத்தியே | கருவியர்காது .. புத்தி தத்துவம் கூடாமையானும் கூடுத லானும் அன்றே நிருவிகற்பம், சவிகற்பம் என்று இருவகையான் அறிவு நிகழ்ந்ததூஉம் ...

.. புத்தி, ஆங்காரம், மனங்களின் தொழிற்பாடாய் நிகழ்ந்த – நிச்சயம், அபிமானம், சங்கற்பம் என்பன ஆன்மாவிற்கு விடயம் ஆதற்கும் – வித்தையே கருவி ... புத்தி முதலியன – தத்தம் கீழ்உள்ள வற்றை நோக்கிச் சித்து ஆயினும், மேல் உள்ளவற்றை நோக்கிச் சடம் – ஆகலின், அவை தத்தம் தொழிற்பாட்டு அளவின் அன்றி அதிகத்தின் செல்லமாட்டாமையான் ... | ஆண்டும் புத்தி முதலி யனவே கருவி எனக் கொள்ளாம்.

இங்ஙனம் ஆகலான், எவ்வகைப்பட்ட உணர்வும் ஆன்மாவின் சென்று விடயம் ஆதற்குக் கருவியாய் நிற்பது – வித்தை எனக் கொள்க.

## அராக தத்துவம்

**அராகம் ஆவது :**

இனி, வித்தையான் ஞான சத்தி விளங்கி, விடயங்களை அறியல் உறும் ஆன்மாவுக்கு, இச்சை நிகழ்ந்து அன்றிப் போக நுகர்ச்சி செல்லாமையின், வித்தையின் நின்றும் தோன்றி, ஆன்மாவின் இச்சா சத்தியை விளக்கிப், புத்தி குணங்களின்–அவைராக்கியம் எனப்படும் அராக நிகழ்ச்சிக்கு ஏதுவாய் நிற்பது – அராகதத்துவம்.

**வித்தையின் பரிணமம் :**

இச்சை ஆவது – ஞான விசேடம் ஆகலின், அதனை விளக்குவது ஆகிய அராக தத்துவம்-வித்தையின் பரிணமம் ஆதலே பொருத்தம் உடைத்து.

ஆகலானும்,

" விச்சையின் அராகம் தோன்றி " (சித்தி. சுபக். 146) என வழிநூல் ஆசிரியர் கூறுதலானும்,

பவுட்கரம் முதலியவற்றின் - அராகத்திற்குக் கலையின்நின்றும் தோற்றம் கூறியது -

" கலை, காலம், நியதியுடன் வித்தை, அராகம் " ஐந்தும் "மாயை தனில் ஆகும் " (சிவப். 26)

என்புழிப் போலப் பரம்பரையான் முதற்காரணம் ஆதல்பற்றி என்று அறிக.

**புத்தியின் அராகத்திற்கும் ஏது :**

...ஆன்மாவின் இச்சா சத்தி புத்தி தத்துவத்தை அதிட்டித்தபின் அன்றி, அதன் கண்ணது ஆகிய அராகம் தோன்றாது என்பது - மேல் கூறியவாற்றான் பெறப்படுதலின், அத் தன்மைத்து ஆகிய - புத்தியின் அராகம் - தன்னைத் தோற்றுவிப்பது ஆகிய ஆன்மாவின் இச்சா சத்தியை விளக்கும் என்றல் பொருந்தாமையின், அராக தத்துவமே- ஆன்மாவின் இச்சா சத்தியை விளக்கும் முகத்தான், புத்தியின் அராகத்திற்கும் ஏது ஆம்...

**புத்தியின் அராகம் ;**

... அராக தத்துவம் - ஆன்மாவின் இச்சா சத்தி, ஞான சத்தி போலப், பொதுமையான் விளங்குதற்கு ஏது ஆவது அன்றி, அவ்வவ் விடயந்தோறும் சிறப்பு வகையான் நிகழ்தற்கு ஏது ஆகாமையின், சிறப்பு வகையான் இச்சை நிகழாதவழி, எல்லா விடயங்களிலும்- ஒருங்கே இச்சை நிகழவும், ஒழியவும் வேண்டும். அஃது இன்மை யான், அராக தத்துவத்தான் பொது வகையான் நிகழ்ந்த இச்சை- சிறப்பு வகையான் நிகழ்தற்கு - ஏது ஆகிய - புத்தியின் அராகம் மிகையாதல் (இன்று).

... இச்சிப்பார் மாட்டு விசேடம் இல்வழி - எல்லாப் பொருளும் எல்லா உயிர்கட்கும், ஒப்பச், சுக ரூபமாய் நிற்றலின் திரியாமையின், எல்லாப் பொருள்களினும் வேட்கை ஒப்பச் சேறல் வேண்டும். அது கண்டிலம்.

அல்லதூஉம், அநுபவித்து ஒழிந்த பொருளினும் ஒழியாது வேட்கை சென்று, மீளவும் அதனையே அநுபவிக்க முயறல் வேண்டும். அவ்வாறு அன்றி, அநுபவித்த பொருளின் வேட்கை நீத்தோரையும் காண்டும்.

ஆகலான், சுகரூபம் ஆதல் வேட்கைக்குக் காரணம் என்றல் பொருந்தாது என்க.

**இருவகை அராகம் :**

... ஞான ரூபமும், வர்தனு ரூபமும் என்று அராகம் இருவகைப் படும்.

அவற்றுள், ஞான ரூபம் ஆகிய புத்தியின் அராகமே – விடயத்தைப் பற்றி நிகழும் ஆகலின், அது நீங்கிய வழி – அவ்விடயத்தின் வேட்கை நிகழாமையான், ஒழிதல் கூடும் ...... வர்தனு ரூபம் ஆகிய அராக தத்துவம் - உடனாய் நிற்பினும், சிறப்புக் காரணம் இல் வழிப் – பொதுக் காரணம் மாத்திரையான் காரியம் தோன்றுதல் கூடாமையான் ...

வாதனு ரூபம் ஆகிய அராகம் நீங்குர் ஆயின், மற்றொரு விடயத்தின் வேட்கை நிகழ்தல் இல்லையாய் முடியும். அஃது இன்மையான், அராக தத்துவம்–நீக்கம் இன்றி, ஆன்மாவின் உடனாய் நிற்கும் எனக் கொள்க.

அங்ஙனம், வாதனு ரூபமாய் நிற்கும் அராக தத்துவம் – முத்திக் காலத்தின் – தன் எல்லை அளவும் அத்துவ சுத்தி செய்யும் தீக்கையான் பற்று அறக் கழியும். கழியவே, விடயங்களின் பொதுமையான் நிகழும் விருப்பமும் நிகழாமையின், ஆண்டுச், சிவராகம் வெளிப்பட்டு, ஆன்மாவின் இச்சா சத்தியை முத்திக்கு ஏது ஆகிய சாதகங்களின் கோசரிப்பிக்கும் ...

**வெறுப்புத் தத்துவம் இன்மை :**

... ஆன்மாவின்கண்–இச்சாசத்தி போல வெறுப்புச் சத்தி ஒன்று இன்மையானும்,

விடயங்களின் நிகழும் வெறுப்பிற்குப், புத்தியின் கண்ணது ஆகிய வெறுப்பே காரணம் ஆதல் அமையும் ஆகலானும் |

அராக தத்துவம் போல, விடயங்களின் வெறுப்பு நிகழ்தற்கு ஏதுவாக, வெறுப்புத் தத்துவம் ஒன்று உண்டு எனக் கொள்ளாம்.

**அராக தத்துவமும் புத்தியின் அராகமும் :**

... புத்தியின் கண்ணது ஆகிய அராகம், புறப்பொருளை, 'இது சுகத்திற்கு ஏது, இது துக்கத்திற்கு ஏது' என விடயிக்கும் ஞானம்

நிகழ்ந்த பின் அன்றி நிகழாது. புறப்பொருளை அங்ஙனம் விடயிக்கும் ஞானமும் – புத்தியின் தொழிற்பாட்டான் அன்றி நிகழாது. புத்தியின் தொழிற்பாடும் – புத்தியின் கோசரிப்பது ஆகிய ஆன்மாவின் இச்சா சத்தி இன்றி நிகழாது. அவ் இச்சா சத்தியின் விளக்கமும் – அராக தத்துவத்தான் அன்றி நிகழாது.

இங்ஙனம் ஆகலான், புத்தியின் கோசரித்தற்குப், புத்தியின் கண்ணது ஆகிய அராகத்தின் வேறாய், ஆன்மாவின் இச்சா சத்தி உண்டு என்பதூஉம்,

இச்சா சத்தியின் கோசரித்த பின்னர்ப், புத்தியின் தொழிற் பாட்டான் புறப்பொருளை விடயிக்கும் ஞானம் நிகழ்ந்த பின்னுகை நிகழும் புத்தியின் அராகமும் அவ் இச்சா சத்தியே விளக்கும் என்பது கூடாமையின், அதனை விளக்குதற்கு அராக தத்துவம் உண்டு என்பதூஉம்,

புறப்பொருள் விடயத்தின், சிறப்பு வகையான் நிகழும் இச்சையை விளக்குதற்குப் – புத்தியின் அராகமும், அதன் மறுதலை ஆய வெறுப்பை விளக்குதற்குப் – புத்தியின் வெறுப்பும் உள என்பதூஉம் – ஒருதலையான் வேண்டப்படும்.

இவ்வாறு, புத்தியின் கண்ணது ஆகிய வெறுப்பின் வேறாய், ஆன்மாவின் வெறுப்புச் சத்தி உண்டு என்பதற்குப் பிரமாணம் இன்மையின், வெறுப்புத் தத்துவம் என்பது ஒன்று இல்லை என்று உணர்க.

ஆன்மாவின் வெறுப்புச் சத்தி உண்டு என்பார்க்கும் – விடய வெறுப்பைச் சிறப்பு வகையான் விளக்குதற்குப், புத்தியின் வெறுப்பு ஒருதலையான் வேண்டப்படும். ஆகலின், இரண்டு கோடல் மிகை. ஆகலானும்,

புத்தியின் வெறுப்பு நிகழ்தற்குக் காரணம், 'இது துக்கத்திற்கு ஏது என்று அறியும் ஞானமே ஆகலானும்,

அஃது, இச்சாசத்தி கோசரித்த மாத்திரையானே, புத்தி தத்துவம் விடயத்திற் சென்று பற்றும் தொழிற்பாட்டான் நிகழும் ஆகலின், வேறு காரணம் வேண்டாமையானும்,

ஆன்மாவின் வெறுப்புச் சத்தி ஒன்று இல்லை என்பது தெற்றென உணர்க.

**வெறுப்பு அனுபவம் :**

...' யான் வெறுத்தேன் ' என்னும் அனுபவம் ஆன்மாவின் மாட்டு நிகழுமாறு.... 'யான் நிச்சயித்தேன்' 'யான் அபிமானித்தேன்' எனப், புத்தி முதலியவற்றின் தொழிற்பாடுகள் – ஆன்மாவின் கண்ண வாய் அனுபவம் ஆமாறு போல் - ஆம் எனக் கொள்க.

**பரிணமம் ஆமாறு :**

இத் தத்துவங்கள் ஒன்றொன்றாய்ப் பரிணமிப்பன ஆயின், பரிணமம் ஆவது – முன்நின்ற அவத்தையின் நீங்கி, வேறு ஓர் அவத்தை எய்துவது – ஆகலான், பால் தயிராய்ப் பரிணமித்த வழியும் தயிர் மோராய்ப் பரிணமித்த வழியும் – பால் எனவும், தயிர் எனவும் நின்று, தத்தம் பயனைத் தருமாறு இல்லையாயினாற் போல,

மாயையின் கலக்குண்ட பாகம் – காலம், நியதி, கலைகளாய்ப் பரிணமித்தவழி – அது கலக்குண்ட பாகமாய் நின்று, மயக்குதல் தொழிலைச் செய்யும் என்பதூஉம்,

கலை வித்தையாய்ப் பரிணமித்தவழிக் – கலையாகவும் நின்று கிரியா சத்தியை விளக்குதலும், பின்னர் மூலப்பகுதியைத் தோற்று வித்தலும் செய்யும் என்பதூஉம்,

வித்தை அராகமாய்ப் பரிணமித்தவழி – அது ஞானசத்தியை விளக்கும் என்பதூஉம் – அமையும்.

... ஈண்டுக் கூறியன எல்லாம் தத்தம் ஏகதேசத்தின் பரிணமம் ஆதல் அன்றிப், பால் தயிர் ஆனாற் போல முழுவதும் பரிணமம் ஆதல் இன்மையின், பரிணமம் ஆகாது நின்ற கூற்றானே – அவை தத்தம் காரியங்களைச் செய்தலும் அமையும் என்க.

ஏனை மூலப் பகுதி முதலியன பரிணமம் ஆமாறும், சுத்த மாயை யின் விருத்தி ஆமாறும் இவ்வாறே கண்டுகொள்க.

**பஞ்ச கஞ்சுகம் ஆமாறு :**

இவற்றுள், அராகம் முதலிய மூன்றும் – ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை விளக்கிப், போகம் நுகர்தற் பொருட்டுப், புத்தி தத்துவத்தின் செலுத்தியும்,

நியதி தத்துவம் – ' இதனையே நுகர்க ' எனப், போகத்தின் கண்ணே ஆன்மாவை நியமித்து நிறுத்தியும்,

கால தத்துவம் – ' இதனை, இத்துணைப் பொழுது மாத்திரையின் நுகர்க, எனப் போகத்தின்கண் வரையறுத்துச் செலுத்தியும், –

இவ்வாறு, இவ் ஐந்தும் – ஆன்மாவுக்கு உபகாரமாய், ஏனைக் கருவிகள் போல அவத்தைப்படுதற்கு ஏதுவாய், இடையிடையே கூடுதலும் நீங்குதலும் இன்றி, எக்காலத்தும் ஆன்மாவின் உடனுய்க், கஞ்சுகம் போலப் பந்தித்து நிற்றலின், இவை பஞ்ச கஞ்சுகம் என்று உபசரித்துக் கூறப்படும் என்க.

## புருட தத்துவம்

**புருடன் ஆவது :**

இனி, இங்ஙனம், கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் கூடிப், பொதுமையான் போத்திருத்துவம் எய்தி நின்ற ஆன்மாப் – பிரகிருதி மாயைப் போக நுகர்ச்சியின் உன்முகத்திற்கு ஏது ஆகிய – அவிச்சை முதலிய பஞ்சக் கிலேசம் என்னும் பும்ஸ்துவ மலம் உடையனுய்ப், புருட தத்துவம் என நிற்பன்.

## பஞ்சக் கிலேசம்

**பஞ்சக் கிலேசம் ஒரு மலம் :**

அநித்தத்தை நித்தம் என்றும், அசுத்தத்தைச் சுத்தம் என்றும், துன்பத்தை இன்பம் என்றும், தான் அல்லாத பொருளைத் தான் என்றும் – திரியக் காணும் உணர்வாகிய அவிச்சையும்,

அதுபற்றி, அவற்றை ' யான் ' என மதிக்கும் ஆங்காரமும்,

அதுபற்றி, ' எனக்கு இது வேண்டும் ' என்னும் அவாவும்,

அதுபற்றி, அப்பொருட்கண் செல்லும் ஆசையும்,

அதுபற்றி, அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமும் – என இவை (பஞ்சக்கிலேசம்).

இப் பஞ்சக் கிலேசமே பும்ஸ்துவ மலம் என்று ஓதப்படும்.

இவ் ஐந்தினையும் மூன்றுய் அடக்கிக்,

**மூன்றனுள் ஐந்து :**

"காமம், வெகுளி, மயக்கம் - இவை மூன்றன், நாமம் கெடக், கெடும் நோய்" (திருக்குறள் - 360) என்றார் செய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும்.

**சகலரே புருடன் :**

இவ் அவிச்சை முதலியன உடையோர் சகலரே ஆகலின், ஏனை விஞ்ஞானகலர், பிரளயாகலர், (ஆவார்) சகலர் போலப் புருட தத்துவம் எனப் பெயர் பெறுமாறு இல்லை என்க.

**ஆன்மாப் புருடன் ஆவது :**

ஆன்மாப் புருட தத்துவம் ஆதற்குக் காரணம் கலாதியே அமையும், அவிச்சையாதி வேண்டா என்பார்க்கு -

கலாதி உடைய பிரளயாகலரும் பிரகிருதி மாயைப் போகம் நுகர்வது ஆகிய புருட தத்துவம் ஆவான் செல்வர் - ஆகலானும்,

அவிச்சை ஆகியே அமையும், கலாதி வேண்டா என்பார்க்கு -

கலாதியான் கிரியை முதலிய விளங்கிப், பொது வகையான் போத்திருத்துவம் எய்தாதவழி, சிறப்பு வகையான் போத்திருத்துவம் எய்துதல் கூடாதாய் முடியும் - ஆகலானும்,

இவ் இருவகையும் கூடிய பொதுமையின், ஆன்மாப் - புருட தத்துவம் எனப் பெயர் பெற்றுப், பிரகிருதி மாயைப் போகம் நுகர் தற்கு உரியன் ஆவன் - என்பது.

அவிச்சை முதலிய ஐந்தும் - முன்னர்க் கூறப்படும் மூலப் பகுதி யின் உளவாயின என்று உணர்க.

**மூலப் பகுதியின் முன்னர்ப் புருடன் :**

...சங்கார முறைமையின், பஞ்சக்கிலேசம் ஆகிய பும்ஸ்துவமலம் நீங்கலே புருட தத்துவத்திற்குச் சுத்தி ஆகலின், அத் தன்மைத்து ஆகிய பஞ்சக் கிலேசம் நீங்கல் - மூலப் பகுதியைச் சுத்தி செய்த பின்னர்த்து ஆகலானும்,

புருட தத்துவத்தின் ஓதிய புவனங்கள் மூலப் பகுதியின் மேல் இடத்து உள ஆகலான், அவை சுத்திப்படுதலும் - மூலப் பகுதியின் உளவாகிய புவனங்களைச் சுத்தி செய்த பின்னர்த்து ஆகலானும்,

புருடன் - மூலப் பகுதியை அநுபவிக்கும் முதன்மை உடைமை யானும், |

மூலப் பகுதியின் உளவாகிய பும்ஸ்துவ மலம் உடைமைபற்றி, ஆன்மாப், புருட தத்துவம் என நிற்பத-மூலப் பகுதியின் பின்னர்த்து (ஆயினும்), அதன் முன்னுக அராக தத்துவத்தைச் சார வைத்து | எண்ணப்பட்டது என்று உணர்க.

* * * * *

**ஆன்மா - புருடன் - சித்தும் சடமும் :**

பஞ்ச கஞ்சுகமும் பஞ்சக் கிலேசமும் – பொதுவகையானும் சிறப்பு வகையானும் போத்திருத்துவத்திற்கு ஏது ஆம் என்பது – எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின் | புருட தத்துவம் என்பது ஆன்மாவின் வேருய்க், கலை முதலிய ஐந்தும் கூடிய பொதுமையின் தோன்றுவதாய்ப், போத்திருத்துவத்திற்குக் கருவியாய்ச், சடமாய் நிற்பது ஒன்று என்பர் (கருத்துப் பொருந்தாது).

ஆன்மா வியாபகம் ஆயினும், புருட தத்துவம் எனப் பெயர் பெறுதற்கு ஏது ஆகிய போத்திருத்துவம் – நீங்குதல் – மூலப் பகுதியின் சுத்திப்பின் ஆதல்பற்றி, மூலப் பகுதிக்கும் அராக தத்துவத்திற்கும் இடையே வைத்து எண்ணுதலும்,

புருடன் ஆதற்கு ஏதுவாய் விசேடித்து நிற்கும் தத்துவங்கள் சடம் ஆதல்பற்றி, அடுத்ததின் தன்மையாய் நிற்கும் புருட தத்து வத்தையும் சடம் என்று உபசரித்துக் கூறுதலும் – பொருந் துமாறு அறிக.

உண்மையான் சித்தும், உபசாரத்தான் சடமும் ஆம் என்பது பற்றி அன்றே,

"சித்து அசித்து ஆன்மா ஒன்று" (சித்தி. சுபக். 159) என வழி நூல் ஆசிரியர் ஓதியதூஉம் என்க.

**புருட தத்துவத்தின் புவனங்கள் :**

புருட தத்துவத்தின் புவனங்கள் உள என்பது – "கங்கையின் இடைச்சேரி" என்பது போல, ஆகு பெயராய்ப், புருட தத்து வத்தின் அணிமைக்கண் நின்ற பிரகிருதி தத்துவத்தின் உள - என்று பொருள் கோடற் பாற்று என்பது – பவுட்கரத்தின் வகுத்து ஓதியவாற்ருன் அறிக. இதனுனும், புருடன் என வேறு ஓர் தத்துவம்

இன்னை உணர்க, வேறு ஓர் தத்துவம் ஆயின், ஏனைய போலப் புருடதத்துவத்திற்கு ஓதிய புவனம் ஆண்டு உள என்றலே அமையும், ஆகுபெயரான் மற்றொரு தத்துவத்தின்கண் உள என்று ஓதல் வேண்டா ஆகலான் ...

**புருட சுத்தி :**

போத்திருத்துவம் நீங்குதலே புருடனுக்குச் சுத்தி ஆகலின், காலாக்கினி ருத்திர புவனம் முதல், கலையளவும், போத்திருத்துவம் உண்மையான், அத்துவ சோதனையின்- காலாக்கினி ருத்திரபுவன சுத்தி முதல் ... சீகண்ட ருத்திர புவன சுத்தி வரையில் சிறப்பு வகையான் நிகழும் போத்திருத்துவங்கள்—பற்றறக் கழிந்து, கலாதி சுத்திமுறையின் பொது வகையான் நிகழும் போத்திருத்துவமும் பற்றறக் கழியும் – என்று உணர்க. இக் கருத்தே பற்றி,

" மெய்வகைய கலாசுத்திதனின், இதற்கும் சுத்தி மேவியிடும் வகைதானும் விரும்பிய நூல் விளம்பும் " (சிவப். 41)

என்றார் புடைநூல் ஆசிரியரும் எனக் கொள்க.

போத்திருத்துவம் ஆவது போகம் நுகர்வோன் ஆதல் தன்மை.

## மூலப் பகுதி

**மூலப் பகுதி ஆவது :**

இனி, இங்ஙனம் கலை முதலிய பஞ்ச கஞ்சுகம் உடையனாய்ப், போக நுகர்ச்சிக்கண் சென்ற ஆன்மாவிற்குக், குணம் முதல் நிலம் ஈறாகிய போக்கியங்கள் – முறையே உளஆதற்கு ஏதுவாகக், கலையின் நின்றும் மூலப் பகுதி என்னும் தத்துவம் தோன்றிச், சீகண்ட ருத்திரர் சத்தி கலக்கக், கலக்குண்டு, தன்னின் நின்றும் குண தத்துவத்தைத் தோற்றுவிக்கும். அவிச்சை முதலிய பஞ்சக் கிலேசம் என்னும் பும்ஸ்துவ மல விளைவிற்கும் இதுவே காரணம் எனக் கொள்க.

**பெயர்கள் :**

போக்கிய ரூபமாய் நின்ற தத்துவப் பிரபஞ்சங்கட்கு எல்லாம் இது மூல காரணம் ஆதல்பற்றி மூலப்பகுதி என்றும், பிரகிருதி மாயை என்றும், பிரதானம் என்றும், மான் என்றும்; முக்குணங்களும்

வியத்தமாய் விளங்காது, மயில் அண்ட சலத்தின் – பஞ்ச வன்னம் போலச், சூக்குமம்ஆய் நின்ற அவத்தை உடைமைபற்றி–அவ்வியத்தம் என்றும் – வழங்கப்படும்.

**மூலப் பகுதியும் முக்குணமும் :**

... முக்குணங்களும் விளங்கித் தம்முள் சமமாய் நின்ற அவத்தையின், குண தத்துவம் ஆவது அல்லது மூலப் பகுதி ஆகாது எனவும், முக்குணங்களும் விளங்குதல் இன்றிச் சூக்குமம்ஆய் நின்ற அவத்தையே மூலப் பகுதி ஆம் எனவும், தெரிந்து உணர்ந்து கொள்க.

... காரியத்தின் சிறப்பு வகையான் நிகழும் குணங்கள் – காரணத்தின் பொது வகையான் நிகழ்ந்து அன்றி உள ஆகா–என்பது நியமம். ஆகலின், சத்தம் முதலிய குணம் சிறப்பு வகையான் நிகழும் பஞ்ச பூதங்கள், அவை பொதுவகையான் சூக்குமமாய் நிற்கும் பஞ்ச தன் மாத்திரைகளை இடையிட்டு அன்றிப், பூதாதி ஆங்காரத்தின் தோன்று மையும்,

பெயர், சாதி முதலிய உணர்வு – சிறப்பு வகையான் நிகழும் சவிகற்பக் காட்சி – அவை பொது வகையான் சூக்குமம் ஆய் நிகழும் நிருவிகற்பக் காட்சியை இடையிட்டு அன்றிப், போதத்தின் தோன்று மையும்,

"உரு எவையும் தெரித்துச்" சிறப்பு வகையான் நிகழும் மத்திமை வாக்கு – அவை பொதுவகையான் சூக்குமம் ஆய் நிகழும் பைசந்தியை இடையிட்டு அன்றிச் சூக்குமையின் தோன்றுமையும்,–

ஆகிய, இன்னோர் அன்னவை போலச், சுக துக்க மோக ரூபம் ஆய்ச் சிறப்பு வகையான் நிகழும் குண தத்துவமும், அவற்றை 'அடைவுபட உள் ஒடுக்கிச்" சூக்குமம்ஆய்ப் பொது வகையான் நிகழ்வது ஒன்றனை இடையிட்டு அன்றிக், கலையின் நின்றும் தோன்றுதல் கூடாமையான், அத் தன்மைத்து ஆகிய மூலப் பகுதி உண்டு என்பது – ஆகம அளவை மாத்திரையான் அன்றி, அருத்தா பத்தி அளவையானும் உணர்ந்து கொள்க.

**கலையின் நின்றே மூலப்பகுதி :**

மூலப் பகுதி கலையின் நின்றும் தோன்றியது என்னுது மாயை யின் நின்றே தோன்றியது என்றால், .. (அது) கலையுள் அடக்கம் இன்மையின், கலையான் விளங்கும் கிரியா சத்திக்கு நேரே போக்கியம்

ஆதல் இன்றிக், கால நியதிகள் போல, வேறு ஓர் ஆற்றான், ஆன்மாவிற்கு உபகாரம் ஆவதாய் முடியும். அது கூடாமையானும், வேவல்மாய் நிற்கும் கலையை நோக்க, முக்குணங்களை அடைவுபட ஒடுக்கி அவ்வியத்தமாய் நிற்கும் அவத்தை - தூலம் ஆகலானும், அத்தன்மைத்து ஆகிய மூலப் பகுதி - மாயேயம் ஆகிய கலையின் நின்றும் தோன்றுதலே பொருத்தம் உடைமை அறிக.

மூலப் பகுதி அவ்வியத்தமாய் நிற்பது ஆகலின், அதன்கண் கூறப்படும் புவனங்களும் குண தத்துவ மத்தகத்தின் உளவாம் எனக் கொள்க.

## குண தத்துவம்

**குணம் ஆவது :**

இனி, இங்ஙனம் அவ்வியத்தமாய் நின்ற மூலப் பகுதி – வியத்தம் ஆதற் பொருட்டு, ஒன்றாய் நின்ற பாலையும் நீரையும் பகுக்கும் ஓதிமம் போலச், சீகண்டருத்திரர் சத்தி கலக்கக், கலக்குண்டு, முக்குணமாய்ப் பகுப்புற்று விளங்கித், தம்முள் சமமாய்நின்ற அவத்தை-குணதத்துவம் எனப்படும்.

**குண தத்துவம் ஒன்று :**

குணங்கள் மூன்று ஆயினும், தொழிற்பாட்டின்கண், ஒருங்கு விரவிநின்று ஒரு காரியத்தைச் செய்தல் பற்றிக், குணதத்துவம் ஒன்று என வைத்து எண்ணப்படும் என உணர்க.

சாத்துவிகம் முதலிய மூன்றும் - ஆன்மாக்கள் தோறும் மிக்கும் குறைந்தும் விரவி, முறையே, சுக துக்க மோகங்கட்கு ஏதுவாய்ப், பிரகாசம் முதலிய விருத்திகளை உடையவாய் நிற்கும்.

குணதத்துவம் – மூலப் பகுதியின் விருத்தியே அன்றி, ஏனைய போலப் பரிணமம் அன்மையான், மூலப் பகுதியோடு ஒன்றாக வைத்து ஓதவும்படும் எனக் கொள்க.

**குணத்திற்கும் பிறவற்றிற்கும் வேறுபாடு :**

புத்தி தத்துவம் முதலியனவும் குணரூபமே ஆகலின், அவற்றோடு இவற்றிடை வேற்றுமை :-

.......முக்குணமும் விளங்குதல், இன்றித், தம்முள் சமம்ஆய் நின்ற அவத்தையின் – மூலப் பகுதியும்,

விளங்கித் தம்முள் சமமாய் நின்ற அவத்தையின் – குண தத்துவமும்,

அவை சமம் ஆகாது, தம்முள் மிக்கும் குறைந்தும் பரிணமித்து நின்ற அவத்தையின் - புத்தி தத்துவம் முதலியனவும் ஆம், ஆகலின்,

இவை – தம்முள் வேற்றுமை என்க.

* * * *

**சமநிலையில் குணதத்துவம் :**

........தம்தம் இயல்பின் சமமாய் நிற்பவற்றிற்கு அன்றித், தம்முள் மிகுதலும் குறைதலும் பெறப்படாமையான், அதுபற்றிச், சமமாய் நிற்கும் குணதத்துவம் ஒன்று உண்டு எனக் கொள்ளப்படும் என்க.

## புத்தி தத்துவம்

**புத்தி ஆவது :**

இனிக், கலை முதலியவற்றானும், பிரகிருதி குணங்களானும், பொது வகையானும் சிறப்பு வகையானும் போத்திருத்துவம் எய்தி நின்ற புருடனுக்குக், குணதத்துவத்தின் நின்றும் – சாத்துவிகத்தான் மிக்கும், ஏனை இரண்டு குணங்களான் குறைந்தும் பரிணமித்துத் தோன்றி, வித்தையின் பொதுமையான் விளங்கிய ஞான சத்தியை, அவ்வவ் விடயம் தோறும், சிறப்பு வகையான் விளக்கி, அவற்றைப் பெயர், சாதி முதலியவற்றான் நிச்சயிப்பிக்கும் கருவியாயும்,

அங்ஙனம் நிச்சயித்த பின்னர், அவ்வவ் விடய வடிவிற்றாய்ப் பரிணமித்துத் தோன்றும் ஞானமாய் நின்று, ஆன்மாவிற்குப் புலன் ஆய் அடுத்த போக்கியம் ஆயும்,

அங்ஙனம் ஆகலான், புருடனால் செய்யப்படும் இரு வினைப் பயன் ஆகிய புண்ணிய பாவங்கட்கு எல்லாம், சிறப்பு வகையான் பற்றுக்கோடு ஆயும்,

அவற்றான் உளவாகிய தன்மம் முதலிய பாவகம் எட்டும், அவற்றினான் ஆய சித்தி முதலிய பிரத்தியயங்கள் ஐம்பதும், அவற்றின் விரிவுகளும் – ஆகிய எல்லாவற்றிற்கும் இடம் ஆயும் நிற்பது புத்தி தத்துவம் என்று உணர்க.

நிச்சயித்தல் தொழில் — பிறிது ஒன்றான் பெறப்படாமையின், அருத்தாபத்தி அளவையான், இத்தன்மைத்து எல்லாம் உடைத்தாகிய புத்தி தத்துவம் ஒன்று உண்டு எனத் துணியப்படும்.

## நிச்சயித்தல் ஆவது :

...... ஆன்மா — அந்தக் கரணங்களோடு இயைபு இன்றி, உடனாய் நிற்கும் வித்தை மாத்திரையே கருவியாகக் கொண்டு, வாயில்களை அதிட்டித்தவழி, எதிரே தோன்றுவது ஓர் விடயத்தின், பொது வகையான், 'இஃது ஓர் பொருள்' என்று அறிதல் ஆகிய நிருவி கற்பக்காட்சி முற்பட நிகழும் அன்றே.

அதன் பின்னர், ஆன்மா மனத்தை அதிட்டிப்ப, மனம் ஆனது சித்தம்ஆய் நின்று, 'இஃது யாது ஆகற்பாற்று' என ஒன்றைத் தூக்கிச் சிந்தித்துப், பின்னர், 'இது குற்றி ஆகற் பாற்று', 'மகன் ஆகற்பாற்று' என ஒன்றைச் சங்கற்பித்தும், 'அஃது ஆமோ, அன்றோ, என ஐயுற்றும், நிச்சயித்தற்கு ஏது ஆகிய வேட்கையை விளைத்து நிற்கும்.

அதன்பின், ஆன்மா ஆங்காரத்தை அதிட்டிப்ப, ஆங்காரம் ஆனது 'குற்றி என்றுதல், மகன் என்றுதல் - ஒன்றை நிச்சயிப்பேன் யான், என்னும் அகந்தையை விளைத்து, நிச்சயித்தற்கண் முயலும் ஊக்கத்தை உண்டாக்கி, அதற்கு ஏதுவாகப் பிராண வாயுவையும் இயக்கி நிற்கும்.

அதன்பின், ஆன்மாப் புத்தியை அதிட்டிப்பப், புத்தியானது 'இவன் மகன்' 'இது குற்றி' 'இது குடம்' 'இஃது ஆடை' என அவ்வப்பொருள்களைப் — பெயர், சாதி முதலியனபற்றிச், சிறப்பு வகையான் துணிதல் ஆகிய சவிகற்பக் காட்சியே ஈண்டு நிச்சயித்தல் எனப்படும் என்க.

ஈண்டுக் கூறியவாற்றானே, வாயில் முதலியவற்றின் தொழிற்பாடு கட்குத் தம்முள் வேறுபாடும், அவை ஒன்றற்கு ஒன்று ஒரு தலையான் ஏது ஆமாறும் கண்டுகொள்க.

## புத்திக் காட்சியும் மானதக் காட்சியும் :

சவிகற்பக் காட்சி — புத்திக் காட்சியே ஆயினும், முதற்கண் மனத்தின் தொழிற்பாடு ஏதுவாக வைத்து முறையே வருதல்பற்றி, ஆகு பெயரான், மானதக் காட்சி எனப்படும்,

"புந்தியை மனம் அது என்றும், மனம் அது புந்தி என்றும் … வந்திடும்" என்று ஓதுதலின். (சித்தி. சுபக். 218)

* * * * *

**வாசனைக்குப் பற்றுக்கோடு புத்தி :**

… அநுபவித்த பொருளைப் பின் நினைத்தற்கு ஏது ஆகிய வாசனைக்குப் பற்றுக்கோடு ஆவது புத்தி தத்துவமே அன்றி ஆன்மா அன்று. …

**புத்தியில் ஞானம் உண்டாதல் :**

புத்தி தத்துவம் சடம் ஆயினும், சாத்துவிக குணத்தான் மேற்பட்டுத் தோன்றியது ஆகலின், சேதனப் பொருள் ஆகிய ஆன்மாவிற்கு எதிர் முகம் ஆயவழிக், கண்ணாடியின் நிழல் போல, அதன்கண் எதிர்விம்பம் ஆய், ஞானம் உண்டாதல் பொருந்தும். …

## புத்திகுண பாவங்கள்

இனிப், புத்தியின் குணங்கள் ஆகிய பாவகம் எட்டனுள் – தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் – என்னும் நான்கும் சாத்துவிக் குணத்தான் உள ஆவன.

அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் நான்கனுள் – அவைராக்கியம் ஒழித்து, ஒழிந்த மூன்றும் தாமத குணத்தான் உள ஆவன.

அவைராக்கியம் ஆகிய அராகம் ஒன்றும் – இராசத குணத்தான் உண்டாவது என்று அறிக.

மோகத்திற்கு ஏது ஆதல்பற்றி, ஐசுவரியமும் தாமத குணத்தான் ஆவது எனச், சில ஆகமங்களில் கூறப்படும்.

தன்மம் முதலியவற்றிற்குப் பொருள் - அறம், அறிவு, வெறுப்பு, செல்வம், பாவம், அறியாமை, விருப்பு, வறுமை என மொழி பெயர்த்துக் கூறிக் கண்டு கொள்க.

**தன்மம் – அறம் :**

அவற்றுள், தன்மம் ஆவது : இயமம், நியமம் என்று இரு வகைத்து. அவற்றுள் இயமம் : கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, பிரமசரியம், அகந்தூய்மை என்று ஐவகைப்படும்.

நியமம் : வெகுளாமை, வழிபாடு, புறம் தூய்மை, உவகை, செப்பம் என்று ஐவகைப்படும்.

இப் பத்தும்-வேள்வி முதலிய அறம் செய்வார்க்கு ஒருதலையான் வேண்டப்படும் அங்கம் என்று உணர்க. கண்ணோட்டம், அறிமடம், ஒப்புரவு, நட்பு, நடுவுநிலைமை முதலியன எல்லாம் இவற்றுள்ளே அடங்கும் ....

**ஞானம் :**

இனி, ஞானம் எண் வகைப்படும். அவற்றுள் உம்மையின் வாசனைபற்றி, முன்னொடு பின் மலைவு இன்றிப், பொருந்தும் ஆற்றான் பொருள்களை ஆராய்ச்சி செய்து ஊகித்து அறியும் ஞானம் ஒன்று.

ஆத்தியான்மிகம் முதலிய மூவகைத் துக்கத்தான் மடிவு வந்துழி நிகழ்வன ஆகிய ஞானம் மூன்று.

நட்டோர் கூறும் வாயுறை மொழியான் வரும் ஞானம் ஒன்று,

சாத்திரங்களைத் தானே ஓதி உணர்தலானும், ஆசிரியனை வழிபட்டு ஓதி உணர்தலானும் வரும் ஞானம் இரண்டு.

தானம் முதலிய நல்வினைகளான் வரும் ஞானம் ஒன்று.

ஆக ஞான வகை எட்டும் கண்டு கொள்க.

இங்ஙனம், ஞானம் எண் வகைப்படுதலின், அதனான் வரும் சித்தியும் எண் வகைப்படுத்து ஓதப்படும்.

சித்தி எனினும் முத்தி எனினும் ஒக்கும்....

**சித்தி எட்டு :**

அவை யாவன :

உலகாயதர் – பூதக் கூட்டரவு ஆகிய உடம்பே ஆன்மா என நிற்றலின், பூதங்களுக்கு மேல் உள்ள தத்துவங்களை அறியும் ஞானம் இன்மையின், அவர் - பூத உலகத்தின் முத்தியைப் பெறுவர். பிராண வாயுவை ஆன்மா என நிற்கும் கவுளரும் ஆண்டே முத்தியைப் பெறுவர்.

சோதிட நூலார் – நாள்மீன் உலகத்தின் சேறலே முத்தி என நிற்றலின், அவரும் பூத உலகத்தின் முத்தியைப் பெறுவர்.

மிருதி நூலார் – ஐம்பெரும் பூதத்திற்குக் காரணம் யாது– அதுவே பிரமம் என நிற்றலின், ஐம்பெரும் பூதத்திற்குக் காரணம் தன்மாத்திரையே ஆகலின், அதற்கு மேல் உள்ள தத்துவங்களை உணராமையான், அவர் தன்மாத்திரை உலகத்தின் முத்தியைப் பெறுவர்.

உலகாயதரில் ஒருசாரார் – இந்திரியமே ஆன்மா எனவும், சித்தமே ஆன்மா எனவும், மனமே ஆன்மா எனவும், ஆங்காரமே ஆன்மா எனவும் – நிற்றலின், அவர்–அவ்வவ் உலகத்தின் முத்தியைப் பெறுவர்.

புத்தர், நையாயிகர் முதலியோர் – முறையே புத்தி தத்துவத்தின் பரிணமம் ஆகிய ஞானமே ஆன்மா எனவும், ஆன்மாவின் குணம் எனவும் நிற்றலின், அவர் – புத்தி தத்துவ உலகத்தின் முத்தியைப் பெறுவர்

சமணர் – உண்டும் ஆம், இல்லையும் ஆம் என்றல் தொடக்கத்து எழு வகையான், அநேகாந்தம் பேசி நிற்றலின், மிக்கும் குறைந்தும் நிற்றல்பற்றி, அங்ஙனம் கூறுதலின், அதற்கு ஏற்புடையது குண தத்துவம் ஆகலின், அதனை ஆன்மா என மயங்கிக் கொண்டார் எனப் படுதலின், அவர் குண தத்துவ உலகத்தின் முத்தியைப் பெறுவர்.

பாஞ்சராத்திரிகள் – நிலம் முதலிய இருபத்து நான்கு தத்துவத் திற்கும் மேல்உள்ள பொருள் 'நாராயணன், என்பர். இருபத்து நான்கு தத்துவத்திற்கும் மேல் உள்ளது மூலப் பகுதியே ஆகலின், அதனை– மயக்கத்தான் நாராயணன் எனக் கொண்டார் – என்பது அன்றிப், பிறிது இன்மையின், அவர் மூலப் பகுதி உலகத்தின் முத்தியைப் பெறுவர்.

ஏகான்ம வாதிகள் – பொது வகையானும், சிறப்பு வகை யானும் போத்திருத்துவம் எய்தி நின்ற புருட தத்துவத்தின் முத்தியைப் பெறுவர்.

சாங்கியர் – பொது வகையான் போத்திருத்துவம் எய்தி நின்ற புருட தத்துவத்தின் முத்தியைப் பெறுவர், புருட தத்துவத்திற்கு மேல் உள்ள பொருள்களை அறியாமையான், என்க.

இவ்வாறே புறப்புறச் சமயத்தாரும், புறச் சமயத்தாரும் - அவ்வத் தத்துவங்களின் முத்தியைப் பெறுமாறு உய்த்து உணர்ந்து கொள்க. ...

அதுஅதுவே முத்தி எனவும், அதுஅதுவே சித்தாந்தம் எனவும் நிற்பார்க்கு – அவர் அறிந்த எல்லை அளவும் சேறல் கூடும் ஆகலின், அறியாத எல்லைக்கண் செல்ல மாட்டாமையின், அவ்வத் தத்து வங்கள் அவரவர்க்கு முத்தித் தானம் ஆயின என்க.

பூதமும், தன்மாத்திரையும், பொறியும், சித்தமும், மனமும், ஆங்காரமும், புத்தியும், குணமும், அவ்வியத்தமும், புருடனும் – எனப் புறப்புறச் சமயத்தாரும் புறச் சமயத்தாரும் எய்தும் சித்தித் தானம் பத்து ஆகலின், சித்திகளும் ஒரோ ஒன்று பப்பத்தாய் விரியான் எண்பது ஆயினவாறு காண்க.

* * * * *

... புத்தி தத்துவத்தின் பரிணமம் ஆகிய ஞானத்தான் எய்தும் சித்திகள் மாத்திரையே ஈண்டு எடுத்துக் கொண்டமையான். ...

**புருட தத்துவத்திற்கு மேலான முத்தித் தானங்கள் :**

... புருட தத்துவத்திற்கு மேலும் அராகம் முதல் மோகினி ஈறு ஆகிய தத்துவங்களும், சுத்தவித்தை முதல் சிவதத்துவம் ஈறு ஆகிய தத்துவங்களும், அதுஅதுவே முத்தி என நிற்கும் அகப்புறச் சமயத் தார்க்கும், அகச் சமயத்தார்க்கும்-முறையே முத்தித் தானம் ஆகலின், அவற்றையும் உடன் கூட்டி எண்ணித் தொகை கொள்ளாமை (அறிக).

குணரூபம் ஆகிய புத்தி தத்துவத்தின் தொழிற்பாடு – பிரகிருதி புருடனுக்கு மேல் செல்ல மாட்டாமையின், ஆண்டு எய்தும் சித்தி கட்குக் காரணம் – முறையான் எய்தும் பல வேறுவகைப்பட்ட சத்தி நிபாதமே ஆம் என உணர்க.

இங்ஙனம் ஆகலான், புத்தியின் குணம் ஆகிய ஞானத்தான் எய்தும் பிரத்தியயம் – சித்தி எனத் தொகையான் ஒன்றும், ஊகித்தல் முதலிய காரண வேறுபாடுபற்றி வகையான் எட்டும், பூதம் முதலிய தான வேறுபாடுபற்றி விரியான் எண்பதும் – ஆயவாறு கண்டு கொள்க.

**வைராக்கியம் – வெறுப்பு :**

இனி, வைராக்கியம் – காரண வேறுபாட்டால் பத்து வகைப் படும். அவை ஆவன. –

பிணி முதலியவற்றான் வருந்துவோரை நோக்கியவழி, 'எம் உடம்பும் இவ் இயல்பிற்று அன்றே. இதன் பொருட்டு – உண்டி

முதலியன தேடி வருந்துதலான் பயன் என்னை, என வரும் வெறுப்பு ஒன்று.

ஆத்தியான்மிகம் முதலிய மூவகைத் துக்கத்தான் வரும் வெறுப்பு மூன்று.

பொருளை ஈட்டலும், காத்தலும் - முதலியவற்றான் எய்தும் வருத்தத்தை நோக்கி வரும் வெறுப்பு ஒன்று.

நட்டார் முதலியோரை இழந்தவழி, அழுது, வருந்தி, 'இங்ஙனம் வருந்துதற்குக் காரணம் நட்புச் செய்தல் அன்றோ, என்று எண்ணுலான் வரும் வெறுப்பு ஒன்று,

காமுகன் - தன் மனையாள்மாட்டு வெறுப்பு நிகழ்தற்கு ஏது ஆயது ஒன்றனைக் கண்டுழி, அதனான் வரும் வெறுப்பு ஒன்று,

ஒரு நாளை உண்டி சுருங்கினும் வாட்டம் உறுவதாகிய இவ் உடம்பு எத்துணைக் காலம் ஓம்பினும் நிரம்புமாறு இல்லை என்று எண்ணுதலான் வரும் வெறுப்பு ஒன்று.

இழிந்தோர் பால் சென்று நின்று இரத்தல் முதலியவற்றிற்கு மனம் செல்லாமையான் வரும் வெறுப்பு ஒன்று.

இவற்றுள் ஒன்றானும் இன்றி உம்மைப் பிறப்பின் செய்த தவ விசேடத்தான் வரும் வெறுப்பு ஒன்று.

ஆக வைராக்கிய வகை பத்தும் கண்டு கொள்க. இன்னும் வெவ்வேறு காரணங்கள் எல்லாம் இவற்றுள்ளே அடங்கும்..

**துட்டி பத்தும் நூறும் :**

இப் பத்துவகை வைராக்கியத்தான் வரும் துட்டியும் அவற்றான் பத்து வகைப்படும்.

துட்டியாவது வெறுப்பு நிகழ்ந்தமையான் உடம்பு முதலியவற்றை ஓம்புதற் பொருட்டு வரும் கவலையின் நீங்கி மகிழ்ச்சி எய்துதல்.

இப் பத்து வகைத் துட்டியும் மேல் கூறிய பூதம் முதலிய முத்தித் தானம் பத்திற்கும் ஏது ஆதல்பற்றிம், ஒரோ ஒன்றும் பப்பத்தாய், விரியான் நூறு ஆம் எனக் கொள்க.

**ஐசுவரியம் - செல்வம் :**

இனி, ஐசுவரியம் - அணிமா, மகிமா முதல் எட்டு வகைப்படும்.

அவற்றுள், அணுவினும் அதிசூக்கும வடிவு உற்று நிற்றல் — அணிமா என்னும் செல்வம்.

மேருவினும் மிகப் பெரிய வடிவு உற்று நிற்றல் — மகிமா என்னும் செல்வம்.

சேறு முதலியவற்றின் இயங்கினும், அழுந்துதல் இன்றிக், காற்றினும் கடு நடைத்தாய், மெல்லிய வடிவு உற்று நிற்றல் — இலகிமா என்னும் செல்வம்.

மனத்தான் விழையப்பட்டன அனைத்தும் விழைந்தவாறே பெறுதல் — பிராத்தி என்னும் செல்வம்.

சங்கற்ப மாத்திரையான் ஆயிரம் மகளிரைப் படைத்து, அவ் ஆயிர மகளிரோடும் ஆயிரம் வடிவாய் நின்று கிரீடித்தல் — பிராகாமியம் என்னும் செல்வம்.

பிரமன் முதலியோர் மாட்டும் தன் ஆணை செலுத்தி அவரான் பூசிக்கப்படுதல் — ஈசத்துவம் என்னும் செல்வம்.

உலகம் முழுவதையும் தன் வசம் ஆக்குதலும், உலகத்தை உண்டாக்குதலும் — வசித்துவம் என்னும் செல்வம்.

விடயங்களை நுகர்ந்தும் அவற்றின் தொடக்குண்ணாமை — கரிமா என்னும் செல்வம்.

**இருவகையுள் எண் வகை :**

இவ் எண்வகைச் சித்தியுள் முன்னைய மூன்றும் உடம்பானும் பின்னைய ஐந்தும் மனம் முதலியவற்றானும் பெறப்படுவன என்று உணர்க.

* * * * *

**ஒன்றற்கு ஒன்று ஏது :**

இரு கூற்றுப் பத்து வகைப்பட்ட தன்மம் உடையார்க்கு—எண் வகை ஞானத்துள் ஒரு ஞானம் உண்டாம். ஞானத்தானே, பத்து வகை வைராக்கியத்துள் ஒரு வைராக்கியம் உண்டாம். வைராக்கியத்தானே, எண்வகைச் செல்வமும் உளவாம். ஆகலின், இவைஒன்றற்கு ஒன்று ஏது ஆமாறு அறிக.

**அதன்மம் :**

இனி, இவ் அணிமா முதலிய ஐசுவரியம் பெற்றார் அதனான் செருக்கு எய்தி, யோக நெறியைக் கைவிட்டு, விடயங்களின்,

துவக்குண்டு கிடப்பார் ஆகலின், அது காரணமாக அதன்மம் உண்டாம்.

அதுவும் பத்து வகைப்படும். அவை ஆவன – கொல்லாமை முதலிய பத்து வகைக்கும் மறுதலை ஆகிய கொலை, பொய், களவு, பிறர்மனை நயத்தல், அழுக்காறு, வெஃகுளி, வழிபடாமை, மாசு உண்டல், செற்றம், கோட்டம் என்பனவாம்.

**அஞ்ஞானம் :**

இனி, அதன்மத்தால் அஞ்ஞானம் உண்டாம்.

அது – தமமும் மோகமும் மாமோகமும் தாமிசிரமும் அந்த தாமிசிரமும் என்று ஐவகைப்படும்.

அவற்றுள், தமம் ஆவது - ஆன்மா அல்லதனை ஆன்மா என மயங்குதல். அதுவும் மத வேறுபாட்டான், மேல் கூறிய பூதம் முதலிய பத்தினையும் பற்றி நிகழ்ந்து பத்து வகைப்படும்.

மோகம் ஆவது - அணிமா முதலிய எண் பெரும் செல்வமே மேலாகிய உறுதிப் பயன் என மயங்குதல். அதுவும் அணிமா முதலிய எட்டினும் நிகழ்ந்து எட்டு வகைப்படும்.

மாமோகம் ஆவது – விருப்புச் சத்தம் வெறுப்புச் சத்தம் முதலிய பத்தினும் இதுவே பொருள் என மயங்குதல்.

தாமிசிரம் ஆவது உயர்ந்தனவும் இழிந்தனவும் ஆகிய இரு கூற்றுச் சத்தம் முதலிய பத்தினையும், அணிமா முதலிய எண் பெரும் சித்தியினையும் பெறுதற்கு உரிய சாதகம் செய்துழி, அவை பெறுமை யான் ஆதல், பெற்று இழத்தலான் ஆதல், வருந்துதல். அஃது அப் பதினெட்டும் பற்றி நிகழ்ந்து பதினெட்டு வகைப்படும்.

அந்த தாமிசிரம் ஆவது–இரு கூற்றுச் சத்தம் முதலிய பத்தினையும், அணிமா முதலிய எட்டினையும் ஒரு யோகி அநுபவிக்கும் காலை, அவற்றான் வரும் இன்பத்தினை, அவனினும் மேற்பட்ட மற்றொரு யோகி கவர்ந்துழி, அதனான் வருந்துதல். அதுவும் அப் பதினெட்டும் பற்றி நிகழ்ந்து, பதினெட்டு வகைப்படும்.

இங்ஙனம், தமத்தின் வகை பத்தும், மோகத்தின் வகை எட்டும், மாமோகத்தின் வகை பத்தும், தாமிசிரத்தின் வகை பதினெட்டும், அந்ததாமிசிரத்தின் வகை பதினெட்டுமாக, விரியான், அஞ்ஞானம் - அறுபத்து நான்கு ஆம் என்று உணர்க.

**அவைராக்கியம் :**

இனி, அஞ்ஞானத்தான் அவைராக்கியம் ஆகிய ஆசை உண்டாம். அது வைராக்கிய மறுதலையாய், அவ்வாற்றான் நூறு வகைப்படும்.

இனி, அஞ்ஞானம் அறுபத்து நான்கும், அவைராக்கியம் நூறும், மனமும், ஆங்காரமும், வாக்கு ஆதி ஐந்தும், சுரோத்திராதி ஐந்தும் – என்னும், பன்னிரண்டும் ஆகிய நூற்று எழுபத்தாறுனும், அநைசுவரியத்திற்கு ஏது ஆகிய அசத்தி என்னும் வலிஇன்மை உண்டாம். அவ் – அசத்தி அவ்அக் காரண வேறுபாட்டான், நூற்று எழுபத்தாறு ஆமாறு கண்டு கொள்க.

**அநைசுவரியம் :**

இனி, அவ் அசத்தியானே, அநைசுவரியம் என்னும் வறுமை உண்டாம். அஃது – அணிமா முதலிய எட்டுக்கும் மறுதலையாய் எட்டு வகைப்படும்.

**புத்தி விருத்தியின் விரி :**

இங்ஙனம் முறையானே, தன்ம வகை பத்தும், ஞான வகை எண்பதும், வைராக்கிய வகை நூறும், ஐசுவரிய வகை அறுபத்து நான்கும், அதன்ம வகை பத்தும், அஞ்ஞான வகை அறுபத்து நான்கும், அவைராக்கிய வகை நூறும், அநைசுவரிய வகை எட்டும் – ஆக நானூற்று முப்பத்தாறும், அசத்தி வகை நூற்று எழுபத்தாறும் உளப்படப் புத்தி தத்துவ விருத்தி, விரியான், அறுநூற்றுப் பன்னிரண்டு ஆம் என்று உணர்க.

அங்ஙனம், அநைசுவரியம் ஆகிய வறுமை உடையானுக்கு, மீளத் தன்மத்தின் கருத்துச் செல்லும். இங்ஙனம் ஆகலின், புத்தி தத்துவம் ஆகிய சக்கரத்தில், தன்மம் முதலிய பாவகம் ஆகிய அறங்கள் எட்டினது முடிவு காணமாட்டாது, மறித்தும் மறித்தும் உழிதருவன் புருடன் என்று அறிக.

## ஆங்கார தத்துவம்

**ஆங்காரம் ஆவது :**

இனிப், புத்தி தத்துவத்தான் விடயத்தை நிச்சயித்தல் – 'இஃது இன்னது என நிச்சயிப்பேன்யான்', என்று ஒருப்பட்டு எழுந்தால்

அன்றி உண்டாகாமையின், அங்ஙனம் ஒருப்பட்டு எழுதற்குக் கருவியாய்ப், புத்தியின் நின்றும் ஏனைய இரண்டு குணமும் குறைந்து, இராசதம் மிக்குத் தோன்றுவது – ஆங்காரம் என்னும், தத்துவம் என்று உணர்க.

**துணிபு இருவகை :**

... புத்தியின் தொழிற்பாடு ஆகிய துணிபு – விடயத்தின் கண்ணதாய் – 'இது குடம், இஃது ஆடை' எனப் பொருள்தோறும் வேறு வேருய் 'இஃது' என்னும் வடிவிற்ருய் நிற்பது.

ஆங்கார்ரத்தின் தொழிற்பாடு ஆகிய துணிபு–புருடன் கண்ணதாய், விடயந்தோறும், 'யான் நிச்சயிப்பேன்' என, ஒன்ருய், 'யான்' என்னும் வடிவிற்ருய் நிற்பது.

**புத்தியின் வேறு ஆங்காரம் :**

இங்ஙனம், தொழிற்பாடு இரண்டற்கும் தம்முள் வேற்றுமை பெரிது ஆகலின், இருவேறு வகைப்பட்ட தொழிற்பாட்டிற்குக் கருவி ஒன்ருதல் பொருந்தாமையான், புத்தியின் வேறு ஆகிய ஆங்கார தத்துவம் மிகை (அன்று). ...

அல்லதூஉம், சாத்துவிகக் கூறு மிக்குப் பரிணமித்தால் அன்றி – 'இஃது இன்னது' எனத் துணிந்து அறிதற்குக் கருவி ஆதலும், இராசதக் கூறு மிக்குப் பரிணமித்தால் அன்றி-ஒருப்பட்டு எழுதலும்-கூடாமையானும், இரு வேறு தொழிற்கும் ஒன்றே கருவி ஆம் என்றல் பொருந்தாமை அறிக.

இவ் ஆங்காரம் கருவிக் காரகம் ஆயினும், கலைபோல வினைமுதல் ஆதற்கு ஏதுவாய்ச், 'சிறப்பு வகையான் நிச்சயிப்பேன் யான்' என நிற்றலின், உபசாரத்தால், வினைமுதல் காரகம் எனப்படும் ஆகலானும், அது விடயங்கட்கு எதிர் முகமாய் நிற்கும் புத்தியின் வேறு ஆதல் அறிக.

**ஆங்காரம் ஆன்மாக்கள் தோறும் வேறு :**

இவ் ஆங்காரமும், – புத்தி தத்துவம் முதலியன போல, ஆன்மாக்கள்தோறும் வெவ்வேருய்ப் பல ஆம். அற்று ஆகலின், அன்றே, ஒரு தன்மையான் அன்றி, ஒருவன் 'யான் செல்வேன்' எனவும், ஒருவன் 'யான் உண்பேன்' எனவும், ஒருவன் 'யான் அறிவேன்' எனவும் – அவரவர் வெவ்வேருய் ஒருப்பட்டு எழுவதூஉம் என்க,

**மூவகை ஆங்காரம் :**

இவ் ஆங்காரம் - சாத்துவிகம் மிக்கு, ஏனை இரண்டும் குறைந்த கூற்றின் தைசத - ஆங்காரம் என்றும்,

இராசதம் மிக்கு ஏனை இரண்டும் குறைந்த கூற்றின் வைகாரி ஆங்காரம் என்றும்,

தாமத மிக்கு, ஏனை இரண்டும் குறைந்த கூற்றின் - பூதாதி ஆங்காரம் என்றும் - பெயர் பெற்று, மூவகைப்படும்.

**ஆங்காரத்தின் காரியங்கள் :**

இவற்றுள், தைசதத்தின் - மனமும், சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியம் ஐந்தும் தோன்றும்.

வைகரியின்-வாக்கு முதலிய கன்மேந்திரியம் ஐந்தும் தோன்றும்.

பூதாதியின் - சத்தம் முதலிய தன்மாத்திரை ஐந்தும் தோன்றும்.

**மனம் :**

அவற்றுள், மனம் ஆவது - வாயில் மாத்திரையான் நிருவிகற்ப மாய் அறிந்த விடயப் பொருளின் சங்கற்ப விகற்பம் நிகழ்தற்குக் கருவியாய் நிற்பது.

**சங்கற்பம் :**

சங்கற்பம் ஆவது - 'இஃது யாது ஆகற்பாற்று' என, ஒன்றன் குணங்களைத் தூக்கிச், சிந்தித்துப், பின்னர், முன் அனுபவித்து அறிந்த வாதனைபற்றிக், 'குணங்கள் இன்ன' ஆகலின் 'இக் குணங்களை உடைய பொருள், குடம் ஆகற்பாற்று, ஆடை ஆகற்பாற்று' என ஒன்றனை நினைக்கும் நினைவு.

**விகற்பம் :**

விகற்பம் ஆவது - அங்ஙனம் நினைத்த பின்னர், 'இது குடமோ, அன்றோ' என்று எண்ணும் ஐயம். ஐய நினைவு நிகழ்ந்து அன்றி, 'இஃது இன்னது ஆகற்பாற்று' என்னும் சங்கற்ப நினைவு மாத்திரை யானே நிச்சயம் பிறவாமையின், சங்கற்ப நினைவின் பின் ஐயம் ஒரு தலையான் நிகழும் எனக் கொள்க.

**மனத்தின் தொழிற்பாடே இரண்டும் :**

இதனானே, சங்கற்ப நினைவிற்கும் விகற்ப நினைவிற்கும் கால வேறுபாடு மாத்திரையே அன்றிப், பயன் வேறுபாடு இன்மையின்,

மனம் – ஒன்றே சங்கற்பம், விகற்பம் என்னும் இரண்டு தொழிற்பாட்டிற்கும் கருவி ஆமாறு என்னை என்னும், ஆசங்கைக்கு இடம் இன்மை உணர்க, ஈண்டுப் பயன் வேற்றுமைபற்றித் தொழிற்பாட்டிற்கு வேற்றுமை கோடலின்.

**மனமும் சித்தமும் :**

அற்று ஆயினும், 'இஃது யாது ஆகற்பாற்று' எனக் குணங்களைத் தூக்கிச் சிந்திக்கும் நினைவிற்கு நிருவிகற்பக் காட்சி மாத்திரையே காரணம். 'இன்னது ஆகற்பாற்று, என்னும் சங்கற்ப நினைவிற்குத் தூக்கிச் சிந்திக்கும் நினைவின்பின் வெளிப்படும் வாதனை காரணம். இவ் இருவகை நினைவும்-கால மாத்திரையான் அன்றிக்,காரணத்தானும் தம்முள் வேறுபாடு உடைமையின், இவ் இரண்டற்கும் மனம் ஒன்றே கருவி ஆதல் சாலாது ... ஆயினும், பயனுல் வேறுபாடு இன்மையின், மனமே அவத்தை விசேடத்தான் சித்தம் என விருத்திப்பட்டு நின்று அங்ஙனம் தூக்கிச் சிந்திக்கும் என்று உணர்க.

இதனுனே, மனத்தின் விருத்தியாகிய சித்தம் ஒன்று உண்டு என்பது பெற்றும். அஃது – ஏனைத் தத்துவங்கள் போலப் பரிணமம் அன்மையின், மனத்தின் வேருக வைக்கற்பாற்று அன்று. ...

.... " சிந்தை நினைவு வந்து ஐயம் தருதல் " ( சிவப். 43 ) ஆவது– சித்தத்தின் தொழிற்பாடு ஆகிய, அங்ஙனம் தூக்கி எண்ணும் நினைவு நிகழ்ந்து, வாதனையை வெளிப்படுத்தும் முகத்தான், ஐய நினைவைத் தோற்றுவித்தல்.

**தொகை வேறு கொள்ளினும் முரண் இன்மை :**

இதனுனே, அந்தக் கரணம் மூன்று எனக் கொண்டு, குண தத்துவத்தை, மூலப் பகுதியின் வேறு வைத்து எண்ணி, மூலப் பகுதிக்குக் கீழ்த் தத்துவம் இருபத்து நான்கு எனத் தொகை கொள்ளுவாரும்,

குண தத்துவத்தை மூலப் பகுதியுள் அடக்கி, உபகரித்தல் சிறப்புப் பற்றிச், சித்தத்தை மனத்தின் வேறு வைத்து எண்ணி, அந்தக் கரணம் நான்கு எனக் கொண்டு, மூலப் பகுதிக்குக் கீழ்த் தத்துவம் இருபத்து நான்கு எனத் தொகை கொள்ளுவாரும்,

சித்தமும் மனமும் ஒன்ருக வைத்துப், மூலப் பகுதியையும் குண தத்துவத்தையும் ஒன்ருக வைத்து எண்ணி, இருபத்து நாலாம்

தத்துவம் மூலப் பகுதி எனத் தொகை கொள்ளுவாரும் எனப் பல திறத்தர் ஆசிரியர் எல்லாம் பொருளான் வேறுபாடு இன்மையின், தம்முள் முரணுமை அறிக.

*　　*　　*　　*　　*

**சித்தமும் ஆங்காரமும் :**

சித்தம் சிந்தித்தபின் அன்றிச், சங்கற்ப விகற்பங்கள் பிறவா என்பதூஉம், ஆங்காரம் ஒருப்பட்டு எழுந்தபின் அன்றி, நிச்சயம் பிறவாது என்பதூஉம் – ஈண்டுக் கூறியவாறு பற்றி அறிந்து கொள்க.

**சித்தம் மனத்தில் அடங்கும் :**

... மனம், சித்தங்களின் தொழிற்பாடு ஆய இருவேறு வகை நினைவும்-விடயத்தின் கண்ணவாய் நிற்றலின், தம்முள் வேறுபாடு-முன் கண்டு அநுபவித்த வாதனை வெளிப்படுதற்கு முன் நிகழ்தலும், பின் நிகழ்தலும் மாத்திரையே அன்றிப் பிறிது இன்மையின், ஆண்டுச் சித்தம் மனத்தின் விருத்தியாய் அதனுள் அடங்கும் என்பது ஒக்கும்.

**ஆங்காரம் புத்தியில் அடங்காமை :**

ஈண்டு அவ்வாறு அன்றி, ஆங்காரத்தின் தொழிற்பாடு ஆகிய துணிபு – 'யான் இன்னன்' ஆவன் என்னும் வடிவிற்றாய்ப், புருடன் கண்ணே நிகழ்வதூஉம், புத்தியின் தொழிற்பாடு ஆகிய துணிபு- 'இஃது இன்னது' என்னும் வடிவிற்றாய் விடயத்தின் கண்ணே நிகழ்வதூஉம் – ஆகிய, தம்முள் வேறுபாடு பெரிது, ஆகலின், ஆங்காரம் - புத்தியின் விருத்தியாய்ப் புத்தியுள் அடங்கும் என்றல் சாலாமை அறிக.

## 1. மனத் தத்துவம்

**மனம் ஆவது :**

இனி, வாதனை பற்றி நிகழும் சங்கற்பம், விகற்பம் ஆகிய தொழிற்பாடு - மனத்திற்கே ஆகலின்,

ஒரு குடத்தை எதிரே காட்டி, 'இது குடம் என்னும் சொற்குப் பொருள்' என்று ஒருவன் உணர்த்த, உணர்ந்தவன், மற்றொரு குடத்தைக் கண்டவழி, அவ் வாசனையான், ஒப்புமை பற்றி, 'இதுவும் குடம் என்னும் சொற்குப் பொருள்' என்று உணர்ந்து கோடற்கும், முன் காணப்பட்டவனைப் பின் கண்டவழி, 'அவனே

இவன் ' என்று உணர்ந்து கோடற்கும் – ஏதுவாகிய கருவி – மனமே என்று உணர்க.

* * * * *

**மனம் அணு ஆகாது :**

... ஆங்காரத்தின் தோன்றிய மனம் –ஆங்காரம் ஈருகிய தத்துவங் களை நோக்கித் தூலம் ஆதல் உடைமையானும், ஐம்பொறிகள் – ஒரோ ஒன்ருய் உணர்தற்குக் காரணம் – வித்தையான் சிறிதே விளங்கி அதுஅதுவாய் அழுந்தி அறிவதாகிய ஆன்மாவின் ஞானசத்தி, எல்லாத் தத்துவங்களையும் ஒருங்கே அதிட்டிக்க மாட்டாது ஒரோ, ஒன்ருய் அதிட்டித்தலே ஆகலின், ஆண்டு, மனச் சையோகமே காரணம் அன்மையின், அதுபற்றி மனம் அணு என்றல் சாலா(து). ..

**மனம் முந்தித் தோன்றும் :**

மனம், நாட்டின்கண் நிகழ்வனவற்றைச் சென்று அறிந்து வந்து வேந்தர்க்குப் புலன் ஆகச் செய்யும் ஒற்றர் போலப், புற இந்திரியங் களான் அறிந்த விடயத்தை, இடையே நின்று, பற்றி வாங்கிப், புத்தி யின் எதிர்விம்பமாய்த் தோன்றுமாறு கொண்டு உய்க்கும் அக இந்திரியமாய்க், காகத்தின் கண்மணி போல, அகம், புறம் ஆகிய ஈர் இடத்தினும் விரைந்து செல்லும் சதாகதி உடையதாய் நிற்பது, ஆகலின், புற இந்திரியங்களோடு ஒப்பத் தானும் சாத்துவிக அகங் காரத்தின் நின்றும் அவற்றிற்கு முந்தித் தோன்றும் என்றல் பொருந்து மாறு அறிக.

* * * * *

**கூடி நுகரும் :**

*' கூடி ஒருபுலன் நுகரும் '* ( *சிவப். 63* )

என்றதற்குத் தாற்பரியம் – ஒரு விடயத்தின்கண் அவ்வத் தத்து வங்கள் எல்லாம் முறையான் நிகழ்ந்த பின்னர், அஃது ஆன்மாவுக்குப் புலன் ஆம் ... என்பதேயாம். ...

**விடயத்தை அறியுமாறு :**

ஒரு விடயத்தைப் புற இந்திரியம் பொது வகையான் முன் உணர, அதன்பின் அவ் விடயத்தை, அக இந்திரியம் ஆகிய மனம் பற்ற, அதன்பின், ஆங்காரம் ஒருப்பட்டு எழ, அதன் பின்னர்ப் புத்தி நிச்சயிக்கும் என்பதே முறை எனக் கொள்க. ...

## உ. ஞானேந்திரியம் (ஞான இந்திரியம்)

**தோன்றுமாறும் பெயர்களும் :**

இனிச், சாத்துவிக அகங்காரத்தின் நின்றும், மனத்தின் பின்னர் முறையானே தோன்றுவன ஆகிய ஞானேந்திரியம் ஆவன – செவி, துவக்கு, நோக்கு, நாக்கு, துண்டம் என்பனவாம்.

**பெயர் பெற்றவாறு :**

செவி முதலிய இடங்களின் பெயர், ஆகு பெயராய், அவ்வவ் இடங்களை அதிட்டித்து நிற்கும் இந்திரியங்கட்கு ஆயின. இந்திரியம், பொறி, வாயில் என்பன ஒரு பொருள் கிளவி.

**நிருவிகற்ப அறிவுக் கருவி :**

இவை ஐந்தும், ஆன்மாவின் ஞான சத்தியான் அதிட்டிக்கப் பட்டுப், பொருள்களை - விசேடண, விசேடிய இயல்பு பற்றி அறியுமாறு இன்றி, நிருவிகற்பமாய் அறியும் கருவி என்று உணர்க.

**சத்துவ குணக் கருவி :**

இவை அறிகருவி ஆகலான், சாத்துவிக அகங்காரத்தின் நின்றும் தோன்றின ஆதல் – பொருத்தம் உடைமை அறிக.

**உறுப்பு வேறு, இந்திரியம் வேறு :**

செவிடனுக்குச் செவி உள்ளதாகவும், ஓசை கேளாமையின், அது கேளாமைக்குக் காரணம் – செவி என்னும் உறுப்பின் வேறாய், அதனை அதிட்டித்து நிற்கும் இந்திரியம் இல்லாமையே அன்றிப் பிறிது இன்மையான், செவி என்னும் உறுப்பு – இந்திரியம் ஆகாது. இதுபற்றி, ஏனை இந்திரியங்களும் - அவ்வவ் இடங்களின் வேறு ஆதல் கண்டு கொள்க.

இன்னும், கண் இந்திரியம் - சென்று இயைந்து விடயத்தை அறிவது அன்றி, நின்றவாறே அறிதல் கூடாமையான், கண் என்னும் உறுப்பு, நின்றவாறு நிற்றலே அன்றிச் - சென்று இசையுமாறு இன்மையானும், உறுப்பினை இந்திரியம் என்றல் பொருந்தாமை அறிக.

## 3. கன்மேந்திரியம் (கன்ம இந்திரியம்)

**தோற்றமும் பெயரும் :**

இனி, இராசத ஆங்காரத்தின் தோன்றும் கன்மேந்திரியம் ஐந்து ஆவன் - வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்பன ஆம். இவையும் - அவ்வவ் உறுப்பின் பெயர்-அவ்வவற்றை அதிட்டிக்கும் இந்திரியங்கட்கு ஆகுபெயர் ஆயின.

இவ் ஐந்தும் தொழில் செய்யும் கருவி ஆகலின், இராசத ஆங்காரத்தின் தோன்றின ஆதல் - பொருத்தம் உடைமை கண்டு கொள்க.

**இன்றியமையாமை :**

செவி முதலிய ஞானேந்திரியங்கள் - ஆன்மாவின் ஞான சத்தி மாத்திரையே விளக்கிநிற்பன ஆகலின், கிரியா சத்தியை விளக்கு தற்குக், கன்மேந்திரியம் ஐந்தும் வேண்டப்படும் என்க.

ஈண்டுக் கன்மம் என்பது ஆன்மாவின் கிரியா சத்தியை. ஞான சத்தியும், கிரியா சத்தியும் இயற்கையால் தம்முள் வேறுபாடு உடைய அல்ல ஆயினும், செயற்கையான் வேறுபாடு உடைமையின், கருவிகளும் வேறு வேறு வேண்டப்பட்டன.

**ஒன்று ஐந்து ஆயின :**

ஆன்மாவின் ஞான சத்தி, - ஒன்று ஆயினும், அறியப்படும் சத்தம் முதலிய விடயங்கள்-ஐவேறு வகைப்படுதல் பற்றி, அறி கருவி ஐந்து ஆயினாற் போலக், கிரியா சத்தியும்-ஒன்று ஆயினும், செய்யப் படும் புடை பெயர்ச்சித் தொழில், - வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்று, ஐவேறு வகைப்படுதல்பற்றித். தொழில் கருவியும் ஐந்து வேண்டப்பட்டன என்பது.

**பிற பலவும் ஐந்தில் அடக்கம் :**

... புருவம் நெரித்தல் முதலியன - பாணியின் தொழில் ஆகிய- இடுதல், ஏற்றலின் வகையாய் அடங்குதலின், இந்திரியங்கள் - உடல் எங்கும் வியாபகம் எனக் கோடலின், பாணி இந்திரியம் - புருவம் நெரித்தல் முதலிய தொழில்களைச் செய்யுங்கால், அவ்வவ் உறுப்புகளை அதிட்டித்து நின்று செய்யும் எனக் கொள்க.

இவ்வாறே, உடம்பின் நிகழும் எல்லாத் தொழில்களும் — வசனம் முதலிய ஐந்தினும் அடங்குமாறு அறிந்து அடக்கி, வாக்கு முதலிய ஐவகை இந்திரியங்களுள் ஒன்றின் தொழிற்பாடாதல் கண்டு கொள்க.

**சிறப்பிடத்தால் கருவிப் பெயர் :**

பாணி முதலிய இந்திரியங்கள் - ஏனை உறுப்புக்களையும் அதிட்டிக்கும் ஆயினும், பாணி முதலியவற்றிற்கு விசேட அதிட்டானம் ஆதல்பற்றிப் - பாணி முதலிய பெயர் பெற்றன எனக் கொள்க. ...

**கருவி - உறுப்பின் வேறு :**

வாக்குப், பாதம் முதலிய உறுப்பு உள்வழியும்- அவ்வத் தொழில் நிகழுமாறு இன்றி, மூங்கையும், முடமும் முதலியன ஆதல் காண்டும் ஆகலின், ஞானேந்திரியம் போலக், கன்மேந்திரியங்களும்– அவ்வவ் உறுப்புக்களின் வேறாய், அவற்றை அதிட்டித்து நிற்பன உள எனக் கொள்க.

**செயற் கருவிகள் வேண்டும் :**

.. ஞானேந்திரியங்களால் நிருவிகற்பமாய் அறிந்த விடயங்கள் பலவற்றுள், ஒன்றனைத் தூக்கிச் சிந்தம் சிந்திப்ப, அதன்பின், மனம்– சங்கற்ப விகற்பங்கள் செய்த பின், ஆங்காரம் ஒருப்பட்டு எழ, அதனைப், புத்தி நிச்சயித்த மாத்திரையே-சுக, துக்க, மோக ரூபமாய் ஆன்மாவிற்குப் போக்கியம் (ஆகும்).

சிறு பான்மை அங்ஙனம், நிச்சயித்த மாத்திரையே போக்கியம் ஆம் ஆயினும், நிச்சயித்த பொருள், மீள, ஆங்காரத்தால், 'யான் நிச்சயித்தேன்' எனவும், 'யான் இதனைச் செய்வேன்' எனவும், ஒருப்பட்டு எழுந்து, செய்யுமாறு, மனத்தால் சங்கற்ப, விகற்பங்கள் செய்து எண்ணியபின், மீள, ஞானேந்திரியங்களான் அறிந்து, கன்மேந்திரியங்களான் காரியப்பட்டு, மீளவும், முறையானே, புத்தி தத்துவத்தின் வந்து போக்கியம் ஆதலே பெரும்பான்மை ஆகலின், கன்மேந்திரியங்கள் ஒரு தலையான் வேண்டப்படும் என்க.

... சித்துக்கு அன்றிச், சடத்துக்குக் கிரியை இன்மையானும், ஞானக் கிரியா ரூபம் ஆகிய சத்தி – ஆன்மாவைப் பற்றி நிற்பது அன்றிப், புத்தி தத்துவம் முதலிய சடத்தைப் பற்றி நில்லாது எனவும், அவை விளங்குதற்கு இவை கருவிஆதல் மாத்திரையே எனவும் அறிக.

**இந்திரியங்களின் தொழிற்பாடு :**

.. அநாதியே, ஞானக், கிரியாசத்திகள் - மலத்தால் தடையுண்டமையின், பாடாணம்போல் கிடந்த ஆன்மாவுக்குத், தடையை நீக்கி,

ஞானக், கிரியைகளை விளக்குதல் மாத்திரையே இந்திரியங்களின் தொழிற்பாடு எனவும் உணர்க.

**ஞானக், கிரியைகள் தோன்றி அழிவன அல்ல :**

இருள் காலத்தின் விளக்கு உள்வழிப் பொருள்கள் விளங்கும். விளக்கு நீங்கியவழி விளங்கா. அதுபற்றிப், பொருள்கள் அங்ஙனம் தோன்றி அழிந்தன எனப்படா.

அதுபோல, மலத்தால் தடையுண்டு நிற்கும் பெத்த காலத்தில், ஆன்மாவின் ஞானக், கிரியைகள் – கருவிகள் கூடியவழி விளங்கும். அவை நீங்கியவழி விளங்கா. அதுபற்றித், தோன்றி அழிவன எனப் படா என்க....

ஞானக், கிரியைகளை விளக்கும் – புத்தி தத்துவம் முதலிய கருவி களின் தொழிற்பாடு – சந்தானமாய்க், கணம் தோறும் வேறுபட்டு நிகழ்தலின், அதுபற்றி ஞானமும் சந்தானமாய் விளங்குதலின், | இமை ஆடுதலும் இன்றி, ஒரு விடயத்தை இடையறாது நோக்கிய வழியும், அநுபவ ஞானம் கணம் தோறும் வெவ்வேறாய் நிகழும். ...

## 4. தன்மாத்திரை

**தோற்றமும் பெயரும் :**

இனித், தாமத ஆங்காரத்தின் தோன்றும் தன்மாத்திரை ஐந்து ஆவன – சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்பன ஆம்.

**இந்திரியங்கட்கு இடம் ஆவது :**

இவை ஐந்தும் - சுரோத்திர ஆதி, வாக்கு ஆதியாகிய - இரு வகை இந்திரியங்கட்கும் முறையே இடமாய்த், தேர் ஊர்வானுக்குத் தேர் போல, அவை அறிதலும், செய்தலும் ஆகிய தத்தம் தொழிற் பாட்டினைச் செய்தற்கண், மதுகையை விளைத்து நிற்றல் மாத்திரைக்கே கருவி ஆகலின், இவை – தாமத ஆங்காரத்தின் தோன்றின ஆதல் பொருத்தம் உடைமை அறிக.

தேர் ஊர்வானுக்குத் - தேரும், தேரொடு நிலமும் இடம் எனப் படுதல் போல, | செவி முதலிய இந்திரியங்கட்குச் செவி, வாய் முதலிய உறுப்புக(ளும்) ... சத்தம் முதலிய தன்மாத்திரையும் ( ஆகிய ) இரண்டும் இடம் ஆதல் அமை(யும்).

**தன்மாத்திரை ஆவன :**

இவற்றுள்,

**சத்தம் :**

வல் ஓசை, மெல் ஓசை முதலிய சிறப்பு வகை ஓசைகளை எல்லாம் உள்ளடக்கிப், பொதுமையான், ஓசை மாத்திரையாய்ச், சூக்குமமாய் நின்றது - சத்த தன்மாத்திரை எனவும்,

**பரிசம் :**

அவ் ஓசையொடு கூடத் – தட்பம், வெப்பம் முதலிய – சிறப்பு வகைப் பரிசங்களை எல்லாம் உள்ளடக்கிப், பொதுமையான், பரிச மாத்திரையாய்ச், சூக்குமமாய் நின்றது - பரிச தன்மாத்திரை எனவும்,

**உருவம் :**

அவ் இரண்டனொடு கூட - வெண்மை செம்மை முதலிய சிறப்பு வகை உருவங்களை எல்லாம் உள்ளடக்கிப், பொதுமையான், உருவ மாத்திரையாய்ச், சூக்குமமாய் நின்றது உருவ தன்மாத்திரை எனவும்,

**இரதம் :**

அம் மூன்றனொடு கூடத் - தித்திப்புப், புளிப்பு முதலிய சிறப்பு வகைச் சுவைகளை எல்லாம் உள்ளடக்கிப், பொதுமையான், சுவை மாத்திரையாய்ச், சூக்குமமாய் நின்றது - இரத தன்மாத்திரை எனவும்,

**கந்தம் :**

இந் நான்கனொடு கூட - நறு நாற்றம், தீ நாற்றம், என்னும் இரு டகுதிச் சிறப்பு வகைக் கந்தங்களை எல்லாம் உள்ளடக்கிப், பொது மையான், கந்த மாத்திரையாய்ச், சூக்குமமாய் நின்றது - கந்த தன்மாத்திரை எனவும்,

**பெரும் பூத முதற் காரணம் :**

இவை, முறையே, ஆகாயம் முதலிய பெரும் பூதம் ஐந்திற்கும் முதற் காரணம் ஆம் எனவும் அறிக....

ஆகாயம் – பல வேறு வகைப்பட்ட - சத்தம் என்னும் ஒரு குணம் உடையது.

வாயுப் – பல வேறு வகைப்பட்ட – சத்தம், பரிசம் என்னும் இரண்டு குணம் உடையது.

தேயுப் – பல வேறு வகைப்பட்ட – சத்தம், பரிசம், உருவம் என்னும் மூன்று குணம் உடையது.

அப்புப் – பல வேறு வகைப்பட்ட – சத்தம், பரிசம், உருவம், இரதம் என்னும் நான்கு குணம் உடையது.

புடவி – பல வேறு வகைப்பட்ட – சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னும் ஐந்து குணம் உடையது.

ஆகலின், இக் குணங்கள் காரணத்தின் சூக்குமமாய் நிகழ்ந்து அன்றிக், காரியத்தின் தூலமாய் நிகழ்தல் கூடாது என்பது நியமம் ஆகலின்,

தாமத ஆங்காரம் கேவலமாய் நிற்பது ஆகலின், அதன் கண்ணே மயில் அண்ட சலத்தின் பஞ்ச வன்னம் போலச், சத்தம் முதலிய குணங்கள் – சூக்குமமாய் நிகழ்தல் இன்மையின், அங்ஙனம் சூக்கும நிகழ்ச்சி உடைய தன்மாத்திரைகளே–தூல நிகழ்ச்சி உடைய பெரும் பூதமாய்ப் பரிணமிக்கும் – என்று உணர்ந்து கொள்க. ...

**தன்மாத்திரை ஐந்து :**

காரணம் ஆய தன்மாத்திரை - ஒன்று ஆயவழி, விசேடம் இன்மையின், காரியம் ஆகிய பெரும் பூதங்கள் ஐந்தும் – ஐந்து குணமும் ஒப்ப உடைய ஆதல்வேண்டும். அங்ஙனம் அன்றி, ஆகாயத்திற்கு ஒரு குணமும், வாயுவுக்கு இரண்டு குணமும், தேயுவுக்கு மூன்று குணமும், அப்புவிற்கு நான்கு குணமும், புடவிக்கு ஐந்து குணமும் – அங்ஙனம் நிகழ்தல் – காரண வேறுபாட்டான் அன்றி உண்டாகாமையின், அவ்வாறு நிற்கும் தன்மாத்திரை ஐந்து உளவாதல் அறிக.

**தன்மாத்திரை, பூதம் – வேற்றுமை :**

இதனானே, தன்மாத்திரைகட்கும் பூதங்கட்கும் தம்முள் வேற்றுமை – முளையும், மரமும் போலச் சூக்குமமாய் நிற்றலும், தூலமாய் நிற்றலும் மாத்திரையே, அன்றிப் பிறிது இல்லை எனக் கொள்க.

**சிறப்புக் குணம் பற்றிப் பெயர் வழக்கு :**

இத் தன்மாத்திரைகள் ஐந்தும் – தாமத ஆங்காரத்தின் நின்றும் ஒன்றன்பின் ஒன்று, முறையானே தோன்றுங்கால், ஒரோ ஒரு குணம்

அதிகமாகத் தோன்றுதலின், அவ் அதிக் குணத்தின் பெயரே பற்றித், தலைமை பற்றிய வழக்காய்ப் – பரிச தன்மாத்திரை, உருவ தன்மாத்திரை, இரத தன்மாத்திரை, கந்த தன்மாத்திரை எனப்படுதலும்,

கந்தம் ஒழிந்த நான்கு குணமும் பொது ஆயினும், அம்முறையே பற்றிச் - சிறப்புக்குணம் எனப்படுதலும் பொருந்துமாறு அறிக....

**தன்மாத்திரையின் காரியமே பெரும்பூதம் :**

புத்தி முதல் நிலம் ஈறுகிய உலகம் எல்லாம் – முக்குணத்தின் காரியம் .... உலகம் எல்லாம் சாத்துவிக குணமயம் ஆகிய பிரகாச ரூபமும், சாந்த ரூபமும், சுக ரூபமும், – இராசத குணமயம் ஆகிய பிரவிருத்தி ரூபமும், கோர ரூபமும், துக்க ரூபமும்,-தாமத குணமயம் ஆகிய நியமன ரூபமும், மூட ரூபமும், மோக ரூபமுமே ஆய் நிற்றலின், இத் தன்மையவற்றிற்கு முதல் காரணம் மூலப் பகுதியே, அன்றிப் பிறிது அன்று எனவும்,

அங்ஙனம் ஆகலின், உலகம் எல்லாம் குணரூபமே எனவும்,

மனிதர் பலர் திரண்டவழிப் படை எனவும், மரங்கள் பல செறிந்தவழிப் பொதும்பர் எனவும் பெயர் பெற்று, அநுபவமாய் வழங்கப்படுமாறு போலக், குணங்களே – தம்முள் தொக்குக் – குணி எனவும், திரவியம் எனவும் பெயர் பெற்று, அநுபவமாய் வழங்கப் படுவன அன்றிக், குணி என வேறு இன்மையின், குணகுணிகட்குத் தம்முள் பெரும்பாலும் வேற்றுமை கூறு(வது) சைவ சித்தாந்தத் திற்கு ஏலாது எனவும்,

இங்ஙனம் ஆகலின், தன்மாத்திரை ஆகிய சத்தம் முதலிய சூக்குமத்தின் நின்றும் ஆகாயம் முதலிய பெரும்பூதங்கள் தோன்று தல் அமைவு உடைத்து எனவும் ஓர்ந்துகொள்க ..

**குணமும் குணியும் :**

கண் முதலிய இந்திரியங்கள் – தத்தமக்கு உரிய உருவம் முதலிய வற்றை மாத்திரையே அறியும் என்பது நியமம் ஆகலின், உருவம் முதலிய குணங்களின் வேருய்க், குணிப் பொருள் ஒன்று உண்டு எனக் கொள்ளினும், அஃது இந்திரியத்திற்கு விடயம் ஆதல் கூடாமை யானும்,

குணத்தின் வேருய்க்-குணி என்பது ஒன்று இல்லை என–ஈண்டுக் காட்டிய பிரமாணங்கள் வலி உடைமையானும்,

அதனைக் கண்டேன், அதனைப் பரிசித்தேன்-என இரண்டு இந்திரியத்திற்கும் ஒன்றே விடயமாக நிகழும் உணர்வு - மயக்க உணர்வு என்றுதல், தொக்கவழிக் — குணி எனப்பெயர் பெற்று ஒன்றுய்நிற்றல் பற்றி நிகழும் உபசார உணர்வு என்றுதல் — கொள்வது அன்றி, அதுபற்றிக் குணிப்பொருள் வேறு எனக் கோடல் பொருந்தாமை அறிக.

இங்ஙனம் ஆகலின், குணங்களே சமுதாயத்தின் நோக்கின் - குணி என்றும், வேறு வேறு நோக்கின் — குணம் என்றும் வழங்கப்படுவன ஆம் என்பது கண்டுகொள்க. ....

**தன்மாத்திரையின் காரியமே பெரும்பூதம் :**

இதனுனே, ஈண்டுப் போந்தது —

சத்தம் முதல் கந்தம் ஈருகிய ஐந்து குணங்களும்-பகுப்பு இன்றிப் பொதுமையின் நின்ற அவத்தை — கந்த தன்மாத்திரை என்பதூஉம்,

சத்தம் முதல் இரதம் ஈருகிய நான்கு குணமும் - பகுப்பு இன்றிப் பொதுமையின் நின்ற அவத்தை — இரத தன்மாத்திரை என்பதூஉம்,

சத்தம் முதல் உருவம் ஈருகிய மூன்று குணமும்—பகுப்பு இன்றிப் பொதுமையின் நின்ற அவத்தை - உருவ தன்மாத்திரை என்பதூஉம்,

சத்தமும், பரிசமும் ஆகிய இரண்டு குணமும் - பகுப்பு இன்றிப் பொதுமையின் நின்ற அவத்தை - பரிச தன்மாத்திரை என்பதூஉம்,

சத்த குணம் ஒன்றும் - வல்லோசை, மெல்லோசை முதலிய பகுப்பு இன்றிப் பொதுமையின் நின்ற அவத்தை — சத்த தன்மாத்திரை என்பதூஉம்,

இதனுனே, குணமே தன்மாத்திரை எனப்படும் என்பதூஉம்,

இங்ஙனம் ஆகலின், ஒரோ ஒரு குணம் ஏற்றமாக உடைய ஆகாயம் முதலிய ஐந்திற்கும், இவை, முறையே காரணம் ஆதல் பெறப்பட்டதூஉம் என்க.

## 5. பூதம் — ஆகாயம்

**ஆகாயம் ஆவது :**

இனிச், சத்த தன்மாத்திரையின் நின்றும் தூலமாய் ஆகாயம் தோன்றிப், பல வேறு வகைப்பட்ட சத்தம் உடைத்தாய்ப்,

பிராணிகள் – போக்கு, வரவு முதலிய தொழில் செய்தற்கு இடம் கொடுத்து நிற்கும்.

**ஆகாயம் உண்மை :**

ஆகாயம் உண்டு என்பது, வல் ஓசை, மெல் ஓசை முதல் பல வேறு வகைப்பட அறியும் சத்த குணங்கள்–பிரிப்பு இன்றித் தொக்கு நிற்பது ஆகிய குணிப்பொருளை இன்றி உள ஆகா என்பதனானும், இடம் கொடுத்தல் வேண்டாதவழி, இடைவெளி இல்லாத நிலத்தின் அகத்தும்–போக்கு, வரவு செய்தல் வேண்டும். அது கூடாமையான்– போக்கு, வரவு செய்தற்கு ஏதுவாக, இடம் கொடுத்தல் உண்டு என்பது ஒருதலையான் பெறப்படுதலின், அவ் இடம் கொடுத்தற்குக் காரணம் வேறு இல்லை என்பதனானும் துணியப்படும்.

* * * * *

**ஓசை குணமே :**

... ஈண்டு, வல் ஓசை, மெல் ஓசை என்பன - உயர்ந்த ஓசை, தாழ்ந்த ஓசை என்று அன்றிப், பிற பொருள் படாமையின், உயர்ச்சி, தாழ்ச்சி முதலிய வேறுபாடு, நாற்றம் முதலிய குணங்கட்கே அன்றித் திரவியத்திற்கு இன்மையின் – பொன், இரும்பு முதலியவற்றிலும்-உயர்ச்சி, தாழ்ச்சி - அவ் வக் குணம்பற்றி வழங்கப் படும் அன்றிப் பிறிது இன்மையின் – வன்மை, மென்மை முதலிய வேறுபாடே ஓசை குணம் என்றற்குச் சான்று ஆகலின், அதுபற்றித் திரவியம் என்றல் பொருந்தாது.

* * * * *

## வாயு

**வாயு ஆவது :**

இனிப், பரிச தன்மாத்திரையின் நின்றும் தோன்றிய வாயு – சத்தம், பரிசம் என்னும் இரண்டு குணம் உடைத்தாய்ச், சலித்துத் திரட்டுதல் தொழிற்பாட்டதாய், உடம்பின் உள்ளும் – பிராணன், அபானன் முதலிய பத்து வகைப்பட்டு இயங்கி – எழுதல், இருத்தல் முதலிய தொழிற்பாட்டிற்கு ஏதுவாய் எல்லா உயிர்க்கும் உபகாரம் ஆம் என்று உணர்க.

## தேயு

### தேயு ஆவது :

இனி, உருவ தன்மாத்திரையின் தோன்றிய தேயு – சத்தம், பரிசம், உருவம் என்னும் மூன்று குணம் உடைத்தாய்ப், பாகம் செய்தல் முதலிய தொழிற்பாட்டது ஆய், உலகத்தின் – காருக பத்தியம், ஆகவனீயம், தென்திசை அங்கி என்னும் வைதிக அங்கியும், இவற்றின் வேறு ஆகிய சைவ அங்கியுமாய் நின்று, வினைகட்கு உபகாரம் ஆயும். அகத்தின் உள்–நின்று அங்கியாய் நின்று, உண்டவற்றை எல்லாம் பாகம் செய்து, உயிர்கட்குப் பெரிதும் உபகாரம் ஆகியும், இங்ஙனம் பல வேறு வகைப்படும்.

* * * * *

### தோன்றுமாறு :

இத் தேயு … குடம் முதலியவற்றை நோக்க – விளக்குவது ஆயினும், இந்திரியங்களை நோக்க – விளக்கப் படுவதே, ஆகலின், தாமத அகங்காரத்தின் நின்றும், அதன் கண்ணது ஆகிய சாத்துவிக குணத்தான் மிக்குப் பரிணமித்துத் தோன்றியது என்பதே பொருத்தம் உடைத்து என்க.

## அப்பு

### அப்பு ஆவது :

இனி, இரத தன்மாத்திரையின் தோன்றிய புனல் - இரதம் ஈறு ஆகிய நான்கு குணம் உடைத்தாய், நெகிழ்வித்துப் பதம் செய்தல் ஆகிய தொழிற்பாட்டதாய், உயிர்கள் எல்லாம் தன்னான் சீவித்தற்கு ஏதுவாய் நிற்கும்.

பனி, ஆலி முதலியனவும் குளிர்ந்த பரிசம் உடைமையின், புனலே ஆம் எனவும், ஆண்டுக் கடினப் பொருள் விரவி நிற்றலான், வல் என்று ஆயின எனவும் உணர்க.

இவ்வாறே, அவ்வப் பொருள்களின் இயல்பு எல்லாம் உய்த்து உணர்ந்து கொள்க.

## பிருதிவி

**பிருதிவி ஆவது :**

இனிக், கந்த தன்மாத்திரையின் தோன்றிய புடவி — கந்தம் ஈருகிய ஐந்து குணம் உடைத்தாய், உரத்துத் தரித்தல் ஆகிய தொழிற் பாட்டதாய் நிற்கும்.

இப் புடவி தத்துவம் முதலிய ஐந்தும் — உடம்பினும் — மயிர் எலும்பு, ஒடு, நீர், உதிரம் முதலியனவாய் நிற்குமாறு கண்டு கொள்க.

ஆகாயம் — எல்லா நாடிகளினும் ஆங்காரத்தின் விருத்திக்கு இடமாய் நிற்கும் என்க.

இவற்றுள்,

ஆகாயத்திற்குச்–சத்த குணம் — நீர்த்தரங்கம் போலத் தாரையாய்த் தோன்றும் எதிரொலி மாத்திரையே — எனவும்,

வாயுவுக்கு — ஊர்தலைத் தெரிவிப்பதாகிய கசகச ஒலி — எனவும்,

தேயுவுக்கு — எரிதலைத் தெரிவிப்பதாகிய தமதம ஒலி — எனவும்,

புனலுக்கு ஒழுகுதலைத் தெரிவிப்பதாகிய சளசள ஒலி — எனவும்

புடவிக்குக் — கடினத்தைத் தெரிவிப்பதாகிய கடகட ஒலி — எனவும்

இங்ஙனம் வேறுபாடு உடைமை ( கண்டு கொள்க ) ... ...

இனிப், பரிச குணம் — வாயுவுக்கும், புடவிக்கும் — தட்பமும் வெப்பமும் இல்லாத பரிசமும், தேயுவுக்கு — வெப்பப் பரிசமும், புனலுக்குத் தட்பப் பரிசமும் ஆம் — எனவும்,

இரத குணம் — புனலுக்குத் தித்திப்புச் சுவையும், — புடவிக்கு அறுவகைச் சுவையும் ஆம் — எனவும்,

அவ்வவற்றின் குணங்களைப் பகுத்து உணர்ந்து கொள்க.

* * * * *

**தொகுத்துரை :**

இங்ஙனம், சிவம் முதல் நிலம் இறுவாய்–ஐந்தும், ஏழும், இருபத்து நான்கும் ஆகிய முப்பத்தாறு தத்துவங்கட்குத் தோற்ற முறைமையும், அவற்றின் தொழிற்பாடும், போக நுகர்ச்சிக்கண் அவற்றுள் ஒன்றை இன்றி அமையாமையின் —

அவை —

சுத்தம், மிச்சிரம், அசுத்தம் எனவும்,

பிரேர காண்டம், போக சயித்திரு காண்டம், போக்கிய காண்டம் எனவும்,

சிவ தத்துவம், வித்யா தத்துவம், ஆன்ம தத்துவம் எனவும் ஆமாறும்,

இன்னோர் அன்னவை எல்லாம் ஈண்டு ஒதியவாறு பற்றி உணர்ந்து கொள்க.

**ஒடுங்கும் முறைமை :**

இவை ஒடுங்கும் காலும்-தோன்றின முறையே, தத்தம் காரணங் களின் ஒடுங்கும்.

## தத்துவங்களின் வகை

**நால்வகைக் கருவி :**

நிலம் முதல் கலை ஈருகிய முப்பத்தொரு தத்துவமும் – புறப்புறக் கருவியும், புறக் கருவியும், அகப்புறக் கருவியும், அகக் கருவியும் என நான்கு வகைப்படும்.

அவற்றுள் –

| | | |
|---|---|---|
| பூதம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும் | — | புறப் புறக் கருவி. |
| இந்திரியம் பத்தும் | — | புறக் கருவி. |
| மனம் முதலியன (நான்கும்) | — | அகப்புறக் கருவி. |
| அராகம் முதலியன (ஐந்தும்) | — | அகக் கருவி. |

இன்னும், இத் தத்துவங்கள் – பொதுவும், சிறப்பும், பொதுச் சிறப்பும் என மூவகைப்படும்.

அவற்றுள்,

**பொது :**

புவன வடிவரிய தத்துவங்கள் – போக நுகர்ச்சிக்கண் – எல்லா உயிர்க்கும் பொதுவாய்ப் போகம் பயப்பித்தலின் – பொது எனப் படும்.

**சிறப்பு :**

புரியட்டக வடிவாகிய தத்துவங்கள் – உயிர்தோறும் வேறு வேறாய் நின்று போகம் பயப்பித்தலின் – சிறப்பு எனப்படும்.

புரியட்டகம் – சூக்கும தேகமும், பர தேகமும் என்று இரு வகைத்து.

அவற்றுள் –

**சூக்கும தேகம் :**

தன்மாத்திரை ஐந்தும், அந்தக் கரணம் மூன்றும் ஆகிய எட்டானும் ஆயது – சூக்கும தேகம். ...

**பரதேகம் :**

இனிப், பூதம் ஒன்றும், தன்மாத்திரை ஒன்றும், ஞானேந்திரியம் ஒன்றும், கன்மேந்திரியம் ஒன்றும், அந்தக் கரணம் ஒன்றும், குண தத்துவம் ஒன்றும், மூலப் பகுதி ஒன்றும், கலாதி ஒன்றும் என்னும் எண் வகைப்பட்ட முப்பத்தொரு தத்துவங்களான் ஆயது பரதேகம்.

பரம் எனினும், அதி சூக்குமம் எனினும் ஒக்கும். ...

● ● ● ● ●

... சவிகற்ப உணர்விற்கு ஏது ஆகிய தூல நாத மாத்திரையே பர தேகத்தோடு விரவி அகத்தே விளங்கி நிற்பது அன்றி, ஏனைய வைந்தவங்கள் அவ்வாறு நில்லா. ...

**பொதுச் சிறப்பு :**

இனித், தூல தேக வடிவாகிய தத்துவங்கள் – அவரவர் போக நுகர்ச்சிக்குச் – சிறப்பு வகையான் நிலைக்களம் ஆதலும், மனைவி முதலியோர்க்குச் சந்தனம், பூமாலை முதலியன போலப், பொதுமை யான் போக்கியம் ஆதலும் – ஆகிய இரு வகையும் உடைமையின், பொதுச் சிறப்பு எனப்படும் என்று உணர்க.

## தத்துவ விளக்கப் படம்

### 1. மாயையின் வகை




### 2. சுத்த மாயையின் ஆக்கங்கள்




### 3. சுத்த தத்துவம்



4. கலை

5

நிவிர்த்தி — பிரதிட்டை — வித்தை — சாந்தி — சாந்தியதீதை

### 5. அசுத்த மாயையின் ஆக்கங்கள்

7

1. காலம்
2. நியதி
3 கலை
4. வித்தை
5. அராகம்
6. புருடன் (பஞ்ச கஞ்சுகனாகிய ஆன்மா)
7. மூலப்பகுதி

## 6. மூலப்பகுதியும் அதன் ஆக்கங்களும்



# தத்துவ விளக்கத்தின் விளக்கவுரை

(ஆதீனப் புலவர் ஆதி முருகவேள்)

## மாயையின் வகை

### இருவகை மாயை

உலகம் உண்டாவதற்கு முதற் பொருளாயிருப்பது மாயை. அது அழிவு இல்லாதது. அறிவு இல்லாதது. முதல்வனுக்கு வைப்பு ஆற்றலாக உள்ளது. முதல்வனில் அடங்கியிருப்பது. நிலையானது. அருவமானது.

இவ்வாறு விளக்கப்பட்ட மாயை இரண்டு வகைப்படும். ஒன்று தூமாயை. [கலப்பு இல்லாதது. அதனால் அது சுத்த மாயை.] மற்றது கலப்பு மாயை [அசுத்த மாயை].

தூமாயைக்குப் பல பெயர்கள்: சுத்த மாயை, மாமாயை, குடிலை, குண்டலி, விந்து.

தூவா மாயை-கலப்பு மாயை-க்கும் பல பெயர்கள்: அசுத்த மாயை, அதோ மாயை, மாயை, மோகினி.

இவற்றுள்-தூமாயை தூய உலகிற்கு முதற் காரணம்.

தூவாமாயை கலப்பு [அசுத்த] உலகிற்கு முதற்காரணம்.

### 1. தூமாயை - சுத்த மாயை

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை என்று சொல்லப் படும் ஐந்தும் தூய உலகம்-சுத்தப் பிரபஞ்சம்-ஆகும்.

கலை, நியதி, காலம்; வித்தை, அராகம், புருடன், மாயை என்று சொல்லப்படும் ஏழு பொருள்களும் தூவா உலகம் - அசுத்தப் பிரபஞ்சம்-ஆகும்.

நாம் ஒரு பொருளை இரண்டு வகையில் அறிகிறோம். பல

பொருள்களோடு சேர்த்து இதுவும் ஒரு பொருள் என அறிவது ஒரு வகை. இப்படி அறியும்போது அந்தப் பொருளை இது இன்னது என்று தனிப்படத் தெளிவாக அறிவதில்லை. மற்றைய பொருள்களிலிருந்து அந்தப் பொருளை வேறுபடத் தெரிவதில்லை. இப்படி வேற்றுமை தெரியாமல் அறிவது நிர்விகற்ப உணர்வு என்று சொல்லப்படும்.

மற்றொரு வகை இப்படி அன்று. எந்தப் பொருளையும் இது இன்னபெயரை உடையது இன்ன இனத்தைச் சேர்ந்தது. இன்ன குணம் உள்ளது. இன்ன தொழிலை உடையது... என்று இப்படியெல்லாம் மற்றைய பொருளிலிருந்து வேறுபடத் தெளிவாகத் தெரிவது. இப்படி ஒரு பொருளை அறிவது சவிகற்ப உணர்வு என்று சொல்லப்படும்.

இந்த இரண்டில் பெயர், இனம் [சாதி] முதலிய வேற்றுமை தெரியும் உணர்வு-சவிகற்ப உணர்வு - எழுத்தால் ஆன சொல்லால் அல்லாமல் உண்டாகாது. சொல்லிற்குக் காரணமான எழுத்தோசை தூமாயையில் இருந்து உண்டாகும். எழுத்தோசைக்கு முதற்பொருள் தூமாயை.

## நால் வகை வாக்கு

இந்த எழுத்தோசை நான்கு வகை ஆகும். அவை சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பன. அவை ஒன்றற்கு ஒன்று காரணமாகும். மேலே சொல்லிய வேறுபடத் தெரியும் உணர்வுக்கு ஏதுவாகும். அது துணியால் கூடாரம் ஆனது போலத் தூய மாயையின் விரிவால் ஆனது.

அமைதிமேல் கலை, அமைதிக் கலை, அறிவுக் கலை, நிலையுறுதிக் கலை, நீக்கல் கலை - சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி - என்று கலை ஐந்து வகையாகச் சொல்லப்படும்.

முன் சொல்லப்பட்ட நால்வகை வாக்கும் இந்த ஐந்து வகையான கலைகளையும் பற்றிக் கொண்டு சிவதத்துவம் முதலான தூய பொருள்களில் ஐந்து வகைப்பட்டு நிற்கும்.

## ஐந்து வகை வாக்கு

நால்வகை வாக்குமே ஐவகைப்பட்டும் நிற்கும்.

வைகரி என்ற ஒன்றே தன் செவிக்கு மட்டும் கேட்கும் நுண் [சூக்கும] வைகரியும், பிறர் செவிக்குக் கேட்கும் பரு வைகரியும் [தூல வைகரி] என்று இரு வகைப்படும். இதனால் நால்வகை வாக்கும் ஐவகை ஆகும்.

இது அல்லாமல், சூக்குமை யாகிய நுண் வாக்கு ஒன்றே நுண்ணியதும் மிக நுண்ணியதும் [சூக்குமை, அதி சூக்குமை] என்று இருவகைப்படுவதாலும் ஐவகை வாக்கு ஆகும்.

## வாக்கு- மூன்று நிலை

வாக்கும் எழுத்தோசையும் ஒன்றே. இந்த ஒன்றே தூமாயை யின் ஆக்கப் பொருள்களில் இடையூறுபடாத நிலையில் நுண்ணிய தாக அமையும். பின்னர் அதுவே தூவா மாயையின் ஆக்கப் பொருள் களில் இசையோசை முதலான இடையூறுகளால் நுண்ணிய நிலை யிலிருந்தும் சிறிது பருநிலை அடையும். அதன் பின்னர் மூலப்பகுதி யாகிய பிரகிருதி மாயையின் ஆக்கப் பொருள்களில அங்குப்படும் இடையூறுகளால் மிகமிகப் பருமையாகவும் ஆகும். அந்த நிலையில் நமக்கெல்லாம் அந்த வாக்காகிய எழுத்தோசை விளக்கமாகக் கேட்கும்.

இவ்வாறு வாக்கு ஒன்றே மூன்று நிலைகளை அடையும் —நுண்ணியது, பரியது, மிகப் பரியது.

## தூமாயை - இருவகை உருவம்

தூமாயை ஒன்றே. அது ஓசையும் பொருளும் ஆகிய இரண்டு தன்மையை உடையதாகி, அந்த இரண்டிற்கும் முதற்பொருளாக இருக்கும். சொல் உரு, பொருள் உரு என்ற இரண்டு உருவுடையது தூமாயை.

## 6. மூலப்பகுதியும் அதன் ஆக்கங்களும்



# தத்துவ விளக்கத்தின் விளக்கவுரை

(ஆதீனப் புலவர் ஆதி முருகவேள்)

## மாயையின் வகை

## இருவகை மாயை

உலகம் உண்டாவதற்கு முதற் பொருளாயிருப்பது மாயை. அது அழிவு இல்லாதது. அறிவு இல்லாதது. முதல்வனுக்கு வைப்பு ஆற்றலாக உள்ளது. முதல்வனில் அடங்கியிருப்பது. நிலையானது. அருவமானது.

இவ்வாறு விளக்கப்பட்ட மாயை இரண்டு வகைப்படும். ஒன்று தூமாயை. [கலப்பு இல்லாதது. அதனால் அது சுத்த மாயை.] மற்றது கலப்பு மாயை [அசுத்த மாயை].

தூமாயைக்குப் பல பெயர்கள் : சுத்த மாயை, மாமாயை, குடிலை, குண்டலி, விந்து.

தூவா மாயை-கலப்பு மாயை-க்கும் பல பெயர்கள் : அசுத்த மாயை, அதோ மாயை, மாயை, மோகினி.

இவற்றுள்-தூமாயை தூய உலகிற்கு முதற் காரணம்.

தூவாமாயை கலப்பு [அசுத்த] உலகிற்கு முதற்காரணம்.

### 1. தூமாயை - சுத்த மாயை

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை என்று சொல்லப் படும் ஐந்தும் தூய உலகம்-சுத்தப் பிரபஞ்சம்-ஆகும்.

கலை, நியதி, காலம்; வித்தை, அராகம், புருடன், மாயை என்று சொல்லப்படும் ஏழு பொருள்களும் தூவா உலகம் – அசுத்தப் பிரபஞ்சம்-ஆகும்.

நாம் ஒரு பொருளை இரண்டு வகையில் அறிகிறோம். பல

பொருள்களோடு சேர்த்து இதுவும் ஒரு பொருள் என அறிவது ஒரு வகை. இப்படி அறியும்போது அந்தப் பொருளை இது இன்னது என்று தனிப்படத் தெளிவாக அறிவதில்லை. மற்றைய பொருள்களிலிருந்து அந்தப் பொருளை வேறுபடத் தெரிவதில்லை. இப்படி வேற்றுமை தெரியாமல் அறிவது நிர்விகற்ப உணர்வு என்று சொல்லப்படும்.

மற்றொரு வகை இப்படி அன்று. எந்தப் பொருளையும் இது இன்னபெயரை உடையது இன்ன இனத்தைச் சேர்ந்தது. இன்ன குணம் உள்ளது. இன்ன தொழிலை உடையது... என்று இப்படியெல்லாம் மற்றைய பொருளிலிருந்து வேறுபடத் தெளிவாகத் தெரிவது. இப்படி ஒரு பொருளை அறிவது சவிகற்ப உணர்வு என்று சொல்லப்படும்.

இந்த இரண்டில் பெயர், இனம் [சாதி] முதலிய வேற்றுமை தெரியும் உணர்வு—சவிகற்ப உணர்வு - எழுத்தால் ஆன சொல்லால் அல்லாமல் உண்டாகாது. சொல்லிற்குக் காரணமான எழுத்தோசை தூமாயையில் இருந்து உண்டாகும். எழுத்தோசைக்கு முதற்பொருள் தூமாயை.

## நால் வகை வாக்கு

இந்த எழுத்தோசை நான்கு வகை ஆகும். அவை சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பன. அவை ஒன்றற்கு ஒன்று காரணமாகும். மேலே சொல்லிய வேறுபடத் தெரியும் உணர்வுக்கு ஏதுவாகும். அது துணியால் கூடாரம் ஆனது போலத் தூய மாயையின் விரிவால் ஆனது.

அமைதிமேல் கலை, அமைதிக் கலை, அறிவுக் கலை, நிலையுறுதிக் கலை, நீக்கல் கலை - சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி - என்று கலை ஐந்து வகையாகச் சொல்லப்படும்.

முன் சொல்லப்பட்ட நால்வகை வாக்கும் இந்த ஐந்து வகையான கலைகளையும் பற்றிக் கொண்டு சிவதத்துவம் முதலான தூய பொருள்களில் ஐந்து வகைப்பட்டு நிற்கும்.

## ஐந்து வகை வாக்கு

நால் வகை வாக்குமே ஐவகைப்பட்டும் நிற்கும்.

வைகரி என்ற ஒன்றே தன் செவிக்கு மட்டும் கேட்கும் நுண் [சூக்கும] வைகரியும், பிறர் செவிக்குக் கேட்கும் பரு வைகரியும் [தூல வைகரி] என்று இரு வகைப்படும். இதனால் நால்வகை வாக்கும் ஐவகை ஆகும்.

இது அல்லாமல், சூக்குமை யாகிய நுண் வாக்கு ஒன்றே நுண்ணியதும் மிக நுண்ணியதும் [சூக்குமை, அதி சூக்குமை] என்று இருவகைப்படுவதாலும் ஐவகை வாக்கு ஆகும்.

## வாக்கு- மூன்று நிலை

வாக்கும் எழுத்தோசையும் ஒன்றே. இந்த ஒன்றே தூமாயையின் ஆக்கப் பொருள்களில் இடையூறுபடாத நிலையில் நுண்ணியதாக அமையும். பின்னர் அதுவே தூவா மாயையின் ஆக்கப் பொருள்களில் இசையோசை முதலான இடையூறுகளால் நுண்ணிய நிலையிலிருந்தும் சிறிது பருநிலை அடையும். அதன் பின்னர் மூலப்பகுதியாகிய பிரகிருதி மாயையின் ஆக்கப் பொருள்களில அங்குப்படும் இடையூறுகளால் மிகமிகப் பருமையாகவும் ஆகும். அந்த நிலையில் நமக்கெல்லாம் அந்த வாக்காகிய எழுத்தோசை விளக்கமாகக் கேட்கும்.

இவ்வாறு வாக்கு ஒன்றே மூன்று நிலைகளை அடையும் –நுண்ணியது, பரியது, மிகப் பரியது.

## தூமாயை - இருவகை உருவம்

தூமாயை ஒன்றே. அது ஓசையும் பொருளும் ஆகிய இரண்டு தன்மையை உடையதாகி, அந்த இரண்டிற்கும் முதற்பொருளாக இருக்கும். சொல் உரு, பொருள் உரு என்ற இரண்டு உருவுடையது தூமாயை.

## (அ) தூமாயையின் ஆக்கம் / சுத்த மாயா காரியம்

### இருவகை

தூமாயையின் விரிவான ஆக்கப் பொருள்கள் முன் சொல்லப் பட்ட இரண்டு வகை உருவம் காரணமாகச் சொல் உலகம், பொருள் உலகம் என்று இரண்டு வகைப்படும்.

இவற்றுள் சொல்உலகம் பற்றிய விளக்கமே வாக்குப் பற்றிக் கூறிய விளக்கம்.

### இருவகைப் பொருள் உலகம்

பொருள் உலகம் இரண்டு வகைப்படும். அவை தூய பொருள், கலை [சுத்த தத்துவம், கலை] என்பன.

### தூய பொருள் - ஐந்துவகை

தூய பொருள் தூமாயையின் ஆக்கங்கள். அவை சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்பன.

### தூய ஆக்கப் பொருள்கள் தோன்றும் முறை

#### 1. சிவம்

### மீண்டும் உண்டாக

தூயமாயையானது தோன்றிய எல்லாம் ஒடுக்கப்படும் பேரூழிக் காலத்தில் தன்னிடமிருந்து தோன்றிய ஆக்கங்கள் எல்லாம் ஒடுங்கி முதற்பொருள் அளவில் நிற்கும். அப்பொழுது அவற்றைத் தோற்று வித்தும் ஒடுக்கியும் நின்ற முதல்வனும் தன் ஆற்றலின் தொழில்களை யெல்லாம் விட்டுவிட்டுப் பகுப்பு இல்லாமல் தானேயாய் நிற்பான்.

எல்லாம் ஒடுங்கி முதற்பொருள் அளவாய் நின்ற தூமாயை மறுபடியும் பொருள்களைத் தோற்றுவிப்பதற்கு உரிய தகுதிநிலையை

அடையவேண்டும். அது தானாக அத்தகுதியை அடையாது. ஆதலால் ஒடுக்கக் காலத்தில் தன் ஆற்றலின் தொழில்கள் எல்லாவற்றையும் விட்டிருந்த முதல்வன் தன்னிலிருந்து இப்பொழுது வெளிப்பட்ட அறிவாற்றல் அளவில் தூமாயையை நோக்கி நிற்பான்.

அவ்வாறு அவன் நோக்கிய நோக்கம்பட்ட தூமாயையின் ஒருபகுதி பொருள்களைத் தோற்றுவிக்கத் தகுதியடையும். அந்தத் தூமாயையின் கூறு அவ்வளவில் விரிவடையும். அவ்வாறு விரிவடைந்த கூறு அறிவளவில் நின்ற சிவனால் தனக்கு நிலைக்களமாகக்கொள்ளப்பட்டதால் சிவதத்துவம் என்று சொல்லப்படும்.

ஒடுங்கிய அளவாக நின்றதால் அது இலய தத்துவம் என்று பெயர் பெறும்.

அதற்கு வடிவம் இல்லை. ஆதலால் அது நிட்கள தத்துவம்-வடிவிலாப் பொருள்-எனப்படும்.

அது ஆக்கப் பொருள் ஆவதற்குத் தகுதியானது ஆதலால் சத்திமான் எனச் சொல்லப்படும்.

நால்வகை வாக்குக்களில் சூக்குமை வாக்கு நாதம் எனப் படும். அதற்குச் சிவதத்துவம் பற்றுக்கோடு. ஆதலால் அதற்கு நாததத்துவம் என்றும் பெயர்.

இங்குச் சிவதத்துவத்திற்குச் சொல்லப்பட்ட ஐந்து வகைப் பெயரும் தூமாயையை நிலைக்களமாகக் கொண்ட முதல்வனுக்கும் ஆகும்.

## இடம் ஆவது

தூமாயையின் முதலாவது விரிவாக்கம் சிவதத்துவம். அது-முதல்வனது அறிவாற்றலுக்கும்,

அந்த அறிவாற்றலின் வேறுபாடுகள் ஆகிய இந்திகை முதலான பத்துக் கலைகளுக்கும்,

காமிகம் முதலான வேறுபாடு தோன்றாமல் நுண்ணியவாக்கு உருவில் நிற்கும் சிவாகமத்திற்கும்,

சிவதத்துவ உலகினை விரும்பிச் சிவ தீக்கை பெற்று, ஓசை உருவினனை வழிபட்டு, அதிகார மல வாசனையும் நீங்கி, முத்திபெற்ற வராய், நுண்ணிய ஒடுக்கத் தொடர்ச்சி மட்டும் உடைய உயிர்களுக்கும்,

சிவதத்துவத்தில் உள்ள உலகங்களுக்கும் நுகர்ச்சிகளுக்கும் இடம் ஆகும்.

## 2 - சத்தி

### மீண்டும் உண்டாக

இனி, சிவம் என்னும் தத்துவம் ஆகிய தூமாயைப் பகுதி மேற் கொண்டும் ஆக்கம் அடையவேண்டும். அதற்காக, நுண்ணிய ஒடுக்க நிலையில் நின்ற முதல்வனது செயலாற்றல் வெளிப்படும். அது சிவம் என்ற தத்துவப் பகுதி மேலும் காரியப்படவேண்டும் என்று பொது வான நிலையில் எண்ணிநிற்கும். அப்போது அந்த எண்ணத்தின் விளைவால் அத் தூமாயைப் பகுதி ஆக்கப்பாடு ஆகும் நிலையை அடையும். அவ்வாறு அடைந்த நிலை சத்தி என்ற பெயர் கொண்ட ஒரு தத்துவம் ஆகும்.

### பெயர்கள்

சத்தி என்று சொல்லப்படும் சிவனால் அது நிலைக்களமாகக் கொள்ளப்பட்டதால் சத்தி தத்துவம்.

சிவதத்துவத்திற்கு இது பருமை ஆதலால் பருஒடுக்கப் பொருள் / தூல லய தத்துவம்.

வடிவம் இல்லாதிருந்தாலும் சிவ தத்துவத்தைக் காட்டிலும் பரியது ஆதலால் பரியதான வடிவிலாப் பொருள் / தூல நிட்களா தத்துவம்.

பைசந்தி என்னும் வாக்கிற்குப் பற்றுக்கோடு ஆதலால் விந்து தத்துவம்.

இதனை நிலைக்களமாகக் கொள்ளும் முதல்வனும் முன்னதில் போல இங்குப் பெயர்கள் பெறுவான்.

இவ்வாறே மற்றைய மூன்று தத்துவங்களிலும் விளக்கம் அறிக.

## 3. சதாசிவம்

போக அவத்தை-நுகர்நிலை.
இதனில் மேலும் ஆக்கப்பாடு உண்டாகட்டும் என்று எண்ணு வது பொது நிலை. இன்னது உண்டாகட்டும் என்று எண்ணுவது சிறப்பு நிலை.
உன்முகியாய் நிற்றல் - முனைந்து நிற்றல்.
உத்தியுத்த தத்துவம் – முனைப்புடைப் பொருள், ஊக்கப்பொருள்
பிரவிருத்தி - தொழிற்பாடு. நிவிர்த்தி - தொழில்விடல்.

## 4. ஈசுரம்

கிரியா சத்தி–செயலாற்றல். பிரவிருத்தி செய்தல்-செயல்புரிதல்

## 5. சுத்த வித்தை

தனு கரணாதிகள் - உடம்பு கருவி முதலானவை.

உருத்திரன் மால் அயன் இந்திரன் ஆகிய பெயரில் தூமாயை யின் ஆக்கங்களில் ஒன்றாகிய சுத்த வித்தையில் இருப்பவர் வேறு. அவரால் தொழிற்படுத்தப்பட்டு அவர் பெயர்களையே தாமும் கொண்ட வராய், மூலப்பகுதியில் இருந்து தொழில் செய்யும் உருத்திரன் முதலியோர் வேறு. பொதுவாக எல்லாராலும் பேசப்பட்டுவரும் மும்மூர்த்திகள், இந்திரன் என்போர் கீழே ஆன்ம தத்துவத்தில் / மூலப் பகுதியில் தொழில் புரிவோர் ஆவர். இந்த வேறுபாட்டை மறவாது நினைவில் கொள்ளவேண்டும்.

## ஐந்து கலைகள்

1. நிவிர்த்தி: என்பது நீக்கும் சத்தி/ ஆற்றல்.

உயிர்களைக் கட்டிலிருந்து நீங்கச் செய்யும் சிவசத்தி. அந்த நிலையில் நிவிர்த்திகலை என்று பெயர் பெறும்.

அந்தச் சத்திக்கு இடம் தூய மாயையின் விரிவடைந்த ஒரு பகுதி. அந்தப் பகுதி நிவிர்த்தி கலைக்கு இடமாக இருப்பதால் அதற்கும் நிவிர்த்தி என்று பெயர் சொல்லுவர்.

மற்றைய நான்கு கலைகளுக்கும் தனித்தனி இடமாக விரிந்து வரும் சுத்த மாயையின் பகுதிகளுக்கும் அந்தந்தக் கலையின் பெயரே சொல்லப்படும்.

என்றாலும் ஒரே பெயரைக் கொண்ட சத்தி வேறு. சத்திக்கு இடமாக இருக்கும் சுத்த மாயையின் காரியம் வேறு என்பதனை மறந்துவிடக்கூடாது. ஒன்று சிவசத்தி. மற்றது மாயா காரியம்.

2. பிரதிட்டை: நிவிர்த்தி கலையால் கட்டிலிருந்து நீக்கம் அடைந்த உயிர்கள் மறுபடியும் உலக பாசத்தில் சென்றுவிடாதபடி, அதனை விட்டு நீங்கிய நிலையிலே நிலையாக இருக்கச்செய்வது சிவசத்தியின் மற்றொரு கூறு. இவ்வாறு நிலைக்கச் செய்வதால் அதற்குப் பிரதிட்டா கலை என்று பெயர். பிரதிட்டை என்றால் நிலைக்க செய்வது என்பது பொருள்.

3. வித்தை: கட்டிலிருந்து நீங்கி அந்த நிலையிலேயே நிலை பெற்ற உயிர்களுக்கு ஆராய்ச்சி அறிவு, நூலறிவுகள் அல்லாமல் அழுந்தறிவாகிய அனுபவஞானத்தைக் கொடுக்கும் சிவசத்திக்கு வித்தை என்று பெயர். வித்தை என்பது அறிவு. வித்தியாகலை.

4. சாந்தி: அவ்வாறு அனுபவ அறிவு பெற்ற உயிர்களுக்கு விருப்பு, வெறுப்பு, கருதிக் கொள்ளல்/சங்கற்பம் முதலிய எல்லா வகைத் துன்பங்களையும் இல்லாதபடி அமைதிப்படுத்தும் சிவசத்தி சாந்திகலை என்ற பெயரைப் பெற்றது.

5. சாந்தி அதீதை: இதற்கு மேல் மேலே கூறியபடி துன்பங்களில் அமைதியாய் இருந்த நிலைக்கும் அப்பாற்பட்ட ஒரு நிலையில் அந்த உயிர்களை வைக்கும் சிவசத்திக்குச் சாந்தியதீத கலை என்று பெயர்.

## முதல்வனும் அப்படியே

சத்தியை விட்டுச் சிவம் தனித்து நின்றதில்லை. ஆதலால், சிவசத்தி ஒன்றே செய்யும் தொழில் வேறுபட்டால் தானும் நிவிர்த்தி முதலிய வேறு வேறு பெயர் கொண்டு நின்றது போல சத்தியொடு கூடி நின்ற சிவமும் அந்தந்த நிலையில் அந்தந்த சத்தியின் வேறுபட்ட பெயர்களைக் கொண்டு நிற்பான். அப்போது அவனுக்கு நிவிர்த்திபதி, பிரதிட்டாபதி, வித்தியாபதி, சாந்திபதி, சாந்தியதீதபதி என்ற பெயர்கள் சொல்லப்படும்.

## கலைகளின் பெயரில் சுத்த மாயையின் விரிவும்

ஏற்கெனவே இது சொல்லப்பட்டது. இந்தச் சுத்தமாயா விருத்தி ஐந்தும் கலையைத் தவிர மீதம் உள்ள தத்துவம், புவனம், வன்னம் [எழுத்து], பதம் [சொல்], மந்திரம் எனப்படும் ஐந்து வகையான அத்துவாக்களையும் [செல்லும்வழி] தனக்குள் அடக்கி நிற்கும். அவற்றிற்கு ஆதாரமாகவும் இருக்கும். ஆறு வழிகளில் கலையும் ஒன்று.

## வேறு வேறு பஞ்ச கலைகள்

சத்தி எனப்படும் தத்துவத்தில் சொல்லப்படும் புவன உருவத்தில் ஆகிய நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகள் வேறு. இங்குச் சிவசத்தியின் வேறுபட்ட நிலைகளாகிய அஞ்சு கலைகள் வேறு. பெயரில் மட்டும் ஒற்றுமை.

## கலைகளின் தியானப் பயன்

உயிர்கள் பக்குவ வேறுபாடு படிமுறையில் உடையவர்கள், அந்த முறையில் நிலத்தத்துவம் முதலானவற்றின் நிற்போர் சொல்லப்பட்ட ஐந்து கலைகளையும் ஐந்து பூத உருவாக வைத்துத் தியானம் செய்தால் அக்கலைகள் அந்தந்தப் பயன்களைக் கொடுக்கும்.

[நில உருவில் நிவிர்த்தி, நீர் உருவில் பிரதிட்டை, தீ உருவில் வித்தை, காற்றுருவில் சாந்தி, விசும்புருவில் சாந்தியாதீதை]

இதுவரை கூறப்பட்டன சுத்த மாயையின் தன்மையும் சுத்த மாயையின் ஆக்கங்களும்.

## 2. அசுத்த மாயை/தூல மாயை

### தன்மை

இது நிலையானது. என்றும் உள்ளது / அழிவு இல்லாதது. அறிவில்லாதது. ஒரே பொருளானது. 'கலை' முதல் 'நிலம்' முடிவாக. கலப்பு உலகத்திற்கு / அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்பொருளாவது. அந்த உலகம் முழுவதிலும் பரந்து நிற்பது. உயிர்கள் செய்த வினைகளுக்குப் பற்றுக்கோடாக இருப்பது. ஆணவ மலம் போல உயிர்களைச் சிறப்பான வகையில் - ஒவ்வோர் உயிர்க்கும் ஒவ்வொரு நிலையில் அல்லாமல் பொதுவான நிலையில் – வினையில் கட்டுண்டஉயிர்களை மயக்கம் செய்வது. அருவமாய் நிற்பது.

### மாயை அருவம்

மாயைக்கு இரண்டு நிலைகள். ஒன்று பல ஆக்கப் பொருள்களுக்கு முதற்பொருளாக உள்ள நிலை. மற்றொன்று ஆக்கப்பட்ட பொருள் நிலை.

ஆக்கப் பொருள் நிலை தெரியக்கூடிய உருவம் உடையது. முதல் நிலையில் அந்த உருவம் தெரியமுடியாத நுண்ணியதொரு நிலையில் இருக்கும். அந்த நுண்ணிய உருவ நிலை அருவம் என்று சொல்லப்படும். மாயை என்பது முதல் நிலையில் சொல்லப்படும் பெயர். ஆதலால் மாயை அருவமானது என்று சொல்லப்பட்டது.

அருவமும் உருவமும் தம்முள் முரண்பாடு இல்லாதன. ஒன்று நுண்ணிலையிலும், மற்றது பருநிலையிலும் சொல்லப்படும் பெயர்களே.

ஆக்க நிலையில் உருவம் உடையதற்கு அல்லாமல் அருவ நிலை பொருந்தாது. ஆதலால்தான், பதி முதலிய பொருளின் இலக்கணம் சொல்லும் இடத்தில் அவற்றை அருவம் என்று குறிப்பிடவில்லை.

'நிலவும் அரு உருஇன்றி' [சிவப். 13]
'அசித்தரு வியாபகம் போல் வியாபகம் அருவம் இன்றாய்' [சித்தி. சுபக். 210]

என்றே கூறப்பட்டது.

இனி வருவது, அசுத்த மாயையின் ஆக்கங்கள் பற்றி.

## (ஆ) அசுத்த மாயா காரியம்

### ஐந்து ஆக்கங்கள்

அசுத்த மாயையிலிருந்து அனந்த தேவரின் சத்தியின் தொழிற்பாட்டால் ஐந்து பொருள்கள் தோன்றும். அவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பன. அசுத்த மாயையிலிருந்து முதலில் காலம் தோன்றும். பின்னர் நியதி தோன்றும், அதன் பின்னர்க் கலை தோன்றும்.

பின்னர்க் கலையிலிருந்து வித்தையும் வித்தையிலிருந்து அராகமும் தோன்றும்.

அசுத்த மாயை→ 1. காலம், 2. நியதி, 3. கலை.
↓
4. வித்தை.
↓
5. அராகம்.

### 1. காலம்

### கலை முதலியவற்றின் பின் காலமும் நியதியும்

கலப்பு மாயையிலிருந்து ஆக்கப்படும் பொருள்கள் தோன்றும்

முறை மேலே சொல்லப்பட்டது. ஆனால் அவை தொழிற்படும் முறையில் சிறிது வேறுபடும். காலமும் நியதியும் முற்படத் தோன்றினாலும் கலை வித்தை அராகங்களின் தொழில்கள் நடந்த பின்தான் இவற்றின் தொழில் நடைபெறும்.

உயிர்க்குக் கலை வித்தை அராகம் ஆகிய மூன்று பொருள்களின் சேர்க்கை உண்டானதும் கலை உயிரின் செயலாற்றலை விளங்கச் செய்யும்; வித்தை உயிரின் அறிவாற்றலை விளங்கச் செய்யும்; அராகம் விருப்பாற்றலை விளங்கச் செய்யும்.

உயிரின் மூவகை ஆற்றலும் இவ்வாறு விளங்கத் தொடங்கியதும் உயிர் முன் செய்த வினைப் பயன்களை நுகர்தலாகிய போக நுகர்ச்சியில் செல்லும் அப்போது, கால தத்துவம் கணம், இலவம், துடி முதலாகப் பலவகைப்பட்டுநின்று உயிருக்கு நுகர்ச்சியை வரையறுக்கும்.

எந்தெந்த வினையின் பயனாக எவ்வகை நுகர்ச்சி என்பதனையெல்லாம் முறை செய்து கொடுப்பது நியதி அல்லது ஊழ் ஆகிய தத்துவம்.

கலை முதலான மூன்றும் வினைகளைச் செய்து வரும் உயிர்களுக்குச் செயல் அறிவு விருப்புக்களை விளக்கி நேரடியாக உதவுவன. அதாவது: உயிர்க் குணம் அறிவு. அந்த அறிவாற்றல் மூன்று கூறது. அவை செயலும் அறிவும் விருப்பும். உயிரினிடத்தே உள்ள இவை மூன்றும் விளங்கினால் அல்லாமல் வினையோடு தொடர்பு உண்டாகாது. உயிர்க்குணத்தோடு தொடர்புற்றுச் செயற்படுத்துவன கலை முதலிய மூன்றும். ஆதலால் இது நேரடித் தொடர்பு.

இதற்குப் பின்னரே காலமும் நியதியும் உயிர்க்கு நேரடியாக அல்லாமல் வினையோடு தொடர்பு கொண்டு கால வரையறையும் முறையும் செய்து உயிர்க்கு உதவுகின்றன.

## கலைக்கு முன் காலம்

அப்படியானால் கலைக்கு முன் ஏன் காலம் தோன்ற வேண்டும். எந்தவொன்று ஆகவேண்டும் என்றாலும் காலம் துணையின்றி ஆகாது. ஆதலால் தான் கலை முதலியன தோன்றுதற்கு முன் காலம் தோற்றுவிக்கப்பட்டது.

## காலம் இருவகை

தூய உலகிலும் காலம் என்பது உண்டு. அது தூய காலம். அது கலப்பு மாயையில் கலப்புக் காலம் [இங்குச் சொல்லப்பட்ட ஏழில் ஒன்றாகிய காலம்] தோன்றுதற்கும், அனந்த தேவர் என்பவர் கலப்பு மாயையைத் தொழிற்படுத்தி ஆளுகைக்கும் காரணம் ஆகும். கலப்புக் காலம் அசுத்த காலம்.

சாதி ஒருமை - இன ஒற்றுமை.

## காலம் துணைக்காரணம்

அனந்த தேவர் முதலியோர் உயிர்களே. நாமும் உயிர்களே. ஆனாலும் அவர்கள் நம்மில் மிகவும் உயர்ந்த நிலையை அடைந்தவர்கள். இருவருமே கால வரையறைக்கு உட்பட்டவரே. ஆதலால் அவர்களோ நாமோ செய்யும் தொழில்களுக்குக் காலம் வேண்டும்.

முதல்வன் காலம் கடந்தவன். கால காலன். காலத்தையும் தோற்றுவித்துத் தொழிற்படுத்துபவன். ஆதலால் அவனால் செய்யப்படும் தொழில்களுக்குக் காலம் வேண்டியதில்லை.

கால எல்லையைக் கடந்த முதல்வன் தொழிலுக்குக் காலத்தால் செய்யக் கூடியது எதுவும் இல்லை.

ஆகையால், முதல்வனே அங்குக் கலையித்திரி என்று சொல்லப்படும் ஆற்றலொடு கூடித் தான் செய்யும் தொழிலுக்குக் காலமாகியதோர் இடமாய் நிற்பான். ஆதலால், பிறர் செய்யும் செயல்களுக்கே காலம் துணைக்காரணம் ஆகிநிற்கும்.

## கலைக்கு முன் நியதி

உயிர்க்கு நியதியின் உதவியும் காலம் போலவே கலை முதலியவற்றின் தொழிற்பாட்டிற்குப் பின்னரேயாம். ஆனாலும் கலை முதலியன உயிரின் தொழில் அறிவு இச்சைகளை விளக்கும் போது அவ்வுயிரின் முன் வினைக்கு ஈடாக அவற்றை விளக்க வேண்டும். அதற்கு அங்கு நியதி வேண்டும். ஆதலால் காலம் தோன்றிய பின் கலைக்கு முன்னாகவே நியதி தோற்றுவிக்கப்படும்.

## காலம் முன்னும், கலை முன்னும்

தோற்ற முறையில் காலம் முற்பட்டது. தொழிற்பாடு முறையில் கலை முற்பட்டது.

## கலையில் ஆவன

கலையிலிருந்து வித்தையும், வித்தையிலிருந்து அராகமும், கலையிலிருந்து தனியே மூலப் பகுதியும், மூலப்பகுதியிலிருந்து பிற பொருள்களும் தோன்றும். கலையிலிருந்து இவை தோன்றுவதற்குக் காலம் துணை செய்யும். நியதியும் துணை செய்யும்.

ஆகவே, கலை-வித்தை முதலியவற்றிற்கு முதற்காரணம்.

காலமும் நியதியும்-கலை செய்யும் தொழிலுக்குத் துணைக் கருவிகள்.

## முதற் காரணம்

விந்து என்பது தூமாயை. மோகினி என்பது கலப்பு மாயை. மற்றது மூலப்பகுதி. இது மான் என்று சொல்லப்படும்.

## வினையும் காலமும்

உயிரின் முன் செய்வினை காலத்தைத் துணையாகக் கொண்டே படைப்புக்கு ஏதுவாகும்.

மாந்தளிர் முதலியன இளவேனில் முதலாக அதுவதற்கு உரிய காலத்தில்தான் தோன்றுகின்றன. பிற பருவங்களில் தோன்றுவதில்லை. முல்லைப்பூ முதலியனவும் அப்படியே கார் காலம் முதலிய காலங்களில் அன்றித் தோன்றுவதில்லை. அது போலவே உரிய காலம் வரும்போதுதான் அவை அழியும்.

காலம் என்ற ஒன்று இல்லை என்றால் அவ்வக் காலம் இல்லாதபோதும் அவையவை தோன்றித் தோன்றியஉடனேயே எல்லாம் அழிந்துபோகவும் வேண்டும். நடைமுறையில் அப்படிக் காணவில்லை.

இதுவும் அல்லாமல், ஒருவன் செய்த வினைக்குப் பயன் நெடு நாள் சென்று வரவும் காணுகின்றோம். ஒரு கணத்தில் தோன்றும், ஒரு கணத்தில் அழியும் என்று ஒரு சிறு கால வரையறை காட்டியே பேசுகின்றோம்.

இவற்றிற்கெல்லாம் காரணமாயிருப்பது காலம் என்பதால் காலம் உண்டு என்பது தெளிவாகிறது.

## முன்னும் பின்னும்

முன் பின் என்னும் வழக்குக் காலம் பற்றியும் வழங்குகிறோம். அதுபோல முன்னால் இருப்பது, பின்னால் இருப்பது என்ற முறையில் முன் பின் வழக்கு இடம் பற்றியும் வருகிறது.

இடம் பற்றிய முன் பின் வழக்குப் பொருள்களின் இருப்பு நிலை முதலியன பற்றியே வழங்கப்படும். நிலம் வானம் முதலான இடங்களின் பகுதியே அவ்வாறு வழங்குவதற்குக் காரணமாயிருப்பது. அல்லாமல் அதற்குக் காரணமாய்த்திசை என்பது ஒரு பொருளும் உண்டு என்று கொள்ளப்படாது.

## காலம் பல

காலம் பல என்றும் கொள்ளப்படும். பல பொருள்களில் அது தொடர்பு கொண்டு செல்வதால் அப்படிக் கொள்ளப்படுவதில்லை. ஆனாலும். பிற பொருளோடு சார்த்தாமலேயே ஒவ்வொரு பொருளி னிடத்தும் மூன்று காலமும் நடக்கக் காண்கின்றோம். அம்முறையில் காலம் பலவாகக் கொள்ளப்படும்.

காலம் என்பது ஒன்றேயாயிருந்தால் நடத்தல் முதலிய தொழில் களும், நடந்தது நடக்கிறது இனி நடக்கும் என்ற முறையில் இறப்பு நிகழ்வு எதிர்வு ஆகியவற்றால் வேறுபடக்கூடாது. ஆனால் தொழிற் பாடு இவ்வகையில் வேறுபடுகிறது. ஆதலால் இறப்பு முதலியனவாக நடக்கும் தொழிற்பாகுபாட்டிற்குக் காரணம் காலத்தின் பாகுபாடே. ஆகவே காலம் பல,

கதிரவன் போக்கு வரவு முதலியனவும் தொழில்களே. ஆத லால், இறப்பு நிகழ்வு முதலிய தொழிற்பாகுபாடுகள் எல்லாம் காலப் பாகுபாட்டால் அல்லாமல் நிகழா.

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

கதிரவன் செலவு முதலியவற்றைக் கருதாமலே ஒரு குடம் உடைந்தது, உடைகின்றது, உடையும் என்று அறிகின்றோம், பேசுகின்றோம். இவ்வாறு உணர்வதற்கும் பேசுவதற்கும் கதிரவன் செலவு முதலியன காரணம் ஆகா.

நாழிகை கழிந்தது, ...—என்று இவ்வாறெல்லாம் உணர்தலும் உரைத்தலும் கதிரவனின் போக்கு வரவை வைத்தே நிகழ்கின்றன.

நாழிகை முதலான காலப் பாகுபாடுகளே கதிரவன் செலவு முதலியவற்றால் ஆன செயற்கை. இறப்பு நிகழ்வு முதலான காலப் பாகுபாடுகள் கதிரவன் செலவு முதலியவற்றால் ஆகிய செயற்கை அல்ல.

இவற்றாலும் காலம் பல என்றே கொள்ளப்படும்.

## காலம் அநித்தம், ஏகதேசம்

பலவுமாய் அறிவில்லாததுமாய் இருப்பது தோன்றி நின்று அழியும் நிலையிலாப் பொருளே. நிலையிலாதது ஓரிடத்திருப்பது, எங்கும் பரந்துநிற்பது அன்று.

காலமும் பலவாயும் அறிவில்லாததுமான பொருள். ஆதலால் அது நிலையற்றதும் ஓரிடத் திருப்பதுமாகும்.

## நித்தம் ஆவது

கால வரையறைக்கு உட்படாது நிற்பது நித்தம். காலம் நித்தம் அன்று. அக் காலம் கடந்தது நித்தம், ஆதலால் நித்தப் பொருள் அதாவது நிலையாயுள்ளபொருள் உண்டு என்பது தவறாகாது.

## முக்கால உண்மைகள்

இறந்த காலம் எதிர்காலம் போல நிகழ்காலம் எளிதாகப் புலப்படாது. நுட்பமான நிகழ்காலம் நம் அறிவிற்குப் புலப்படாது. ஆனாலும் பருமை நிலையிலான நிகழ்காலம் அறிவிற்குப் புலப்படும்.

### தூல நிகழ்காலம்"/ பரிய நிகழ்காலம்

உள்ளதே தோன்றும் என்பது சற்காரிய வாதம். இக் கொள்கையில் முதற்காரணமும் அதனால் ஆக்கப்பட்ட பொருளும்- பொன்னும் சங்கிலியும்-பொருள் அளவில் வேறல்ல.

குடம் ஒன்று செய்யப்படுவதற்கு முன்பு, இறந்த காலத்தில் மண்பிண்ட வடிவில் இருந்தது. அது உடைந்து போனபின், எதிர் காலத்தில் ஓட்டு வடிவில் ஆயிற்று. பச்சை மண்ணாக இருந்தபோதும் ஓடாகி நின்ற போதும் அது நீர் முகக்கப் பயன்படவில்லை. ஆனாலும் இடைக்காலத்தில் அந்த மண்ணைக் கொண்டே நீர் முகந்தோம். அவ்வாறு முகத்தலுக்கு உரித்தான குட வடிவத்தை மண் பிண்டத்தில் காணோம். ஓட்டிலும் காணோம். ஆனால் குட வடிவம் இருக்கப்போய்த்தான் நீர் முகக்க முடிந்தது.

இல்லாதது தோன்றாதல்லவா. அப்படியென்றால் மண் பிண்டத்திலும் ஓட்டிலும் நம் கண்ணுக்குப் புலப்படாதபடி குடவடிவம் உள்ளது. அது நுண்ணியது. அதுவே இடைக்காலத்தில் நீர் முகத்தற்கு உரித்தாகக் குடம் வெளிப்பட்டு நிற்பதற்கு ஏதுவாகிய காலம் ஆகிய நிகழ்காலம் எனப்படும்.

குடம் முதலியன ஆக்கப் பொருள்கள். ஆக்கப் பொருள்களில் முதல் நிலை, ஆக்க நிலை, அழிந்த நிலை ஆகிய மூன்று நிலைகள் காணப்படும். ஆதலால் அவற்றிற்கு ஏதுவாகிய காலம் மூன்று உள என்பது உறுதியாகிறது.

## 2. நியதி

### நியதி ஆவது

கலை வித்தை அராகம் மூன்றாலும் உயிர்க்குச் செயல் அறிவு விருப்பு ஆகிய மூன்றும் விளங்கும். அவை விளங்கத் தொடங்கியதும் அவ் உயிர் போக நுகர்ச்சியில் செல்லும். போகம் உயர்ந்ததும் உண்டு. தாழ்ந்ததும் உண்டு. உயிர்க்கோ உயர்ந்த போகத்தில் விருப்பு உண்டாகும். இழிவான போகத்தில் வெறுப்பு உண்டாகும்.

இதனால், தன் வினைக்குத் தக வரும் இழிந்த போகத்தில் செல்லாது. பிறர் செய்த நல்வினைப் பயனாகிய உயர்ந்த போகங்களைக் கவர எண்ணும். தனக்கு வரும் இழிந்த போகங்களைத் தவிர்க்க எண்ணும்.

இவ்வாறு எல்லா உயிரும் எண்ணிவிட்டால் அவரவர் வினையால் வந்த இழிந்த போகங்களை அவரவர் நுகர்ந்து கழிக்காது போவர். ஒருவர் நன்மையை மற்றவர் பறிக்க நேரும். இது முறைகேடாகும். படைப்பே பயனற்றுப் போகும்.

ஆதலால், இவ்வாறு முறைக்கேடு உண்டாகாமல் அவரவரால் ஈட்டப்படும் வினையின் பயனை அவரவரே நுகருமாறு, உலகத்து அரசர் ஆணை போல், முறைப்படுத்துச் செய்வது நியதி தத்துவம்.

இது, பால் ஊழ் தெய்வம் விதி என்ற சொற்களாலும் வழங்கப்படும்.

## நியதி உண்மை

மகனுக்கும் தந்தைக்கும் உறவு ஆகிய ஒரு தொடர்பு உள்ளது ஆதலால் தந்தையைக் கருதி மகன் ஒன்று செய்தால் அதன் பயன் தந்தைக்குச் சேரும். அதேபோலத் தந்தை மகனைக் கருதிச் செய்யும் செயலின் பயன் மகனுக்குச் சேரும்.

வயலுக்கு உரியவன் ஒருவன். அவன் ஏவியபடி உழவு செய்பவன் ஒருவன். தொழிலைச் செய்தவன் உழவன். அவன் செய்த செயலின் பயனாகிய விளைபொருள் அவனுக்குச் சேரவில்லை. ஆனால் செய்த தொழிலுக்கு மற்றொருபயனாகிய கூலியை அவன் பெற்றுச் செல்கிறான். அவன் செய்த தொழிலின் முக்கியப் பயனாகிய விளைபொருள் அவனைத் தொழில் புரிய ஏவிய செயலைச் செய்தவனாகிய நிலம் உடையவனுக்குச் சேர்கிறது.

வேள்வித் தொழிலில் வேள்வி செய்ய ஏவியவர் ஒருவர். அவர் ஏவியபடி வேள்வியாகிய செயலைச் செய்தவர் ஒருவர். தொழிலைச் செய்தவர் அதற்குரிய தக்கணையைப் பெற்றுச் செல்லுகின்றனர். அவருக்குரிய பயன் அதனோடு முடிந்துபோகிறது. வேள்வியால் வரும் முக்கியப் பயனை வேள்வி செய்ய ஏவிய தலைவன் அடைகிறான்.

மகன் செய்த வினையின் பயன் தந்தைக்கும் தந்தை செய்த வினையின் பயன் மகனுக்கும் ஆயிற்று. உழவன் செய்த உழவின் விளை பயன் அதனைச் செய்யாத மற்றவனுக்குச் சேர்ந்தது. வேள்வித் தொழிலின் பயன் செய்தவனுக்குச் சேராமல் செய்வித்தவனுக்குச் சேர்ந்தது.

இப்படி ஒருவர் செய்த வினையின் பயன் மற்றவர்க்குச் செல்லுவதைப் பார்க்கும் போது அங்கு முறையாக நடவாதது போலத் தெரியும். இதனால் நியதி என்னும் பொருள் இல்லை என்றாகும். ஆனால் அப்படி அன்று. அங்கும் முறை இருக்கிறது. உறவுத் தொடர்பு, ஏவிய உரிமைத் தொடர்பு, தலைமைஉரிமைத் தொடர்பு ஆகிய ஒவ்வொருவகையான தொடர்பு உள்ளதால்தான் அவ்வப்பயன் அவரவர்க்குச் சேர்ந்தது. ஏதாவது ஒரு தொடர்பு இல்லாமல், ஒருவர் செய்த வினையின் பயன் வேறொருவர்க்கு ஆதல் இல்லை. அப்படித் தொடர்புக்குத் தக்கபடி வினைப்பயனைச் சேர்ப்பது முறையாகிய நியதி. ஆதலால் நியதி தத்துவம் உள்ளது என்பது உண்மையே யாகும்.

மனம் ஒருபால் படாமல் நடுவுநிலையோடு ஆட்சி செலுத்தும் ஒருவன் அரசன். அவனது ஆணை இல்லாவிடில் நாட்டில் வலிமை இல்லாதவர் பொருளை வலிமையுள்ளவர் கவர்ந்துகொள்ளுவர். அதுபோல, நியதி என்பது இல்லாதுபோனால் ஒருவர் செய்த வினையின் பயனை மற்றவர் கவர்ந்து கொள்ளக்கூடும். நடைமுறையில் அப்படியில்லை. ஒருவன் செய்த வினையின் பயன் அவனையே அடையும். அல்லாது போனால் மேலே சொல்லியபடி தொடர்புபற்றி மற்றவர்க்குச் சேரும். இப்படி அல்லாமல் முறையில்லாமல் சென்றடைவதில்லை. ஆதலால், இவ்வாறெல்லாம் ஒழுங்குசெய்யும் நியதி உண்டென்பது உறுதி யாகிறது.

இங்கு ஓர் ஐயம் உண்டாகலாம். இருவினையானது போகத்தைப் பயனாகக் கொடுக்கும். அல்லாமல் அதுவே போகப்பயன் வினை செய்தவனைச் சென்றடையுமாறு செய்யமாட்டாது. ஒருவேளை, அதுவே சென்றடையச் செய்யும் என்று கொண்டால், அதற்கு யாதொரு கருவியும் தேவையில்லாமலே, உடம்பு முதலிய பொருள்களும் தேவையில்லாமலேயே இருவினைகளும் தாமே போகத்தை நுகரச்செய்ய வேண்டும். நடைமுறையில் அப்படி யாருக்கும் வினைப்பயன் நுகர்ச்சி இல்லையே.

அப்படியென்றால் சொல்லப்பட்டவை யெல்லாம் இருவினைகள் தம் பயனை நுகரச் செய்தலுக்குத் துணைக்கருவி ஆகவேண்டும். இவ்வாறு கொள்வதானால் நியதி தத்துவமும் அவற்றைப் போன்ற தொரு துணைக்கருவி என்று கருதுவதால் தவறில்லை. ஆகவே, நியதி இல்லாமல் இருவினைகள் தாமே முறையமைக்க முடியாது என்பது தெளிவு.

முதல்வனது ஆற்றல் அந்தந்தக் கருவிகளை முன்னிட்டு அந் தந்தச் செயல்களைச் செய்யும். அல்லாமல் கருவிகளைக் கொள்ளாமல் தானே முன் நின்று செய்யாது.

ஒருக்கால் அது தானே செய்யும் என்றால், வேறு காரணம் வேண்டாமலே உயிர்களை வீடுபெறச் செய்யவேண்டும். அப்படி யில்லை. ஆதலால் முதல்வனது ஆற்றலும் உயிர்களின் பொருட்டுக் கருவிகளைக் கொண்டே தொழில்புரியும். அந்த முறையில் அது போகத்தை/வினைப்பயன்களை முறை செய்து நுகர்விப்பதற்கு நியதி கருவியாகிறது.

## கலை

### கலை ஆவது

உயிர்கள் ஆணவமலத்தில் மறைப்புண்டு இருந்தும் இல்லா தவை போலச் செயலற்றுக் கிடந்தன. அந்த உயிர்களுக்கு வினைப் பயன் நுகர்ச்சியை ஊட்டக் கருதினான் முதல்வன். அதற்காக அவன் ஆற்றலின் கூறு ஆணவ மல வலிமையில் சிறிது நீக்குகிறது. அவ்வாறு நீக்கும் முறையில் உயிர்களின் செயலாற்றலை விளங்கச் செய்கிறது. இவவாறு செய்வது 'கலை' என்னும் பொருள்.

### பெயருக்குக் காரணம்

கலித்தல் என்றால் நீக்குதல், செலுத்துதல். மல வலிமையைச் சிறிது நீக்குவதால் அதற்குக் கலை என்ற பெயர் வந்தது.

### மல நீக்கம்

மலம் விரிந்து பரந்ததொரு பொருள். அப்படியென்றால்

அதனை நீக்குதல் என்றால் எப்படி? தீயுள்ளது. அதனது ஆற்றல் சுடுவது, தீயைக் கையில் ஏந்தினால் சுட்டுவிடும். ஆனால் கையில் தீயின் சுடும் ஆற்றலைத் தடுக்கும் குளிகை என்னும் பொருளைத் தடவிக்கொண்டு தீயை ஏந்தலாம். அப்பொழுது தீயினால் கை சுடப் படாது. சுடும் ஆற்றலைக் குளிகை தடுத்துவிடுகிறது.

அதுபோல மலத்தின் மறைப்பாற்றலை உயிரின் செய லாற்றலில் தொழிற்படமுடியாதபடி கலை தடுத்துநிற்கும்.

அவ்வாறு தடுக்கும் போதும், முன்வினைக்குத் தக்கபடி, அவரவர் புத்தியின் புறத்தொடர்புக்கு எந்தெந்தப் பொருள் நுகர வருமோ அவ்வவற்றில் செயற்பட்டு நிற்கும் மறைப்பாற்றலை மட்டும் நீக்கும். இதுதான் சிறிதே நீக்குதல் ஆகும்.

## கலை இல்லாமல் முடியாது

புத்தி அறிவில்லாப் பொருள். ஆதலால் அது அறிவுடைய உயி ரால் அல்லாமல் தொழிற்படாது. அப்படிப் புத்தியை ஏற்கெனவே மலத்தில் மறைக்கப்பட்டுக் கிடக்கும் உயிரானது தொழிற்படுத்து வதற்கு ஒரு கருவி இல்லாமல் முடியாது. அங்கு உயிரின் செயலாற் றலை விளங்கச்செய்து அதனைப் புத்தியினிடம் செலுத்துவது கலை. ஆகவே புத்தி தொழிற்பட்டு வினைப் பயனை நுகர்வதற்குக் கலை மிகவும் தேவைப்படுகிறது.

உடம்பு உயிர் நிலைக்களம்கொண்டு இயக்கினால் அல்லாமல் தொழிற்படாது. அதுபோலவே உட்கருவி முதலியனவும் உயிரால் தொழிற்படும். உட்கருவிகளில் ஒன்று புத்தி. முதல்வனது ஆற்றல் அறிவுப்பொருள் ஆதலால் அதுவே புத்தியைத் தொழிற்படுத்தும் என்று சொல்லக்கூடாது.

இந்த முறைமை இல்லையானால், குயவன் முதலியோர் உடம் பிலும் அவர் நிலைக்களம் கொள்ளாமலே, முதல்வன் ஒருவன் நிலைக் களம் கொண்டு தொழில்புரிதல் அளவிலேயே குடம் முதலியன தோன்ற வேண்டும். குயவர் இல்லாமல் கடவுளால்மட்டும் குடம் ஆவதில்லை.

இப்படித்தான் உயிர் இல்லாதபடி முதல்வன் ஆற்றலால் மட்டும் புத்தி முதலிய உட்கருவிகளும் தொழிற்படா.

## கலையின் தொழிற்பாடு

முதல்வனது ஆற்றல் நிலைக்களம் கொள்ளத் தொழிற்படும் தூய கருவிகளே / சிவம் முதலான சுத்த தத்துவங்களே கலை முதலிய கருவிகளைத் தொழிற்படுத்தும் செலுத்து கருவிகள்.

பாசக் கட்டுடைய உயிர்களுக்குத் தூய பொருள்கள் கருவி ஆகா. உயிர்கள் புத்தியைத் தொழிற்படுத்தத் தூய கருவிகளே கருவியாதல் தகும் என்பது பொருந்தாது ...... வித்தை முதலிய கருவிகளுக்கும் இப்படியே.

## வினைமுதல் காரணம்

இப்படிப்பட்ட கலை என்னும் பொருள் ஒரு கருவிக் காரணப் பொருளானாலும், உயிர் ஒரு தொழிலைச் செய்பவனாக ஆவதற்கு உரிய அதன் செயலாற்றலை விளங்கச் செய்து போக நுகர்ச்சியில் செலுத்தித் தானும் நிற்பதால் வினைமுதற் காரணம் என்று சொல்லப்படும்.

### வித்தை

## வித்தை ஆவது

கலையால் செயலாற்றல் விளங்கி வினைமுதல் ஆகிநின்ற உயிர்கள் கலையிலிருந்தும் வித்தை தோன்றும். அது உயிரின் அறிவாற்றலை விளங்கச் செய்யும். அவ்வாறு விளங்கிய உயிரின் அறிவாற்றல் புத்தியை நிலைக்களமாகக் கொண்டு தொழிற்படுத்தும். அப்போது வெளியே உள்ள குடம் முதலான பொருள்களை இது இன்னது என்று புத்தி உறுதிப்படுத்தும். அங்கு உயிரின் அறிவாற்றல் நின்று புறப்பொருள்களை உணரும். இது தன்வேதனைக் காட்சி அறிவு எனப்படும்.

உயிரின் அறிவாற்றல் புத்தியொடு கூடாதபொழுது புறத்துப் பொருள்களை இது இன்னது என்ற தெளிவில்லாமல் ஏதோ பொருள் என்றமட்டில் அறிவது நிருவிகற்பக் காட்சி அறிவு.

மனம் புத்தி அகங்காரம் உட்கருவிகள். மனம் ஒன்றைப் பற்றும், புத்தி ஒன்றை இது என உறுதிப்படுத்தும். அகங்காரம் முனைப்புற்று

மதிக்கும். இவை மனம் முதலியவற்றின் தொழிற்பாடுகள். உயிரறிவு இத்தொழிற்பாடுகளை அறியும் அறிவு ஒன்று.

இங்குச் சொல்லப்பட்ட மூன்றுவகை அறிவிற்கும் கருவியா யிருப்பது வித்தை.

## வித்தை இல்லாமல் முடியாது

குருடு சிறிது நீங்கிய பொழுது கண் ஒளி சிறிது விளங்குகிறது. ஆனாலும் பொருளை அறிவதில் கண் திகைத்து நிற்கும். அல்லாமல் குருடு நீங்கிய பொழுதே புறத்துப் பொருள்களைப் பகுத்தறிய மாட்டாது.

அதுபோல, மலவாற்றல் கலையால் நீங்கியபொழுதில் அறிவாற்றல் விளங்கினாலும் புத்தியைப் பற்றிப் பொருள்களைப் பகுத்துணரமாட்டாது திகைப்புற்று நிற்கும். அந்தத் திகைப்பினை நீக்குவதற்குக் கலையிலிருந்தும் தோன்றிய வித்தையே கருவியாகும். ஆதலால், வித்தை என்னும் பொருளும் மிகவும் தேவைப்படுகிறது.

ஒரு தொழிலுக்கு அமைந்த கருவி மற்றொரு தொழிலுக்குப் பயன்படாது. ஆதலால் மல ஆற்றலை நீக்கிய கலையே அறிவாற்றலின் திகைப்பை நீக்கப் போதாது. வித்தை தேவைப்பட்டது.

நீக்குதல் என்பது இங்கு இரண்டு என்றாலும் அவை ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட தொழில் அன்று. மாறுபடா இரண்டு தொழில்கள் ஒரே கருவியால் செய்யப்படுவதனை உலகத்தில் காணுகின்றோம். அது போல இங்கு மல ஆற்றலை நீக்குதற்கும் திகைப்பினை நீக்குதற்கும் கலை ஒன்றே போதும் எனக் கருதலாம். ஆனால், இங்கு இரண்டு தொழில்களும் ஒருங்கே நிகழ்கின்றன. ஒரு கருவி இரண்டு தொழில்களை ஒரே பொழுதில் செய்யமுடியாது. ஆதலாலும் திகைப்பினை நீக்கத் தனியே வித்தை தேவையாகிறது.

## கலையும் வித்தையும்

மல ஆற்றலை நீக்குவதாகிய கலையே தனது ஒரு பகுதியில் வித்தையாகத் தோன்றித் திகைப்பினை நீக்கும். நீக்கிப் புத்திக்கு அகப்பட்ட பொருளை அறிவதற்குக் கருவியாக நிற்கும். அதனால்

தான் வித்தை மாயையில் தோன்றும் என்று சொல்லாமல் கலையில் தோன்றும் என்று சொல்லப்பட்டது.

## தோன்றும் முறை

இப்படியே பிற பொருள்களும் தம்முள் முதற்பொருளும் ஆக்கப் பொருளுமாக / காரண காரியங்களாக, ஒன்றிலிருந்து ஒன்று தோன்றும். இந்த வகையான தோன்றுமுறை யெல்லாம் நூலாலும் அறியலாம். அத்துடன் வழியளவையாலும் உய்த்துணரலாம்.

## வித்தை செய்வது

வாயில் காட்சி, மானதக் காட்சி என்ற இருவகைக் காட்சி களுக்கும் வாயில்கள் எனப்படும் ஐம்பொறிகளும் நான்கு உட்கருவி களும் கருவிகளாயிருக்கும். சந்தனம், மாலை முதலான வெளிப் பொருள்கள் நுகர்ச்சிப் பொருள்களாயிருக்கும்.

அந்த இருவகைக் காட்சிகளும் நிகழ்ந்தபின் நிகழ்வது தன் வேதனைக் காட்சியறிவு. அதற்குச் சந்தனம் மாலை முதலான வெளிப்பொருள்கள் நுகர்பொருள் ஆகா. காரணம்; அவை இன்பத் துன்பங்களுக்கு ஏதுவாகும் அல்லாமல் இன்பத் துன்பங்களாகிய போக்கியம் ஆகா. தன்வேதனைக் காட்சி அறிவிற்கு இன்பத் துன்பங்களே நுகர்பொருளாகும்.

அதாவது: புத்தியானது சந்தனம் மாலை முதலானவற்றைப் பற்றும். அதன்மேல் அது அப்பொருள்களாகத் திரிபடையும். அவ் வாறு திரிபடைந்த அறிவாகிய புத்தியே தன்வேதனைக் காட்சியறி வுக்கு நுகர்பொருளாகும். அதுவே இன்பத்துன்ப வடிவாகிய நுகர்ச்சி யாம்.

இவ்வாறு ஆதலால், எதனொடும் கூடாது நின்ற புத்தியானது சந்தனம் முதலியவற்றைப் பற்றி அவையவையாகத் திரிந்துநின்று உயிரின் அறிவாற்றலுக்கு நுகர்பொருளாகும். அவ்வாறு அதனை அதற்கு நுகர்பொருள் ஆக்குவதற்குக் கருவி வித்தை என்ற பொருள்.

சிலர் உயிரின் அறிவாற்றலே இந்த இடத்தில் கருவியாகிறது என்று சொல்லுவர். இயல்பாலே உயர்வறஉயர்ந்த இன்பத்தை

நுகர்வதாகிய உயிரின் அறிவாற்றலுக்கு, நான் இன்பம் அடைந்தேன், துன்பம் அடைந்தேன் என்று இன்பத் துன்பம் முதலான அறிவுகளை அறிதல் செயற்கையால் அல்லாமல் முடியாது.

ஆதலால் அறிவாற்றலும் வித்தையொடு சேர்ந்தே கருவியாகும் என்று கொள்ளவேண்டும். இதனால் இதற்குச் சிறப்பாகத் தேவைப்படுகிற வித்தையே அங்குக் கருவியாகிறது என்று கொள்ள வேண்டும்.

...எதிரே காணப்படும் ஒரு பொருளைப் பெயர், இனம் முதலியவற்றால் உறுதிப்படுத்தி அறிவது அப்பொருளைத் தனித்தறியும் சவிகற்பக் காட்சி. இது பொதுமை நிலையில் கண்டறிவதாகிய வேறுபாடு தெரியாத நிருவிகற்பக் காட்சி நிகழ்ந்த பின்தான் நிகழும். இதனால் இப்படிப்பட்டதான நிருவிகற்பக் காட்சியறிவு - வேறுபாடு தெரியாத அறிவு-ஒன்று உண்டு என்பது தெளிவாகிறது,

இது உண்மையானால், அந்த அறிவு நிகழ்வதற்கு ஒரு கருவி தேவை. கண் காது முதலிய பொறிகளே அதற்குக் கருவியானாலும் அவை உயிரின் தொடர்பு இல்லாமல் தொழிற்பட முடியாது.

ஆதலால், வேற்றுமை தெரியாத அறிவின் இடமாக உயிரானது பொறிகளாகிய வாயில்களை நிலைக்களமாகக் கொண்டு தொழில் புரியக் கருவியாய் நிற்பது வித்தையாகும்.

## உயிருக்கு உணர்வின் கருவி வித்தையே

...புத்தி என்னும் உட்கருவியானது ஒன்றை இதுதான் என உறுதிசெய்வது, ஆதலால் வேறுபடத் தெரியாத அறிவுக்கும் புத்தியே கருவி என்று கொள்ளமுடியாது. அப்படிக் கொண்டால் ஒன்றை இது இன்னது எனத் தெரியாத அறிவும் இது இன்னது என்று துணியும் அறிவாகவே முடிந்துபோகும்.

புத்தி தத்துவம் கூடாததால் ஒன்றை உறுதிப்படுத்த முடியாத அறிவும் [நிருவிகற்பம்], அது கூடுவதால் ஒன்றை இது எனத் துணியும் அறிவும் [சவிகற்பம்] உண்டாகிறது. அப்படி இருக்கும் போது புத்தியே இரண்டற்கும் கருவி என்று கொள்ள முடியுமா? முடியாது.

...புத்தியின் தொழிலாகிய நிச்சயமும் அகங்காரத்தின் தொழிலாகிய அபிமானமும் மனத்தின் தொழிலாகிய ஒன்றைப் பற்றுதலும் உயிரறிவுக்குப்படுவதற்கும் கருவியாயிருப்பது வித்தையே. புத்தி முதலியன ஒன்றற்குஒன்று கீழ்ப்பட்டவற்றை நோக்கும்போது அறிவுள்ளவையாகத் தோன்றும். ஆனாலும் அவற்றிற்கு மேலான கருவிகளோடு ஒத்துவைத்தால் இவையெல்லாம் அறிவில்லாப் பொருள்களேயாம் ஆதலால் புத்தி முதலானவை அவற்றவற்றிற்குரிய தொழில் அளவில் செல்லமுடியுமே தவிர அதற்கும் அப்பால் செல்ல முடியாதன. ஆதலால் அங்கும் புத்தி முதலியவற்றைக் கருவிகளாகக் கொள்ள முடியாது.

ஆகவே, இவற்றையெல்லாம் நினைக்கும்போது, எவ்வகையான உணர்வானாலும் அது உயிரினிடத்தில் அறியப்படு பொருளாக வேண்டுமானால் அதற்கு ஒரு கருவியாய் இருப்பது வித்தையே என்பது தெளிவாகும்.

## அராகம்

### அராகம் ஆவது

உயிருக்கு வித்தையின் உதவியால் தன் அறிவாற்றல் விளக்கமாகிறது. உடனே உயிர் உலகப்பொருள்களை அறிய, அனுபவிக்க முனைகிறது. அப்போது அந்த உயிரின் விருப்பாற்றல் விளக்கம் அடைந்தால்தான் உயிர் உலகப் பொருள்களை நுகரமுடியும். அதற்காக வித்தையிலிருந்து அராகம் என்ற ஒரு கருவி தோற்றுவிக்கப்படும். அது உயிரின் விருப்பாற்றலை விளங்குமாறு செய்யும். அவ்வாறு செய்து புத்தியின் குணங்கள் எட்டில் விருப்பு (அவைராக்கியம்) என்ற குணம் உண்டாக ஏதுவாயிருக்கும். அந்த விருப்புக்கு அராகம் என்று ஒரு பெயர். ஆனால் அது புத்தியின் அராகம் என்று, இங்குச் சொல்லப்படும் அராக தத்துவத்திலிருந்தும் வேறாகக் கட்டப்படும்.

(வித்தையில் தோன்றிய அராகம் வேறு. புத்தியின் குணங்களுள் ஒன்றாகிய விருப்பமாகிய அராகம் வேறு. முதலது தத்துவங்கள் முப்பத்தாறில் ஒன்று. மற்றது புத்தி குணங்களுள் ஒன்று, பெயர் ஒற்றுமையால் இரண்டையும் ஒன்றாகக் கருதிவிடக்கூடாது.)

## வித்தையின் பரிணாமம்

இச்சை அல்லது விருப்பு என்பது அறிவிலிருந்து வேறு அன்று. அது அறிவின் ஒரு சிறப்பு நிலை, அதனை விளங்கச் செய்வது அராக தத்துவம். ஆதலால் உயிரின் அறிவாற்றலை விளங்கச் செய்யும் வித்தையிலிருந்து, அறிவின் ஒரு சிறப்பு நிலையாகிய விருப்பாற்றலை விளங்கச் செய்யும் அராக தத்துவம் தோன்றும் என்றது பொருத்தமே.

சிவஞான சித்தியாரில் ஆசிரியர் அருணந்தி சிவம் விச்சையின் அராகம் தோன்றி' [சுபக்.146] என்றார்.

சிவப்பிரகாச ஆசிரியர் உமாபதி சிவம் 'கலை காலம் நியதியுடன் வித்தை அராகம் மாயைதனில் ஆகும்' [சிவப்.26] என்றார்.

பவுட்கரம் முதலிய ஆகமங்களில் அராகம் கலையிலிருந்தும் தோன்றியதாகக் கூறப்படுகிறது.

சிவப்பிரகாசத்தில் மாயையிலிருந்து அராகம் தோன்றியதாகச் சொல்லப்பட்டது. அங்கு மாயை என்றது கலப்பு மாயையை, அதிலிருந்து கலை தோன்ற அதிலிருந்து வித்தை தோன்ற அதிலிருந்து அராகம் தோன்றியது என்ற கருத்தைக் கொண்டே வழிமுறையில் முதற்காரணத்தைச் சொல்லும் முறையில் மாயையிலிருந்து என்று சொல்லப்பட்டது.

இந்த முறையில்தான் வித்தைக்கும் அராகத்திற்கும் ஓரெல்லையில் முதற்காரணம் கலை என்பதால்- கலையிலிருந்து வித்தையும் வித்தையிலிருந்து அராகமும் என்ற முறையை வைத்தே – கலையிலிருந்து அராகம் தோன்றியதாகப் பவுட்கரமுதலிய சில ஆகமங்கள் கூறின. எப்படியும் அராகத்தின் தோற்றம் நேரே வித்தையிலிருந்தே என்பது கருத்து.

கலப்பு மாயை→காலம், நியதி, கலை→வித்தை→அராகம்.



இப்படத்தால் உண்மைக் கருத்தும் சொல்லப்பட்ட முறையும் விளங்கிக் கொள்வீர். இக்கருத்தைக் குறிப்பாக உணர்த்தும் பொருட்டே சிவப்பிரகாசத்தில் 'கலை' காலம் நியதி மூன்றையும் ஒருங்கு சேர வைத்து, 'உடன்' என ஒரு சொல்லால் இடையிட்டுப் பின்னர் வித்தை அராகம் என வைக்கப்பட்டது. புத்தியின் அராகத்திற்கும் அராகதத்துவமே ஏது.

## புத்தியின் அராகத்திற்கும்-அராக தத்துவமே ஏது

உயிரறிவின் சிறப்புநிலைகள் விருப்பு அறிவு செயல் என்ற மூன்றாகக் கூறப்படும். உயிரின் விருப்பாற்றல் புத்தியை நிலைக்களமாகக் கொண்டால் அல்லாமல் புத்தியினிடத்து உள்ள அராகம் என்ற விருப்பம் வெளிப்படாது. அவ்வாறு தோன்றிய புத்தியின் அராகம் தன்னைத் தோற்றுவித்த [எழுப்பிவிட்ட] உயிரின் விருப்பாற்றலை விளக்கும் என்பது பொருந்தாது. அராக தத்துவமே உயிரின் விருப்பு ஆற்றலை விளக்கும் வழியாகப் புத்தியின் அராகத்திற்கும் [விருப்பிற்கும்] ஏதுவாகும்.

## புத்தியின் அராகம்

...நமக்குக் குறிப்பிட்ட பொருளின்மேல் விருப்பம் உண்டாகிறது என்று வைத்துக்கொள்வோம். பொதுவாக நம் உணர்வில் அடங்கிக் கிடக்கும் விருப்பாற்றல் முதலில் சிறிது வெளிப்பட்டால்தான் பின்பு அது குறிப்பிட்ட பொருளின்மேல் செல்லும். அவ்வாறு குறிப்பிட்ட பொருளின்மேல் விருப்பம் உண்டாவதைச் 'சிறப்பு வகையான் விருப்பம் நிகழ்தல்' என்று சொல்லுவர். அது பொதுவாக வெளிப்படுவதைப் 'பொதுமையான் விளங்குதல்' என்று சொல்லுவர்.

உயிரின் அடங்கியிருந்த அறிவாற்றல் வித்தையின் உதவியால் பொதுமையான் விளங்குதலைப் போல, உயிரின் விருப்பாற்றல் பொதுமையான் விளங்குதற்கு மட்டுமே அராக தத்துவம் ஏதுவாகும். அதற்குமேல் ஒவ்வொரு பொருளின்மேலும் விருப்பம் செல்லுவதற்கு அது ஏதுவாகாது.

சிறப்பு வகையால் ஒவ்வொரு பொருளில் விருப்பம் உண்டாகாது போனால் எல்லாப் பொருள் மேலும் சேர்ந்தாற்போல அந்த விருப்பம் நிகழும். அல்லாது சேர்ந்தாற்போலவே ஒரு பொருளிலும் விருப்பம் உண்டாகாமல் இருக்கும். அனுபவத்தில் அப்படியில்லை.

ஆதலால் அராக தத்துவத்தால் பொதுவாக விளங்கிய விருப்பாற்றல் அவ்வப் பொருள் மேல் சிறப்பாக உண்டாவதற்கு ஏதுவாகிய புத்தியின் அராகம் தேவையற்றது என்று சொல்லப் பொருந்தாது

உலகத்துப் பொருள்கள் எல்லாம் முக்குணத்திலிருந்தும் முறையாகத் தோன்றின. ஆதலால் அவை சத்துவ குணம் காரணமாக இன்பவடிவாகவும், இராசத குணம் காரணமாகத் துன்பவடிவாகவும், தாமத குணம் காரணமாக மோக வடிவாகவும் நிற்கும், இதுவே உயிரின் விருப்பாற்றலைப் பொதுவகையாலும் சிறப்பு வகையாலும் உண்டாகச் செய்து உலக அனுபவத்திற்கு ஏதுவாகும் எனச் சிலர் கருதலாம். அது கூடாது.

விரும்புவாரிடத்தில் அவ்விருப்பம் சிறப்புவகையால் உண்டாகாத போது எல்லாப் பொருள்களும் எல்லா உயிர்களுக்கும் ஒரே மாதிரியாக இன்ப வடிவாக நிற்குமே தவிர ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு வகையாக அது வேறுபடாது. அப்போது எல்லார்க்கும் எல்லாப் பொருள்களிலும் ஒரே மாதிரியாகவே விருப்பம் செல்லவேண்டும், அனுபவத்தில் அப்படி இல்லை.

அதுவும் அல்லாமல் அனுபவித்து விட்ட பொருளிலும் தொடர்ந்தே விருப்பம் உண்டாகி மறுபடியும் அதனையே அனுபவிக்க முயலவேண்டும். உலகில், அப்படியல்லாமல் அனுபவித்த பொருள்களில் விருப்பம் நீங்கியவரையும் காணுகின்றோமே.

ஆதலால் பொருள்கள் இன்ப வடிவாயிருத்தலே சிறப்பான விருப்பம் உண்டாவதற்குக் காரணம் என்று கொள்ளமுடியாது.

## இருவகை அராகம்

...அறிவுருவமும் உடன்நிலை யுருவமும் என்று அராகம் இருவகைப்படும்.

புத்தியின் அராகம் அராகத்தின் அறிவுருவம். அராக தத்துவம் அராகத்தின் உடன்நிலை உருவம். அறிவுருவாகிய புத்தியின் அராகமே உலக நுகர்பொருளைப் பற்றிச் செல்லுவது. ஆதலால் அது நீங்கிய பொழுது அப்பொருளின் மேல் விருப்பம் உண்டாகாது. அதனால் அது நீங்கிவிடுதல் கூடும்.

வாதனையுருவமாகிய அராக தத்துவம் உயிரொடு கூடியே நின்றாலும், சிறப்புக் காரணம் ஒன்று இல்லாத போது வெறும் பொதுக்காரணத்தளவில் ஒரு காரியம் தோன்ற முடியாது. ஆதலால் சிறப்புக் காரணமான புத்தியின் அராகம் வேண்டப்பட்டது.

உடனிலையுருவிலுள்ள அராக தத்துவம் நீங்கிவிட்டால் வேறொரு பொருளில் விருப்பம் உண்டாதல் இல்லாது போகும். அனுபவத்தில் வேறுவேறு பொருளில் விருப்பம் உண்டாகவும் பார்க்கிறோம். ஆதலால் அராகதத்துவம் உயிரினிடத்து பிறப்புக்கு உட்பட்ட காலம் தொடங்கி, நீங்காது உடனாய் நிற்கும் என்றே கொள்ளவேண்டும்,

அவ்வாறு உடனிலையுருவில் நிற்கும் அராக தத்துவம் உயிர் முத்தியடைந்த காலத்தில் தனது எல்லைவரை அத்துவ சுத்தி செய்யும் தீக்கையால் பற்றுக்கோடில்லாமல் நீங்கிவிடும். அப்படி நீங்கிவிட்டால் பொருள்களின் மேல் பொதுவாக ஏற்படும் விருப்பமும் உண்டாகாது. அப்பொழுது அங்குச் சிவராகம் என்பது வெளிப்பட்டு உயிரின் விருப்பாற்றலை முத்திக்கு ஏதுவான முயற்சிகளில் உட்படுத்தும்

## வெறுப்புத் தத்துவம் இன்மை

...உயிரினிடம் விருப்பாற்றல் உண்டு. அறிவாற்றல் உண்டு. செயலாற்றல் உண்டு. வெறுப்பாற்றல் என்பதொன்று இல்லை.

உலகத்துப் பொருள்களில் நமக்கு வெறுப்பு உண்டாவதற்குக் காரணமாய் இருப்பது நம் புத்தியில் உண்டான வெறுப்பே யாகும்.

ஆதலால் விருப்பு உண்டாவதற்கு ஏதுவாக அராகம் என்ற கருவி இருப்பது போல வெறுப்பு உண்டாவதற்கு ஏதுவாக வெறுப்பு என்னும் ஒரு கருவி உண்டு எனக்கொள்ள வேண்டாம்.

## அராக தத்துவமும் புத்தியின் அராகமும்

...புத்தியில உண்டாகும் அராகம் (விருப்பு) வெளியுலகத்துப் பொருளை 'இது இன்பத்திற்கு ஏதுவானது. இது துன்பத்திற்கு ஏதுவானது' என்று அறியும் அறிவு உண்டானபின் அல்லாமல் நிகழாது.

வெளிப்பொருளை அவ்வாறு அறியும் அறிவும் புத்தியின் தொழிற் பாட்டால்தான் ஆகும். புத்தியின் தொழிற்பாடு புத்தியில் வந்து பொருந்தும் உயிரின் விருப்பாற்றல் இல்லாமல் நிகழாது. உயிரின் விருப் பாற்றல் விளங்கினால்தான் அது புத்தியோடு பொருந்தும். விருப் பாற்றலை விளங்கசெய்வது அராக தத்துவம். இதுதான் அராக தத் துவம் புத்தியின் அராகத்திற்கு ஏதுவாக அமையும் முறை. கீழ்வரும் முறைமை அறிக.

அராக தத்துவம் உயிரின் விருப்பாற்றலை விளக்கல், அது புத்தி யில் பொருந்தல், புத்தி தொழிற்படல், புறப்பொருளை இது இன் பத்திற்கு ஏது. இது துன்பத்திற்கு ஏது என அறிதல், புத்தியில் அவ் வப் பொருளில் அராகம் உண்டாதல். இதனால் கொள்ளப்படும் முடிவு கள் மூன்று:

1. புத்தியில் வந்து பொருந்துவதற்கு அப்புத்தியில் உள்ள அராகத்தின் வேறாக, உயிரின் விருப்பாற்றல் உண்டு.

2. அவ்வாறு உயிரின் விருப்பாற்றல் பொருந்திய பிறகு புத் தியின் உண்டாகும் தொழிற்பாட்டால் வெளிப்பொருளை அறியும் அறிவு உண்டாக, அதன்பின் புத்தியின் அராகம் உண்டாகிறது. இங்கு இவ் அராகத்தைப் புத்தியின் தொழிற்பாட்டிற்கு ஏதுவா யிருந்த. உயிரின் விருப்பாற்றலே வந்து விளக்கும் என்பது பொருந் தாது. ஆதலால் அதனை விளக்குவதற்கு ஏதுவாக அராக தத்துவம் உண்டு.

3. வெளிப்பொருள்களில் சிறப்பாக உண்டாகும் விருப்பினை விளக்குதற்குப் புத்தியின் அராகமும், அதற்கு மாறான வெறுப்பினை விளக்குதற்குப் புத்தியின் வெறுப்பும் உள்ளன.

இவ்வாறு, புத்தியில் உள்ளதான வெறுப்பின் வேறாக உயிரின் வெறுப்பாற்றல் என்பதொன்று உண்டு என்பதற்குச் சான்று இல்லாத தால் அராக தத்துவம் போல வெறுப்புத்தத்துவம் ஒன்று இல்லை என்று அறிய வேண்டும்.

1. சிலர் உயிரினிடம் வெறுப்பாற்றல் என்பதும் உண்டு என்று சொல்லக்கூடும். பொருள்களில் வெறுப்பைச் சிறப்பு வகையால் விளக்கு தற்குப் புத்தியின் வெறுப்பு எப்படியும்வேண்டும். ஆதலால், இந்த ஒரே செயலுக்கு இரண்டு வேண்டப்படுவது தேவையற்றது.

2. புத்தியில் வெறுப்பு உண்டாவதற்குக் காரணம் முன் கூறிய படி 'இது துன்பத்திற்கு ஏது' என்று அறியும் அறிவே.

3. அந்த அறிவும் உயிரின் விருப்பாற்றல் புத்தியினைப் பொருந்திய அளவிலே புத்தி பொருள்களில் சென்று பற்றும் தொழிலால் உண்டாவதே ஆதலால் வேறு காரணம் வேண்டியதில்லை.

இவற்றால் வெறுப்பாற்றல் ஒன்று தனியே உயிரறிவில் இல்லை என்பது தெளிவாகும்.

## வெறுப்பு அனுபவம்

'நான் துணிவுசெய்தேன்' 'நான் பற்றுக் கொண்டேன்' என்றெல்லாம் உண்டாவன புத்தியின் தொழில்கள். இவை உயிருக்கு அனுபவம். அதுபோலவே 'நான் வெறுத்தேன்' என்பதும் உயிரின் அனுபவம் ஆகிறது.

## பரிணாமம் ஆகும் முறை

இத்தத்துவங்கள் ஒன்று வேறொன்றாகத் திரிவாகும் என்று சொல்லப்படும். திரிவாவது பரிணாமம்.

பரிணாமம் என்பது முதலில் இருந்த நிலையிலிருந்து வேறொரு நிலையில் மாறுவது. பால் தயிராகிறது. தயிர் மோர் ஆகிறது. இப்படி நிலைவேறுபடுவது திரிவு அல்லது பரிணாமம். பால் தயிராகத் திரிந்து விட்டால் அப்போது அது தயிரே. தயிர் பாலாக இருந்து பாலுக்குரிய பயனைச் செய்யாது. மோரும் தயிராயிருந்து அதற்குரிய பயனைத் தராது.

அப்படியானால், மாயை காலமும் நியதியும் கலையுமாகத் திரிந்தபின் திரிந்த நிலையில் இருந்து மயக்கும் தொழிலைச் செய்யும் என்று சொல்வது பொருந்துமா?

கலை வித்தையாகத் திரிந்தபின் கலையாகவும் இருந்து செயலாற்றலை விளக்கும் என்று சொல்லலாமா? பின்னர் மூலப்பகுதியை அது தோற்றுவிக்கவும் செய்யும் என்றலும் ஆகுமா?

வித்தை அராகமாகத் திரிந்தபின் அது அறிவாற்றலை விளக்கும் என்பதும் தகுமா?

இப்படிக் கூறப் பொருந்தாது. ஆனாலும், இங்குச் சொல்லப்பட்ட திரிபு பால் தயிராவது போல முழுவதும் திரிந்த திரிபு அன்று. ஒவ்வொன்றிலும் ஒரு சிறு பகுதியே திரிவடைகின்றது.

அப்போது மாயையிலும், கலையிலும், வித்தையிலும் திரிபடையாத பகுதி இருக்கிறதல்லவா? அந்தந்தப் பகுதி மயக்குதலும், செயலாற்றலை விளக்குவதும், மூலப்பகுதியைத் தோற்றுவித்தலும், அறிவாற்றலை விளக்குவதும் செய்யும். ஆதலால் இந்த அடிப்படையில் சொல்லும்போது அது பொருந்தும்.

பிற, மூலப்பகுதி முதலியன பரிணாமம் ஆகும் முறையும் தூமாயையின் விருத்தி ஆமாறும் இதுபோலவே அறிந்து கொள்க.

## பஞ்ச கஞ்சுகம்

மேலே சொல்லப்பட்ட கருவிகளுள் அராகம் உயிரின் விருப்பாற்றலை விளக்கியும், வித்தை அறிவாற்றலை விளக்கியும், கலை செயலாற்றலை விளக்கியும் உயிரை உலக நுகர்ச்சியின் பொருட்டுப் புத்தி தத்துவத்தில் செலுத்தும்.

நியதி 'இதனையே நுகர்க!' என்று நுகர்ச்சியில் உயிரை அமர்த்தி நிறுத்தும்.

காலம் 'இதனை இவ்வளவு பொழுது நுகர்க' என்று நுகர்ச்சியினிடத்து வரையறுத்துச் செலுத்தும்.

இவ்வாறு இவை ஐந்தும் உயிர்க்கு உதவியாக, மற்றைய கருவிகளைப் போல உயிர் நிலைவேறுபடுதற்கு ஏதுவாய் இடையிடையே கூடுவதும் நீங்குவதும் இல்லாமல், எக்காலத்தும் உயிரின் உடனாய்ச் சட்டை போலாகி அவ்வுயிரைக் கட்டிநிற்கும். ஆதலால் இவை ஐந்தும்-காலம் நியதி கலை வித்தை அராகம்- அஞ்சு கஞ்சுகம்/ ஐந்து சட்டை என்று ஏற்றியுரைக்கப்படும்.

# புருடன்

## புருடன் ஆவது:

கலை முதலிய கருவிகள் ஐந்து. அவை ஐந்தும் உயிர்க்குச் சட்டைபோல ஆயிற்று. அவற்றொடு கூடிய உயிர் இனி உலகப் பொருள்களை நுகர்வதற்குரிய தகுதியை அடைகிறது. தகுதியை அடைந்தால் மட்டும் போதுமா? அவற்றை நுகர்வதற்கு ஓர் ஊக்கம், ஒரு முனைப்பு ஏற்பட வேண்டாமா? அதற்கு ஏதுவாக ஓர் ஐந்து வகைத் துக்கங்களை உடையவன் ஆகின்றான். அந்த ஐவகைத் துக்கங்களும் நூல்களில் பஞ்சக்கிலேசம் எனவும் பும்ஸ்துவ மலம் எனவும் சொல்லப்படும். உயிரையே இவற்றோடு பொருந்திய நிலையில் 'புருடன்' என்ற பெயரால் குறிப்பிடுவர்.

# பஞ்சக் கிலேசம்/ஐவகைத் துக்கம்

## இவையும் மலமே

1. அறியாமை/அவிச்சை. நிலையாதவற்றை நிலையானவை என்று எண்ணுகின்றோம். கலப்புடையதைக் கலப்பற்றது/ மாசுடையதை மாசில்லாதது என நினைக்கிறோம். துன்பத்தை இன்பமாகக் கருதுகிறோம். நாம் அல்லாத பொருளை நாம் என்றே எண்ணிக் கொள்கிறோம்.

இப்படியெல்லாம் அறிவது ஒன்றை வேறொன்றாகக் காண்பதாகும். இது திரிபு உணர்வு. இதுவே அறியாமை/ அவிச்சை என்று சொல்லப்படும்.

2. அகங்காரம் / ஆங்காரம். அறியாமை காரணமாக அப் பொருள்களை 'நான்' என மதிப்பது அகங்காரம் ஆகும்.

3. அவா. அகங்காரத்தால் 'எனக்கு இது வேண்டும்' என்று உண்டாகும்உணர்வே அவா எனப்படும்.

4. ஆசை. அந்த அவாத் தன்னளவில் நில்லாது அப்பொருளின் மேல் சென்று பற்றுவது ஆசை.

5. கோபம். ஆசைப்பட்டது பெறத் தடைப்பட்டால் எழும் வேகம் கோபம் ஆகும்.

இவை ஐந்தும் உயிருக்கு ஐவகைத் துக்கமாகச் சொல்லப்படும்.

## மூன்றனுள் ஐந்து

சொல்லப்பட்ட ஐந்தினையும் மூன்றற்குள் அடக்கியும் கூறுவர். அவை காமமும் வெகுளியும் மயக்கமும் ஆகும்.

மயக்கம்→அறியாமை, அகங்காரம்
காமம் →அவா, ஆசை
வெகுளி→கோபம்

'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.' [குறள்-360]

என்பது வள்ளுவர் வாய்மொழி.

## சகலரே புருடன்

விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று மூவகையாகச் சொல்லப்பட்ட உயிர்களில் சகலருக்கே இங்குச் சொல்லிய அறியாமை முதலான ஐந்தும் உண்டு. மூலப்பகுதியின் ஆக்கங்களாகிய உலகப் பொருள் நுகர்ச்சிக்கு ஏது ஆவன அறியாமை முதலியன. மாயைக் கட்டும் உடையவர் சகலரே. ஆதலால் சகலர்க்கே இவை ஐந்தும் உண்டு. இதனால், விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் புருட தத்துவம் என்ற பெயரைப் பெறார்.

## உயிர் புருடன் ஆவது

உயிர் புருட தத்துவம் ஆவதற்குக் காரணம் கலை முதலியவற்றின் தொடர்பே போதும், அறியாமை முதலியவை தேவையில்லை என்று சிலர் கூறுவர்.

அப்படியென்றால், கலை முதலியவற்றை உடைய பிரளயாகலரும் மூலப்பகுதியில் உண்டான பொருள் நுகர்ச்சிக்குரிய புருட தத்துவமும் ஆவார் என்றாகும். அது தவறு.

இன்னும் சிலர் அறியாமை முதலியன போதும், கலை முதலியன தேவையில்லை என்று சொல்லவுங்கூடும்.

உயிர் பொதுவகையால் நுகர்தகுதி அடைந்த பிறகே சிறப்பு வகை நுகர்தகுதியைப் பெறமுடியும். பொதுவகை நுகர்தகுதிக்கான செயல் அறிவு விருப்பங்களின் விளக்கத்தை உண்டுபண்ணுவன கலையும் வித்தையும் அராகமும். சிறப்புவகை நுகர்தகுதிக்கு ஆவன அறியாமை அகங்காரம் முதலியன. கலை முதலியன வேண்டாம் என்றால் உயிர் பொதுத் தகுதியே பெறுவதில்லை. பொதுத் தகுதி பெறாதபோது சிறப்புத் தகுதிக்குரிய ஏதுக்கள் இருந்தும் பயன் என்ன?

ஆகவே, கலை முதலியனவும் அறியாமை முதலியனவும் ஆகிய இரண்டுமே வேண்டும். இரண்டும் பொருந்திய நிலையில் உயிர் புருட தத்துவம் ஆகி மூலப் பகுதியின் பொருள் நுகர்ச்சிக்கு உரியவன் ஆகிறான்.

அறியாமை முதலிய ஐந்தும் அடுத்துச் சொல்ல வரும் மூலப் பகுதியில் உண்டானவையாகும்,

## மூலப் பகுதியின் முன்னர்ப் புருடன்

1. ஒடுக்க முறையில் ஐவகைத் துக்கமாகிய மாசு நீங்குவதே புருட தத்துவத்திற்குத் தூயநிலை ஆகும். துக்கவகை நீங்குதல் மூலப் பகுதியைத் தூயதாக்கிய பின்பேயாம்.

2. புருட தத்துவத்தில் உள்ளனவாகச் சொல்லப்படும் உலகங்கள் மூலப்பகுதியின் மேலிடத்தில் உள்ளன. அவை தூயன ஆவது மூலப்பகுதியில் உள்ள உலகங்களைத் தூய்மைசெய்த பின்னரேயாம்.

3. புருடன் மூலப்பகுதியை நுகரும் முதன்மையை உடையவன்.

மூலப் பகுதியில் உள்ள துக்க வகையை உடையவன் என்பதால் உயிர் புருட தத்துவம் ஆகிநிற்பது மூலப்பகுதியின் தோற்றத்திற்குப் பின்பே ஆகும். அந்தமுறையில் கலை வித்தை அராகம் மாயை புருடன் என்று வரிசைப்படுத்த வேண்டும்.

ஆனாலும், மேற்கூறப்பட்ட காரணங்களால் புருட தத்துவத்தை மூலப்பகுதியாகிய மாயைக்கு முன்னராக அராக தத்துவத்தைச் சார வைத்து எண்ணப்பட்டது.

## உயிர்,புருடன்-சித்தும் சடமும்

ஐந்து சட்டையும் ஐவகைத் துக்கமும் உயிர் பொதுவகையாலும் சிறப்பு வகையாலும் நுகர்தகுதி பெறுதற்கு ஏதுவாகும். இக்கருத்து எல்லாரும் ஏற்றுக் கொள்வது.

ஆனால் புருட தத்துவம் என்பது உயிர் அன்று. அது வேறு. அது கலை முதலான ஐந்து கருவிகளும் கூடிய பொதுமைநிலையில் தோன்றுவது. உயிரின் நுகர்தகுதிக்குக் கருவியாகவும் உயிரில் பொருளாகவும் இருப்பது. இப்படிக் கூறுவார் உளர். ஆனால் இக் கருத்து ஏற்றுக் கொள்ளக் கூடியது அன்று.

உயிர் அகன்றது. ஆனாலும் புருட தத்துவம் என்று பெயர் பெறுதற்கு ஏது ஆகிய நுகர்தகுதியை நீங்குதல் மூலப் பகுதி தூய தாக்கப் பெறுதலுக்குப் பின்பே ஆம். அதனால் புருட தத்துவத்தை மூலப் பகுதிக்கும் அராக தத்துவத்திற்கும் இடையில் வைத்து எண்ணப்பட்டது.

உயிர் புருடன் ஆவதற்கு ஏதுவாய் அமைந்தன தத்துவங்கள் அவையெல்லாம் அறிவு இல்லாதன. சார்ந்ததன் தன்மையாய் நின்றது புருட தத்துவம். அதனால் அதனையும் இந்த இடத்தில் இந்த அளவில் அறிவில் பொருளாக ஏற்றிச் சொல்லப்பட்டது. தத்துவங்களோடு அதனையும் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டது.

புருடன் உண்மையில் அறிவுப் பொருளே. இடத்திற்குத் தக்க ஏற்றுரையால் அறிவிலாப் பொருள். இக்கருத்தினை அருணந்தி சிவம் 'சித்து அசித்து ஆன்மா ஒன்று' [சித்தி. சுபக். 159] என்று எடுத்துரைத்தார்.

## புருட தத்துவத்தில் புவனங்கள்

'கங்கையில் உள்ளது இடைச்சேரி' என்று ஒருவன் சொன்னான், கங்கை ஓர் ஆறு. ஆற்றில் எப்படி ஒரு சேரி இருக்கும்? இருக்காது. அப்படியென்றால் அதன் கருத்து என்ன?

கங்கை என்றது சொன்னவன் கருத்தில் ஆற்றைக் குறிக்க வில்லை. ஆற்றின்கரையையே குறித்தது. சொல்லிய சொல் அப்படி கங்கையாற்றின் கரையில் உள்ளது இடைச் சேரி என்று கருதினால் தவறில்லையல்லவா?

அதுபோலவே, புருட தத்துவத்தில் புவனங்கள் உள என்றால் புருட தத்துவத்தில் என்று கருதவேண்டாம். புருடன் உண்மையில் அறிவுடைய உயிர். உயிரில் உலகங்கள் இருக்கமுடியாது.

புருட தத்துவத்திற்கு அடுத்துப் பக்கமாக இருப்பது மூலப்பகுதி. கங்கை என்றது கங்கையை அடுத்துள்ள கரையை உணர்த்தியது போல இங்குப் புருடன் என்றது ஆகுபெயராய் அதன் பக்கமாக உள்ள மூலப்பகுதியை உணர்த்தும். அந்த மூலப்பகுதியாகிய பிர கிருதி மாயையில் புவனங்கள் உள்ளன என்பதே கருத்து.

பவுட்கர ஆகமத்திலும் இது சொல்லப்பட்டது. [இதனால் புருடன் என வேறு ஓர் தத்துவம்-புவனங்களை உடையதான வேறு ஓர் தத்துவம்- இல்லை என்பதும் தெளிவாகும்.

## புருட சுத்தி

உலக நுகர்நிலை நீங்குதலே புருடனுக்குத் தூயநிலை. காலாக்கினி ருத்திர புவனம் என்றது முதல் கலை வரையும் நுகர் நிலைமை உண்டு.

அத்துவ சோதனை என்ற தீக்கை நிகழ்ச்சியில் காலாக்கினி ருத்திர புவன சுத்தி முதல் சீகண்ட ருத்திர புவன சுத்தி வரை சிறப் பாக உண்டாகும் நுகர்நிலைகள் அறவே நீங்கும். கலை முதலிய வற்றின் சுத்தி வரை பொதுவாக உண்டாகும் நுகர்நிலையும் அறவே நீங்கும்.

சிவப்பிரகாசத்தில்,

'மெய்வகைய கலாசுத்திதனில் இதற்கும் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பிய நூல் விளம்பும்'

என்று கூறியது இக்கருத்தே

உயிர் உலக போகங்களை நுகர்வோன் ஆதல் தன்மை நுகர் நிலைமை/போத்திருத்துவம் எனப்பட்டது.

# மூலப்பகுதி

## ௪. மூலப்பகுதி ஆவது

மேலே கூறியபடி கலை முதலான ஐந்து சட்டை உடையவனாகி உலகப்பொருள் நுகர்ச்சியில் முனைந்து நின்ற உயிர்க்கு நுகர் பொருள்கள் வேண்டுமல்லவா? குணம் முதலாக நிலம் முடிவாக உள்ளவை நுகர்பொருள்கள். இவை முறையாகத் தோற்றுவிக்கப் படும். அதற்கு ஏதுவாகக் கலையிலிருந்து மூலப் பகுதி என்னும் ஒரு முதற் பொருள் உண்டாகும்.

சீகண்டருத்திரர் என்ற ஒருவரது ஆற்றலால் மூலப்பகுதியிலிருந்து குணம் என்னும் தத்துவம் தோற்றுவிக்கப்படும்.

முன் சொல்லப்பட்ட அறியாமை முதலான ஐவகைத் துக்கம் உருவாகக் காரணமாயுள்ளது இக்குணதத்துவம்.

## ௨ பெயர்கள்

நுகர் பொருள் உருவமாய் நின்ற தத்துவ உலகங்களுக் கெல்லாம் இது மூல காரணம் ஆகும். அதனால் இதற்கு மூலப்பகுதி என்றும், பிரகிருதி மாயை என்றும், பிரதானம் என்றும், மான் என்றும் பெயர் வழங்கப்பட்டது.

குணங்கள் மூன்று. சத்துவம் இராசதம் தாமதம் என்பன. அவை மூன்றும் மயில் முட்டையில் உள்ள நீரில் மயிலின் ஐந்து நிறங்களும் விளங்காமல் இருப்பது போல விளக்கம் இல்லாமல் நுட்பமாக இருக்கும். அந்த நிலையில் அது அவ்வியத்தம் என்றும் சொல்லப்படும்.

## மூலப்பகுதியும் முக்குணமும்

...முக்குணங்களும் விளங்கித் தம்முள் சமமாய் நின்ற நிலையில் குணதத்துவம் ஆகும். அவை விளங்குதல் இல்லாமல் நுட்பமாய் நின்ற நிலையே மூலப்பகுதி ஆகும்.

...காரியத்தில் சிறப்பாக நிகழும் குணங்கள் காரணத்தில் பொதுவாக நிகழ்ந்தே உண்டாகும். இதுவே முறைமை ஆதலால், ஓசை முதலிய குணம் சிறப்பாக நிகழும் ஐந்து பூதங்கள், அவை பொதுவாய் நுட்பமாய் நிற்கும் ஐந்து தன் மாத்திரைகளை இடையிட்டே தோன்றும். அல்லாமல் நேரே பூதாதி ஆங்காரத்தில் தோன்றா.

ஒரு பொருள் பற்றிய பெயர் இனம் முதலிய உணர்வுகள் சிறப்பாக உண்டாகும் சவிகற்பக் காட்சி, அவை பொதுவாக நுட்பமாக நிகழும் நிருவிகற்பக் காட்சியில்லாமல் நேரே அறிவில் தோன்றிவிடா.

சிறப்பாகத் தோன்றும் மத்திமை வாக்கு பொதுவாக நுட்பமாக நிகழும் பைசந்தி வாக்குத் தோன்றி அதன் மேல் தோன்றுமே அல்லாமல் சூக்குமை வாக்கிலிருந்து நேரே தோன்றுவதில்லை.

இவை போலவே, இன்பம் துன்பம் மோகம் ஆகிய உருவாய்ச் சிறப்பாகத் தோன்றும் குணதத்துவமும் அவற்றை முறையாக உள்ளொடுக்கி, நுட்பமாய்ப் பொதுவாகத் தோன்றும் ஒன்றன் வழியில் தான் தோன்றும். அல்லாமல் நேரே கலையிலிருந்து தோன்ற முடியாது. ஆதலால் அப்படி நுட்பமாயுள்ள மூலப்பகுதி ஒன்று உண்டு என்பது நூலால் மட்டும் அல்லாமல் ஆராய்ச்சியறிவாலும் தெரிந்து கொள்ளலாம்.

## கலையிலிருந்தே மூலப்பகுதி

மூலப் பகுதி கலையிலிருந்தே தோன்றியது. அல்லாமல் அது மாயையிலிருந்து தோன்றியது என்று சொல்லலாமா?

1. அப்படிச் சொன்னால் அது கலையுள் அடக்கம் ஆகாது. அப்போது கலையால் விளங்கும் உயிரின் செயலாற்றலுக்கு நேரடியான நுகர்ச்சிக்கு ஆகாது. கலைக்குள் அடங்காமல் மாயையிலிருந்தே தோன்றிய காலமும் நியதியும் போல வேறுவழியால் அது உயிருக்கு உதவியாகும். அது பொருந்தாது.

2. இன்னும், தனியாய் நிற்கும் கலையை நோக்க, முக்குணங்களை முறையாக ஒடுக்கி விளக்கமில்லாமல் நிற்கும் நிலை பருமை நிலையாகும்.

இக்காரணங்களால், அப்படிப்பட்ட மூலப் பகுதி மாயையிலிருந்து நேரே தோன்றாமல், மாயையின் ஆக்கங்களுள் ஒன்றாகிய கலையிலிருந்து தோன்றுதலே பொருத்தமாகும் என்பது தெரியலாம்.

மூலப்பகுதி குணங்கள் விளக்கமில்லாது நிற்பதொன்று ஆதலால் அதனில் சொல்லப்படும் புவனங்களும் குணதத்துவத்தின் தலையில் உள்ளன என்று கொள்ளவேண்டும்.

## புத்திக் காட்சியும் மானதக் காட்சியும்

ஒரு பொருளை பிற பொருளிலிருந்து வேறுபடத் தெரியும் துணிபு அறிவு புத்தியினிடத்தில் நிகழ்வது. ஆனாலும் முதலில் அப்பொருளைப்பற்றிய அறிவு மனத்தில் பொதுவாக ஏற்பட்டுத்தான் பிறகு முறையாகப் புத்திக்கு வருகிறது. புத்தியின் தொழிற்பாடு தொடக்கத்தில் மனத்தின் தொழிற்பாட்டை வைத்தே தொடர்ந்து வருவதால் துணிபு அறிவினை மானதக் காட்சி என்றும் சொல்லலாம். அப்படிச் சொல்லும் போது மானதக் காட்சி என்பது ஆகு பெயராக நின்று புத்திக் காட்சியையே உணர்த்தும்.

இக்கருத்தைக் கொண்டே சிவஞான சித்தியாரில்,

'புந்தியை மனம்அது என்றும்
மனம்அது புந்தியென்றும்...
வந்திடும்' (சுபக்.218)

என்று சொல்லப்பட்டது.

## தொடர்ச்சிக்குப் பற்றுக்கோடு புத்தி

...நுகர்ந்த பொருளைப் பின் நினைக்கவும் செய்கின்றோம். நினைவுக்கும் வருகிறது. அது நினைவில் வருவதற்குக் காரணம் அந்த நுகர்ச்சியின் நுண்ணியதோர் மாற்றுருவத் தொடர்ச்சி. அந்தத் தொடர்ச்சிக்கு இடமாக இருப்பது புத்தியே. உயிர் அன்று.

## புத்தியில் ஞானம் உண்டாதல்

புத்தி உயிரில்லாத பொருள். ஆனாலும் அது சத்துவ குணத்தால் மிகுந்து உண்டானது. ஆதலால், அறிவுடைய உயிருக்கு அது

எதிர்முகம் ஆன பொழுது, கண்ணாடியில் நம் நிழல் தெரிவது போல அதனிடம் உயிரின் எதிர்உருவாகும். அந்த நிலையில் உயிரின் அறிவு அவ்விடத்தில் தோன்றும்....

## புத்தியின் குணங்கள்

புத்தியின் குணபாவங்கள் எட்டு. அவற்றில் அறம், அறிவு, வெறுப்பு, செல்வம் என்ற நான்கும் சத்துவ குணத்தால் ஆவன.

பாவம், அறியாமை, வறுமை என்ற மூன்றும் தாமத குணத்தால் ஆவன. விருப்பு மட்டும் இராசத குணத்தால் ஆவது.

மோகத்திற்குச் செல்வமும் ஒரு காரணம் ஆவதால் அதுபற்றிச் செல்வமும் தாமத குணத்தால் ஆவது என்று சில ஆகமங்கள் கூறுகின்றன.

சொல்லப்பட்ட எண் குணங்களின் வேறு பெயர்கள் : தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம்; அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம்; அநைவசுரியம்.

### 1. அறம்

இது இயமம் நியமம் என்று இருவகைப்படும்.

1. இயமம் : கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, பிரமசரியம், அகம்தூய்மை-ஆகிய ஐந்து வகை.

2. நியமம் : வெகுளாமை, வழிபாடு, புறம்தூய்மை, உவகை, செப்பம்-ஆகிய ஐந்து வகை.

இந்தப் பத்து வகையும் வேள்வி முதலிய அறம் செய்பவர்க்குச் சிறப்பாக வேண்டப்படும் உறுப்பு ஆகும். இன்னும், கண்ணோட்டம், அறிமடம், ஒப்புரவு, நட்பு, நடுவுநிலைமை முதலிய எல்லாம் அந்தப் பத்துவகையுள் அடங்கும்.

### 2. அறிவு

இது எட்டுவகைப்படும்

1. முன்தொடர்ச்சி யடிப்படையில் முன்னுக்குப் பின் முரண் படாமல் பொருத்தமான வகையில் பொருள்களை ஆராய்ச்சி செய்து ஊகித்து அறியும் அறிவு.

2-4 உலகத்து இயற்கைப் பொருள்களாலும், பிற உயிர் களாலும், தெய்வத்தாலும் நமக்குத் துன்பங்கள் உண்டாகும். இந்த மூன்று வகைத் துன்பங்களின் அனுபவத்தால் உண்டான தளர்ச்சி யால் அறிவு விளக்கம் பெறுவதும் உண்டு. இந்த வகையில் உண்டாகும் அறிவு மூன்று.

5. நண்பர் சொல்லும் மெய்ம்மொழியால் உண்டாகும் அறிவு.

6–7 நூல்களைத் தானே கற்று உணர்வதாலும், ஆசிரியனை வழிபட்டுக் கற்றுணர்வதாலும் விளங்கும் அறிவுவகை இரண்டு.

8. ஈதல் முதலிய நல்வினைகளைச் செய்வதால் வரும் அறிவு.

அறிவு இவ்வாறு எட்டுவகை. அதனால் உண்டாகும் பயனும் எட்டு வகைப்படும்.

## சித்தி-பேறு எட்டு

1. உலகாயதர் பூதங்களின் சேர்க்கையாகியது உடம்பு; அவ் உடம்பே உயிர்-என்று சொல்லுவர். பூதங்களுக்கு அப்பால் உள்ள தத்துவங்களை அறியும் அறிவு அவர்க்கு இல்லை. ஆதலால் அவரெல் லாம் பூத உலகத்தில் முத்தியைப் பெறுவர்.

உயிர்க் காற்றை உயிர் என்று கருதுவாரும் [கவுளர்] பூத உலகில் முத்தி அடைவர்.

சோதிட நூலார் நாள்மீன் உலகில் - நட்சத்திர மண்டலத்தில் சென்றடைவதே முத்தி என்று கொள்ளுவர். ஆதலால் அவரும் பூத உலகத்தில் முத்தி அடைவர்.

2. மிருதி நூலார் ஐந்து பூதங்களுக்குக் காரணமாக இருப்பது பிரமப் பொருள் என்று கொண்டவர். உண்மையில் அக்காரணப் பொருள் தன்மாத்திரையே. அவரெல்லாம் தன்மாத்திரைக்கு அப்பால் உள்ள தத்துவங்களை உணரவில்லை. ஆதலால் அவர் தன் மாத் திரையையே பிரமம் எனத் தவறாகக் கருதிவிட்டாமையால் தன் மாத் திரை உலகத்தில் முத்தியைப் பெறுவர்.

3. உலகாயதரில் ஒரு சாரார் ஐம்பொறிகளையே உயிர் என்று கருதுவார். ஒரு சாரார் சித்தமே உயிர் என்பார். மற்றொரு சாரார் மனமே உயிர் என்பார். வேறும் சிலர் அகங்காரமே உயிர் என்பார். இவரெல்லாம் அந்தந்த உலகத்தில் முத்தியை அடைவர்.

4. புத்தர் புத்தியின் பரிணாமம் ஆகிய அறிவே உயிர் என்று கொள்வர். நையாயிகர் அந்த அறிவே உயிரின் குணம் என்பர். ஆதலால் புத்தரும் நையாயிகரும் புத்தி தத்துவ உலகத்தில் முத்தியைப் பெறுவர்.

5. சமணர் உண்டும் ஆம், இல்லையும் ஆம் என்பது முதலாக ஏழு வகையாய்ப் பல முடிவுகள் பேசி நிற்பர். அதனில் மிகுந்தும் குறைந்தும் நிற்பதுபற்றி அவ்வாறு கூறுவர். அதற்குப் பொருத்தமானது குணதத்துவம். குணதத்துவத்தை அவர் உயிர் என்று எண்ணிக் கொண்டனர். ஆதலால் அவர் குணதத்துவ உலகத்தில் முத்தியைப் பெறுவர்.

6. பாஞ்சராத்திரிகள் நிலம் முதலான இருபத்து நான்கு தத்துவங்களுக்கும் அப்பால் உள்ள பொருளை நாராயணன் என்பர். அவர் சுட்டும் பொருள் உள்ளபடி மூலப்பகுதி. மூலப்பகுதியையே உண்மை தெரியாத நிலையில் 'நாராயணன்' எனக் கொண்டனர். ஆதலால் அவர் மூலப்பகுதி உலகத்தில் முத்தியைப் பெறுவர்.

7. ஏகான்ம வாதிகள் முன் சொல்லியுள்ளபடி பொது வகையாலும் சிறப்பு வகையாலும் உலகநுகர் தகுதியடைந்துள்ள புருடன் என்ற தத்துவத்தோடு நின்றனர். ஆதலால் அப் புருட தத்துவத்தில் முத்திபெறுவர்.

8. சாங்கியர் புருட தத்துவத்திற்கு மேல் உள்ள பொருள்களை அறியார். ஆதலால் பொதுவகையால் நுகர்தகுதி பெற்று நின்ற புருடதத்துவத்தில் முத்தியை அடைவர்.

இவ்வாறு புறப்புறச் சமயத்தாரும் புறச் சமயத்தாரும் அந்த அந்தத் தத்துவங்களில் முத்தியைப் பெறுவர். (இவையெல்லாம் உண்மையான முத்தி அல்ல.)

அது அதுவே முத்தி என்றும், அதுஅதுவே முடிந்தகொள்கை என்றும் கொள்ளுவார்க்கு அவரவர் அறிந்த எல்லை வரையிலும்

செல்லுதல் கூடும். தாம் அறியாத எல்லைக்குச் செல்ல இயலாது. ஆதலால் அந்தந்தத் தத்துவங்கள் அவரவர்க்கு முத்தியிடம் ஆயின.

பூதம் தன்மாத்திரை பொறி சித்தம் மனம் அகங்காரம் புத்தி குணம் மூலப்பகுதி புருடன் என்ற பத்து இடங்களும் புறப்புறச் சமயத்தாரும் புறச் சமயத்தாரும் பேறடையும் இடம் பத்தாகும். இதனால் எட்டுவகைச் சித்திகளும் பத்து இடங்களிலும் ஆகும் முறையில் சித்திகள் எண்பதாக விரியும்.

புத்தி தத்துவத்தின் பரிணாமமான அறிவு எட்டுவகை, அந்த எட்டு வகை அறிவால் அடையப் பெறும் பேறும் எட்டு வகை. அந்த எட்டுந்தான் மேற்காட்டியவாறு இடத்தால் எண்பதாயிற்று.

## புருட தத்துவத்திற்கு மேலான முத்தித் தானங்கள்

...புருட தத்துவத்திற்கு மேலும் அராகம் முதல் கலப்பு மாயை (மோகினி) முடிய உள்ள தத்துவங்களும், அதற்குமேல் சுத்த வித்தை முதல் சிவ தத்துவம் முடிய உள்ள தத்துவங்கள் ஆகியவையும் அது அதுவே முத்தி என்று கருதிக் கொள்ளும் அகப்புறச் சமயத்தார்க்கும் முறையே முத்தித்தானம் ஆகும்.

சத்துவகுண வடிவாகிய புத்தி தத்துவத்தின் தொழில் மூலப் பகுதி புருடனுக்கு மேல் செல்லமாட்டாது. ஆதலால் அங்கு அடையப் பெறும் பேறுகளுக்குக் காரணம் முறையாக வந்து சேரும் மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதாம் முதலாகப் பல வேறு வகைப்பட்ட அருட் பதிவே - அருள் வீழ்ச்சி-சத்தி நிபாதம்-ஆகும்.

இவ்வாறு ஆதலால், புத்தியின் குணம் ஆன அறிவால் அடையப் பெறும் சித்தி என்த் தொகையாகச் சொன்னால் ஒன்றே. ஊகித்தல் முதலிய காரண வேறுபாட்டால் எட்டாகும், பூதம் முதலிய இட வேறுபாட்டால் விரியால் எண்பதாகும்.

## 3. வெறுப்பு

பத்து வகைக் காரணங்களால் வெறுப்பு உண்டாவதால் காரண வேறுபாட்டால் இது பத்து வகைப்படும்.

1. நோய் முதலியவற்றால் துன்பப்படுவோரைப் பார்க்கிறோம். அப்பொழுது, 'நம் உடம்பும் இப்படிப்பட்டது தானே. இந்த உடம்

பிற்காக வேண்டி உணவு முதலியவற்றைத் தேடி வருந்துவதால் என்ன பயன்?' என்று வெறுப்பு உண்டாகிறது. இது ஒரு வகை.

2—4 முன் சொல்லிய மூன்று வகையான துக்கங்களால் வெறுப்பு உண்டாவதும் உண்டு. அது மூன்று வகை.

5. பொருளை ஈட்டும்போதும் அதனைப் பாதுகாக்கும் போதும் படும் துன்பங்களை எண்ணி உண்டாகும் வெறுப்பு ஒன்று.

6. நண்பர் முதலியோரை இழந்த போது அழுது வருத்தப்பட்டு 'இப்படி வருந்துவதற்குக் காரணம் நட்புக் கொண்டது தானே' என்று எண்ணுவதால் ஏற்படும் வெறுப்பு ஒன்று.

7. காமுகன் ஒருவன் தான் மனைவியிடம் வெறுக்கத்தக்க ஏதாவது ஒன்றைக் கண்ட போது அதனால் வரும் வெறுப்பு ஒன்று.

8. ஒரு நாள் உணவு குறைந்துவிட்டாலும் உடம்பு வாடிவிடுகிறது. இப்படிப்பட்ட உடம்பை எவ்வளவு காலம் பேணினாலும் நன்றாக இருக்கப்போவது இல்லை.—என்று எண்ணுவதால் உண்டாகும் வெறுப்பு ஒன்று

9. தாழ்ந்தவரிடம் சென்று ஒரு பொருளை வேண்டுதல் முதலிய செயல்களுக்கு மனம் கொள்ளாது வரும் வெறுப்பு ஒன்று.

10. இவையெல்லாம் ஏதுவும் காரணம் ஆகாதபடியே முற்பிறப்பில் செய்துள்ள தவத்தின் சிறப்பால் ஒருவனுக்கு உலகத்தில் வெறுப்பு உண்டாகக் கூடும். அந்த வெறுப்பு ஒன்று.

ஆக வெறுப்பு வகை பத்தாயிற்று. மனித வாழ்க்கையில் இன்னும் எத்தனையோ பல்வேறு காரணங்களால் வெறுப்பு உண்டாவதைப் பார்க்கிறோம். அப்படி எந்த வகை வெறுப்பானாலும் இங்குச் சொல்லப்பட்ட பத்து வகையுள் அவை அடங்கிவிடும்.

## துட்டிவகை பத்தும் நூறும்

மேற் சொல்லிய பத்து வகை வெறுப்பால் கவலைநீங்கி மகிழ்வதும் பத்து வகையாகும். வெறுப்பு உண்டானதால் உடம்பு முதலியவற்றைப் பேணும் பொருட்டு வரும் கவலையிலிருந்து நீங்கிய மகிழ்ச்சியைத்தான் துட்டி என்று சொல்லுவர்.

பத்து வகை மகிழ்ச்சியும் மேலே கூறிய பூதம் முதலிய முத்தி யிடங்கள் பத்திற்கும் ஏதுவாகும். அவ்வகையில் பெருக்கினால் நூறாக விரியும்.

## 4. செல்வம்

இது அணிமா, மகிமா முதலாக எட்டு வகைப்படும்.

1. அணிமா. அணுவைக் காட்டிலும் மிக நுண்ணிய வடிவத்தை அடைந்து நிற்பது.

2. மகிமா. மேரு மலையைவிட மிகப் பெரிதான வடிவத்தை அடைந்து நிற்பது.

3. இலகிமா. சேறு முதலியவற்றில் நடந்தாலும் அதில் அழுந்தி விடாமல் காற்றைக் காட்டிலும் வேகமாக நடந்து செல்லும் நிலையில் மென்மையான வடிவினை அடைந்து நிற்றல்.

4. பிராத்தி. மனத்தால் விரும்பிய எல்லாம் விரும்பியபடியே பெறுவது.

5. பிராகாமியம். நினைத்த அளவில் பல பெண்டிரை உண்டு பண்ணி அப் பல பெண்டிரொடும் பலவடிவில் நின்று கொண்டு விளையாடல் புரிதல்.

6. ஈசத்துவம். அயன் முதலியோரிடத்தும் தன் ஆணையைச் செலுத்தி அவரால் வழிபடப் பெறுதல்.

7. வசித்துவம். உலகம் முழுவதையும் தன் வசம் ஆக்குதலும் உலகத்தை உண்டாக்குதலும்.

8. கரிமா. பொருள்களை நுகர்ந்தாலும் அவற்றில் கட்டுப் படாமை.

## இரண்டு வகையுள் எட்டுவகை

இந்த எட்டுவகைப் பேறுகளுள் முதல் மூன்றும் உடம்பால் பெறப்படுவன. பின்னைய ஐந்தும் மனம் முதலியவற்றால் பெறப் படுவன.

## ஒன்றற்கு ஒன்று ஏது

இரு கூறான பத்து வகைப்பட்ட அறங்களை உடையவர்க்கு எட்டுவகை அறிவில் ஒரு வகை அறிவு உண்டாகும். அறிவால் பத்து வகை வெறுப்புகளில் ஒருவகை வெறுப்பு உண்டாகும். வெறுப்பினால் எட்டுவகைச் செல்வமும் உண்டாகும். ஆதலால் இவை ஒன்றற்கு ஒன்று காரணம் ஆகிறது.

## 5. பாவம்

அணிமா முதலிய செல்வத்தைப் பெற்றவர் அதனால் செருக்கடைந்து யோக நெறியை விட்டுவிட்டு உலகத்துப் பொருள்களில் கட்டுண்டு கிடப்பார். ஆதலால் அது காரணமாக அவரிடத்தில் பாவம் உண்டாகும்.

பாவமும் பத்து வகைப்படும்.

அவை : கொல்லாமை முதலான பத்துக்கும் மாறான கொலை, பொய், களவு, பிறர்மனை விருப்பு, பொறாமை, கோபம், வழிபடாமை, மாசுண்டல், கடும் சினம், மனக்கோட்டம்.

## 6. அறியாமை

பாவத்தால் அறியாமை உண்டாகும். அது ஐந்து வகைப்படும். அறியாமை அஞ்ஞானம் மயக்கம் என்பதெல்லாம் ஒன்றே.

1. மதம். உயிர் அல்லாததை உயிர் என மயங்குதல். அதுவும் மத வேறுபாட்டால் மேலே சொல்லிய பூதம் முதலிய பத்தினையும் பற்றி நிகழும். அந்த முறையில் இது பத்து வகைப்படும்.

2. மோகம். அணிமா முதலிய செல்வங்களையே மேலான உறுதிப்பயன் என்று மயங்குதல். செல்வங்கள் எட்டு ஆதலால் இதுவும் எட்டு வகைப்படும்.

3. மாமோகம். விருப்பான சத்தங்கள், வெறுப்பான சத்தங்கள் ஆகிய பத்தினையும் இதுவே பொருள் என மயங்குதல்.

4. தாமிசிரம்- இருவகைச் சத்தங்கள் பத்தினையும் அணிமா முதலிய எட்டுச் செல்வங்களையும் பெறுவதற்கு உரிய முயற்சிகளை மேற்கொண்டபோது அவை பெறாது போனாலும், அல்லது பெற்றும் அவற்றை இழந்து போனாலும் அதனால் வருந்துதல். இது சத்தம் பத்தும் செல்வம் எட்டும் பற்றி வருவதால் பதினெட்டாகும்.

5. அந்த தாமிசிரம்– சத்தங்கள், செல்வங்கள் ஆகிய பதினெட்டையும் ஒரு யோகி அனுபவிக்கும் பொழுது அவற்றால் வரும் இன்பத்தை அவனைக்காட்டிலும் உயர்ந்த மற்றோர் யோகி கவர்ந்து கொண்டான் என்றால் அதனால் வருந்துதல். இதுவும் பதினெட்டாகும்.

இந்த முறையில் அறியாமை அறுபத்து நான்கு ஆகும்.

7. விருப்பு- அறியாமையால் விருப்பாகிய ஆசை உண்டாகும். அது வெறுப்புக்கு மாறுப்பட்டது. அதனால் அது நூறு வகைப்படும்.

வலிமையில்லாமை [அசத்தி] அறியாமை 64, விருப்பு 100, மனம், அகங்காரம் 2, வாக்கு முதலிய செயற்கருவி 5, செவி முதலான பொறி 5-ஆக இந்த நூற்றெழுபத்தாறாலும் ஒருவனுக்கு வலிமையிழப்பு ஏற்படும். இந்த வலியிழப்பு அவன் வறுமைக்குக் காரணமாகும் இந்த முறையில் வலியின்மை 176 ஆகும்.

8. வறுமை- மேற் சொல்லியபடி வலியின்மையால் வறுமை உண்டாகும். அது எட்டுச் செல்வத்திற்கும் எதிர் மாறாகி எட்டு வகைப்படும்.

## புத்தி விருத்தியின் விரி

மேலே காட்டியபடி கணக்கிடும்போது புத்தி தத்துவத்தின் விருத்தி 612 ஆக விரியும்.

விளக்கம்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அறம் | 10 | அறிவு | 80 | வெறுப்பு | 100 |
| செல்வம் | 64 | பாவம் | 10 | அறியாமை | 64 |
| விருப்பு | 100 | வறுமை | 8 | வலியின்மை | 176 |
| | | | | | =612 |

இவ்வாறு ஒருவனுக்கு வறுமை என்பது உண்டானால் மறுபடியும் அவனுக்கு அறத்தில் எண்ணம் உண்டாகும். இப்படியே பார்த்தோமானால் புத்தி தத்துவம் ஓர் உருள்போல இருக்க அதில் புருடன் அறங்களுக்கு முடிவுகாண முடியாமல் மீண்டும் மீண்டும் சுற்றித் திரிந்து துயர் அடைவான்.

## ஆங்காரம்

### ஆங்காரம் ஆவது

புத்தியால் ஒன்றை உறுதிசெய்கிறோம். அந்தத் தொழில் நடப்பதற்கு முன் இது இன்னது என்று நான் உறுதி செய்வேன் என்றதோர் ஊக்கம் அல்லது முனைப்பு உண்டாகும். இந்த முனைப்பு உண்டானால் அல்லாமல் புத்தி எதனையும் இது இன்னது உறுதிப்படுத்த முடியாது.

அப்படியானால் அந்த ஊக்கம் உண்டாவதற்கு ஒரு கருவி வேண்டுமே. அதுதான், புத்தியிலிருந்தும் சத்துவம், தாமதம் ஆகிய இரண்டு குணங்களும் குறைந்தும் இராசத குணம் மிகுந்தும் தோன்றும் ஒரு கருவி. அதற்கு ஆங்காரம் என்று பெயர்.

### துணிபு இரண்டு வகை

துணிதல் இரண்டு வகைப்படும். ஒன்று புத்தியின் தொழில். மற்றொன்று ஆங்காரத்தின் தொழில்.

இது குடம், இது ஆடை என்ற உறுதிசெய்வது புத்தியின் தொழில். இந்தத் தொழிற்பாடு உலகத்துப் பொருளினிடமாக நடக்கிறது. அது பொருள்தோறும் வேறு வேறாக 'இது' என்னும் வடிவினதாய் நிற்கும். இவ்வாறு நிற்பது புத்தியின் துணிபு.

எத்தனை பொருள்களில் துணிபு வேறு வேறு உண்டானாலும் நான் உறுதிபண்ணுவேன் என்ற தொழிற்பாடு பொருள் தோறும் வேறு வேறு அன்று. அது ஒன்றேதான். அது புருடனிடமாக நான் என்னும் வடிவினதாக நிற்கும். இவ்வாறு நிற்பது ஆங்காரத்தின் துணிபு.

## புத்தியின் வேறானது ஆங்காரம்

இவ்வாறு தொழிற்பாடு புத்திக்கும் ஆங்காரத்திற்கும் வேறு வேறு. அவற்றுள் வேறுபாடும் மிகுதி. மிகுந்த வேற்றுமையுடைய இரண்டு தொழிற்பாட்டிற்குக் கருவி ஒன்றேயாக இருக்க முடியாது. வேறு வேறாகத்தான் இருக்கவேண்டும், ஆதலால் புத்தி ஒரு கருவி, ஆங்காரம் வேறு ஒரு கருவி என்று இருப்பது பொருத்தமே.

அது மட்டும் அன்று. சாத்துவிகக் கூறு மிகுந்து விரிந்தால் அல்லாமல் இது இன்னது என்று துணிந்து அறிவதற்குக் கருவி ஆகாது. அதுபோலவே இராசதக் கூறு மிகுந்து உண்டானால் அல்லாமல் ஊக்கம் எழாது. இரண்டும் வேறு வேறு தொழில்கள். வேறுபட்ட இரண்டு தொழிலுக்கும் கருவி ஒன்றே என்று கொள்ளப் பொருந்தாது.

மேலும் ஒன்று. ஆங்காரம் கருவியாகிய சிறப்புக் காரணம் ஆனாலும் கலை என்ற கருவியைப் போல ஒரு தொழிலைச் செய்வது ஆவதற்கு ஏதுவாய் ஒன்றைச் சிறப்பு வகையால் துணிவேன் நான் என்று நிற்கிறது. ஆதலால் முகமனாக வினைமுதல் காரணம்-ஒரு தொழிலைப் புரிவதாகிய சிறப்புக்காரணம்—என்று சொல்லப்படும். இதனாலும்,பொருள்களுக்கு எதிர்முகமாக நிற்கும் புத்திக்கு வேறானது ஆங்காரம் என்பது தெளிவு.

## உயிர்கள் தோறும் ஆங்காரம் வேறு

ஆங்காரம் என்பது வகையால் ஒன்றேயானாலும் புத்தி எப்படி உயிர்கள்தோறும் வேறு வேறோ அப்படியே ஆங்காரமும் உயிர்கள் தோறும் வெவ்வேறாகப் பலவாகும். அனுபவத்தில் இது தெளிவாகும் ஒருவன் 'நான் போவேன்' என்று சொல்லுவான். அதே பொழுதில் மற்றொருவன் 'நான் உண்பேன்' என்றும், இன்னொருவன் 'நான் அறிவேன்' என்றும் சொல்லுவான். இப்படி அவரவர் வேறு வேறாய் முனைத்து எழுவதற்குக் காரணம் ஆங்காரமும் உயிர்தோறும் வேறு வேறாக இருப்பதுதான்.

## மூவகை ஆங்காரம்

1- சத்துவகுணம் மிகுந்து மற்றைய இரண்டு குணங்களும் குறைந்த பகுதி -தைசத ஆங்காரம்:
2- இராசத குணம் மிகுந்து மற்றைய இரண்டு குணங்களும் குறைந்த பகுதி -வைகாரி ஆங்காரம்.
3- தாமத குணம் மிகுந்து மற்றைய இரண்டு குணங்களும் குறைந்த பகுதி -பூதாதி ஆங்காரம்.

## ஆங்காரத்தின் ஆக்கங்கள்

1. தைச்சத ஆங்காரத்தில் தோன்றுவன-மனம், ஐந்து பொறிகள்
2. வைகாரி ,, ,, -செயற் கருவிகள் ஐந்து
3. பூதாதி ,, ,, -தன்மாத்திரைகள் ஐந்து

## மனம், சங்கற்பம், விகற்பம்

ஐந்து பொறிகள் வாயில்கள் என்று சொல்லப்படும். கண்ணால் ஓர் உருவத்தைக் காணுகிறோம் காதால் ஓர் ஓசையைக் கேட்கிறோம். ...இப்படியெல்லாம் பொறிகளால் அறியப்படுகிற உருவம், ஓசை முதலியவற்றை அறிவதில் இரண்டு நிலை பார்க்கலாம். ஏதோ ஓர் உருவம், ஏதோ ஓர் ஓசை என்ற மட்டில் அறிவது ஒரு நிலை. இது என்ன உருவம், இது என்ன ஓசை என்று-மற்றைய உருவங்களிலிருந்து ஓர் உருவத்தை வேறாக அறிவதும், மற்றைய ஓசைகளிலிருந்து ஒன்றை வேறான ஓசையாகவும் அறிவது ஒரு நிலை.

முதலிற் சொன்னது நிருவிகற்ப உணர்வு. அடுத்தது விகற்ப உணர்வு. இந்த இரண்டில் நிருவிகற்ப உணர்வு நம் அறிவு வெறும் பொறிகளோடு மட்டும் கூடிய அளவில் உண்டாகும் உணர்வு.

இந்த உணர்வு உண்டான பிறகு அவ்வாறு அறியப்பட்ட பொருளை இது என்னவாயிருக்கலாம். என்று அப்பொருளின் தன்மைகளை ஆராய்கிறது. அப்படி ஆராய்ந்த பின்னர் ஏற்கெனவே முன் அனுபவித்துத் தெரிந்துள்ள தொடர்ச்சியால், இந்தப் பொருளில் இன்ன தன்மைகள் இருக்கின்றன, இன்ன தன்மைகள் இருப்பதால் இது குடமாயிருக்கலாம் இன்ன, தன்மைகள் இருப்பதால் இது ஆடையா யிருக்கலாம் என்றெல்லாம் நினைக்கும் நினைவு ஒன்று உண்டாகும். இந்த நினைவுக்குச் சங்கற்பம் என்று பெயர்.

அப்படி எண்ணிய பிறகு இது குடமோ, அல்லது வேறோ? என்று எண்ணும் ஐயம் உண்டாகும்.

இந்த ஐய உணர்வு ஏற்பட்டு அல்லாமல், இது இன்ன பொருளாக இருக்கலாம் என்ற வெறும் சங்கற்பத்தால் மட்டும் ஒரு பொருளைப் பற்றிய திட்டவட்டமான அறிவு உண்டாகாது. ஆதலால், சங்கற்ப நினைவின் பின் ஐயம் சிறப்பாக உண்டாகும். இந்த ஐய உணர்வுக்கு விகற்பம் என்று பெயர்

பொறித் தொடர்பால் மட்டும், வேறுபாடு தெரியாமல் ஏதோ ஒன்று என்று அறிந்த பொருளில் மேலே சொல்லியபடி சங்கற்பமும் விகற்பமும் உண்டாவதற்குக் கருவியாக அமைந்தது மனம் என்னும் உட் கருவி.

## இரண்டும் மனத்தின் தொழிற்பாடே

சங்கற்ப நினைவிற்கும் விகற்ப நினைவிற்கும் முன்னும் பின்னும் ஆகிய கால வேறுபாடு மாத்திரமே அல்லாமல் பயன் வேறுபாடு இல்லை. பயன் வேறுபாடு இருந்தால் அது பற்றித் தொழிலும் வேறுபடும். இங்குப் பயன் வேறுபாடு இல்லாததால் தொழில் வேறுபாடு இல்லை. சங்கற்பமும் விகற்பமும் காலத்தால் வேறுபடுவதல்லாமல் தொழிலால் வேறுபடவில்லை. ஆதலால் மனம் ஒன்றே சங்கற்பம் விகற்பம் ஆகிய இரண்டு தொழிற்பாட்டிற்கும் கருவி என்பதில் ஐயத்திற்கு இடமில்லை.

## மனமும் சித்தமும்

இது யாதாக இருக்கலாம்? என்று ஒன்றன் குணங்களை வைத்துச் சிந்திக்கும் நினைவுக்கு வேற்றுமை தெரியாக் (நிருவிகற்பக்) காட்சியே காரணம். இது இன்னது ஆகவேண்டும் என்று கருதும் சங்கற்ப நினைவிற்கு அவ்வாறு சிந்திக்கும் நினைவுக்குப் பிறகு வெளிப்படும் தொடர்ச்சி காரணம். இந்த இருவகை நினைவும் முன் சொல்லியபடி காலத்தால் மட்டும் அல்லாமல் இப்படிக் காரணத்தாலும் வேறுபாடு உடையன. ஆதலால் சங்கற்பம் விகற்பம் இரண்டற்கும் மனம் ஒன்றே கருவி என்பது பொருந்தாது எனத் தோன்றலாம்.

அப்படியிருந்தாலும் பயனால் வேறுபாடு இல்லாததால் மனம் ஒன்றே இரண்டற்கும் கருவி. மனமே நிலை வேறுபாட்டுச் சிறப்பால் சித்தம் என்று ஒரு விரிநிலை அடைந்துநின்று 'இது யாதாயிருக் கலாம்?' என்று சிந்திக்கும்.

இதனால் மனத்தின் விரிநிலையாகிய சித்தம் என்பது ஒன்றும் உண்டு என்பதாயிற்று. அது பிற கருவிகளைப் போலத் திரிந்துண் டானது அன்று. ஆதலால் மனத்தின் வேறானதாகக் கொள்ளப் படவில்லை.

சிவப்பிரகாச நூலில் 'சிந்தை நினைவு வந்து ஐயம் தருதல்' (43) என்று வருகிறது. சித்தத்தின் தொழிற்பாடாகிய ஆராய்ந்து காணும் நினைவு நடந்து தொடர்ச்சியை வெளிப்படுத்தும் வழியில் ஐய நினைவைத் தோற்றுவித்தல் என்பது இத்தொடரின் பொருளாகும்.

## தொகை வேறு வேறு கொள்ளுவார்

சித்தம் மனத்தின் மற்றொரு நிலையே என்று கொள்ளும் போது உட்கருவி மனம், புத்தி, அகங்காரம் என்று மூன்றேயாகும். அப்படியானால் மூலப்பகுதிக்குக் கீழ்த் தத்துவம் 23 ஆகும். அதனால், குணம் என்பதனை மூலப்பகுதியின் வேறாக ஒரு தத்துவமாகக் கணக்கிட்டு 24 தத்துவம் என்று கொள்வார் சிலர்.

குண தத்துவத்தை மூலப் பகுதியுள் அடக்கி, உயிரறிவுக்கு உதவி செய்யும் சிறப்புப் பற்றிச் சித்தத்தை மனத்தின் வேறாக வைத்து எண்ணி உட்கருவி நான்கு எனக்கொண்டு 24 தத்துவம் கணக்கிடுவார் சிலர்.

சித்தத்தையும் மனத்தையும் ஒன்றாக வைத்து மூலப் பகுதி யையும் குணத்தையும் ஒன்றாக வைத்து எண்ணி, இருபத்து நாலாம் தத்துவமாக மூலப் பகுதியைக் கொள்ளுவார் சிலர்.

இப்படி ஆசிரியர் பல வகையினர் ஆனாலும் பொருளால் வேறுபாடு இல்லாததால் அவர்க்குள் முரண்பாடு எதுவும் இல்லை.

## சித்தமும் ஆங்காரமும்

சித்தம் சிந்தித்தபின் அல்லாமல் சங்கற்ப விகற்பங்கள்- நினைவு

ஐயங்கள்-தோன்றா. ஆங்காரம் ஒருப்பட்டு எழுந்தால் அல்லாமல் ஒன்றில் துணிவு உண்டாகாது.

## சித்தம் மனத்தில் அடங்கும்

மனம் சித்தங்களின் தொழில்களாகிய இரு வேறு வகை நினைவும் அறியப்படு பொருளின் இடமாக நிற்கும். அந்த இரண்டற்கும் உள்ள வேறுபாடு: முன்பு கண்டு அனுபவித்த தொடர்ச்சி வெளிப்படுவதற்கு முன் மனத்தின் தொழில் நிகழும். அதன் பிறகு நிகழ்வது சித்தத்தின் தொழில். இது தவிர வேறு எந்த வேறுபாடும் இல்லை. ஆதலால் சித்தம் மனத்தின் விரிவாகி மனத்தில் அடங்கும்.

## ஆங்காரம் புத்தியில் அடங்காமை

அப்படி அல்லாமல்,

ஆங்காரத்தின் தொழிலாகிய துணிபு-
'நான் இன்னன் ஆவன்' என்னும்
வடிவினதாய்ப் புருடனிடம் நிகழ்வது.

புத்தியின் தொழிலாகிய துணிபு-
'இது இன்னது என்னும் வடிவினதாகி
நுகர்பொருளினிடமாக நிகழ்வது.

இந்த இருவகைக்கும் இவ்வளவு வேறுபாடு உள்ளதால் சித்தம் மனத்தின் விருத்தியாய் மனத்தில் அடங்கும் என்பது போல ஆங்காரம் புத்தியின் விருத்தியாய்ப் புத்தியில் அடங்கும் என்று சொல்லக் கூடாது.

## 1. மனம்

## மனம் ஆவது

முன் அனுபவத் தொடர்ச்சி பற்றி உண்டாகும் நினைவு ஐயம் இரண்டும் மனத்திற்கே உரிய தொழில்கள். ஆதலால்,

ஒருவன் ஒருவனுக்கு எதிரே ஒரு குடத்தைக் காட்டினான். இது குடம் என்ற சொல்லுக்கு உரிய பொருள் என்று உணர்த்தினான். உணர்ந்துகொண்டவன் மற்றொரு குடத்தைக் கண்டான். ஏற்கெனவே கண்டு அறிந்த குடத்தின் அறிவுத் தொடர்ச்சியால், இப்போது காணப்பட்டது முன்பு கண்டது போலவே இருந்த ஒப்புமையால் இதுவும் குடம் என்ற சொல்லுக்குரிய பொருளே என்று உணர்ந்து கொண்டான்.

இதுபோல, முன்பு கண்ட ஒருவனைப் பின்பும் கண்டபோது அவனே இவன் என்று உணர்ந்து கொள்கிறான்.

இவ்வாறெல்லாம் தொடர்ச்சிபற்றி உணர்ந்து கொள்வதற்கு ஏதுவாகிய கருவி மனமேயாகும்.

## மனம் அணு ஆகாது

ஆங்காரத்திலிருந்து உண்டானது மனம் அது ஆங்காரத்தை முடிவாகக் கொண்ட தத்துவங்களை நோக்கப் பருமையானது.

ஐம்பொறிகள் ஒன்றொன்றாய் உணரும். அதற்குக் காரணம் வித்தையால் சிறிதளவே விளங்கி அது அதுவாய் அழுந்தியறிவதாகிய உயிரறிவு எல்லாக் கருவிகளிடமும் ஒரே காலத்தில் நின்று இயக்க முடியாமல் ஒன்றொன்றாய்த் தொழிற்படுத்தல்.

ஆதலால் அங்கு மனத்தின் கூட்டமே காரணம் அன்று. ஆகையால் அது காரணமாக மனத்தை அணு என்று சொல்லப் பொருந்தாது.

## மனம் முந்தித் தோன்றும்

ஒரு நாட்டில் அங்கங்கே நடப்பவற்றை அங்கங்குச் சென்று அறிந்து வந்து அரசர்க்குத் தெரியும்படிச் செய்வார் ஒற்றர்.

அது போல. வெளியே ஐம்பொறிகளால் அறியப்பட்ட பொருளை இடையில் நின்று பற்றிக்கொண்டு வந்து புத்திக்கு எதிர் முகமாகத் தெரியும்படிச் செலுத்தும் உட்கருவி மனம்.

இந்த மனம் காகத்தின் கண்மணிபோல, உள்ளும் புறமும் ஆகிய இரண்டிடங்களிலும் விரைவாக எப்போதும் சென்று கொண்டிருக்கும் ஒரு கருவி.

ஆதலால், ஐம்பொறிகள் சாத்துவிக ஆங்காரத்திலிருந்து தோன்றியது போலவே தானும் அதனிலிருந்தும் பொறிகள் தோன்றுவதற்கு முன்பே தோன்றும்.

### கூடி நுகரும்

சிவப்பிரகாச நூலில் 'கூடிஒரு புலன் நுகரும்' [63] என்று சொல்லப்பட்டது. ஒரு பொருளினிடம் அந்தந்தத் தத்துவங்கள் எல்லாம் முறையாக நிகழ்ந்த பிறகு அது உயிருக்குத் தெரியவரும் என்பது கருத்து.

## பொருளை அறியும் முறை

ஒரு பொருளைப் பொறியானது பொது நிலையில் முதலில் உணரும். அதன் பிறகு அப்பொருளை உட்கருவியாகிய மனம் பற்றும். அதன் பிறகு ஆங்காரம் முனைத்து எழும். பிறகு புத்தி அப்பொருளை இது இன்னது என உறுதிசெய்யும்.

இதுவே உலகத்துப் பொருள்களை நாம் அறியும் முறை.

### 2. அறிகருவிகள் ஞான இந்திரியம்

## தோன்றுமாறும் பெயரும்

சாத்துவிக அகங்காரத்திலிருந்து மனம் தோன்றிய பின் அறிகருவிகள் ஆகிய பொறிகள் ஐந்தும் முறையாகத் தோன்றும். காது தோல் கண் நாக்கு மூக்கு என்பன அவற்றின் பெயர்கள். வேறு வரிசையில் மெய் வாய் கண் மூக்கு செவி என்றும் சொல்லப்படும் மெய் என்பது இங்கு உடம்பைக் குறிக்காது. தோலைக் குறிக்கும். வாய் என்பது நாக்கைக் குறிக்கும். துவக்கு-தோல். நோக்கு-கண். துண்டம்-மூக்கு.

## பெயர் உண்டான முறை

செவி முதலிய பெயர்கள் இயல்பாக நமக்குத் தெரிகின்ற காது முதலிய உறுப்புக்களாகிய இடங்களுக்கு உரிய பெயர்கள். இங்கு அப் பெயர்கள். ஆகு பெயராகி, அந்த இடங்களைக் குறிக்காமல் அந்த இடங்களைத் தமக்கு இடமாகக் கொண்டு தொழில் செய்யும் பொறிகளைக் குறிக்கும். பொறிகள் நம் கண்ணுக்குப் புலப்படா. பொறிகள் நின்று வேலை செய்யும் இடங்களாகிய உறுப்புக்கள்தாம் நமக்குத் தெரியும்.

இந்திரியம் என்றாலும் பொறி என்றாலும் வாயில் என்றாலும் ஒன்றுதான்.

## வேறுபாடு தெரியாதுஅறியும் அறிவுக்குக் கருவி

சொல்லப்பட்ட பொறிகள் ஐந்தும் உயிரின் அறிவாற்றலால் தான் நின்று தொழில்செய்ய இடமாகக் கொள்ளப்படும். அப்படி நின்று கொண்டு பொருள்களை அறியும். அப்படி அறியும் போதும் அப் பொருள்களின் குணம் குணித் தன்மை பற்றி இது இன்னது என அறியாது, ஏதோ ஒரு பொருள் என்ற மட்டில் அறியும். அப்படிப் பொருள்களை வேறுபடத்தெரியாமல் அறியும் கருவி காது முதலான அறிவுக்கருவி.

## சத்துவ குணக் கருவி

இவை அறிகருவி ஆதலால் அறிவுக்குத் துணையான சத்துவ குண அகங்காரத்திலிருந்து தோன்றியவையாகும்.

## உறுப்பு வேறு, இந்திரியம் வேறு

செவிடன் ஒருவன். அவனுக்குச் செவியாகிய உறுப்பு இருக்கிறது இருந்தும் ஓசை கேட்கவில்லை. உறுப்பே பொறி என்றால் ஓசை கேட்க வேண்டும் அல்லவா? கேட்க வில்லையே. அப்படியானால் ஓசையைக் கேட்டறியும் மற்றொன்று அங்கு இல்லை என்பதே. அந்த ஒன்றுதான் பொறி எனப்படுவது. அது கண்ணுக்குத் தெரியாதது.

ஆகவே, செவியாகிய உறுப்பு வேறு. செவி எனப்படும் பொறி வேறு. மற்றையவற்றிற்கும் இப்படியே கொள்க.

மேலும், கண் என்னும் பொறி ஒரு பொருளை அறியும்போது அப்பொருளினிடம் சென்று பற்றி அறியும். அப்படிச் செல்வது கண்ணாகிய உறுப்பு அன்று. உறுப்பு இருந்த இடத்திலேயே இருக்கிறது. சென்று அறிவது அந்த உறுப்பிலிருந்தும் வேறான ஒன்று. அதுவே பொறி. இதனாலும் பொறிவேறு, உறுப்பு வேறு என்று தெரியலாம்.

## 3. செயற்பொறிகள் (கன்ம இந்திரியங்கள்)

### தோற்றமும் பெயரும்

நாக்கு கால் கை எருவாய் கருவாய் என்னும் ஐந்தும் செயலுக்கு உரிய கருவிகள். ஆதலால் அவை செயல் பொறிகள் என்று பெயர் பெற்றன.

இப்பெயர்கள் இயல்பாக நமக்குப் புலப்படும் அந்தந்த உறுப்புக்களைக் குறிக்காமல் அந்தந்த உறுப்புக்களை இடமாகக் கொண்டு நின்று தொழில்புரியும் ஆற்றல் வடிவான பொறிகளுக்கு ஆகுபெயர் ஆயின.

இவை ஐந்தும் தொழில் செய்யும் கருவிகள். தொழிற்பாட்டுக்கு அடிப்படையான குணம் இராசத குணம். ஆதலால் செயற்பொறிகள் ஐந்தும் இராசத குண ஆங்காரத்திலிருந்து தோன்றினவாகும்.

### இன்றி அமையாமை

காது முதலிய அறிகருவிகள் உயிரின் அறியும் ஆற்றலை மட்டும் விளக்கிநிற்கும். ஆதலால் செய்யும் ஆற்றலை விளக்குவதற்கு வேறு கருவிகள் தேவையாயிற்று. அவையே ஐந்து செயற்பொறிகள். ஆகவே, உயிருக்கு இவையும் இல்லாமல் முடியாது.

இங்குத் தொழில் அல்லது கன்மம் என்றது தொழிலைக் குறிக்கவில்லை; தொழில் செய்வதற்கு உரிய உயிரின் ஆற்றலையே குறிக்கும்.

அறிவாற்றலும் செயலாற்றலும் ஆற்றல் என்ற நிலையில் ஒன்றேதான். என்றாலும் செய்யும் செயலில் ஒன்றுக்கொன்று வேறுபடுகின்றன. ஆதலால் கருவிகளும் வேறு வேறு தேவைப்பட்டன.

## ஒன்று ஐந்து ஆயின

உயிரின் அறிவாற்றல் ஒன்றே. ஆனால் அதனால் அறியப்படு பொருள்கள் ஓசை முதலிய வேறு வேறு ஐந்து பொருள்கள். அது காரணமாக ஒரே அறிவாற்றலை ஐந்து வகையாகச் சொல்லுகிறோம்.

அது போலவே செயலாற்றலும் ஒன்றே ஆனாலும் அதனால் செய்யப்படும் தொழில்கள் வேறு வேறான ஐந்து. அவை பேசுதல், வருதல் போதல், கொடுத்தல், வாங்குதல், கழித்தல், இன்புறுதல் ஆகியன. இந்த வேறுபாடு காரணமாகச் செயற்கருவிகளும் ஐந்து ஆயின.

## பிற பலவும் ஐந்தில் அடக்கம்

புருவம் நெரித்தல் முதலியன கையின் தொழிலாகிய இடுதல் ஏற்றல் வகையில் அடங்கும். சொல்லப்பட்ட பொறிகள் உடம்பு முழுவதும் பரவிநிற்பன என்று சொல்லப்படும். கை என்னும் பொறி புருவம் நெரித்தல் முதலிய தொழில்களைச் செய்யும்போது அந்தந்த உறுப்புக்களை நிலைக்களமாகக் கொண்டு நின்று அந்தந்தத் தொழில்களைச் செய்யும். பிற எல்லாத் தொழில்களுமே இப்படி எவையெவை எதில் அடக்கமோ அந்தந்தப் பொறியால் நடைபெறும்.

ஆகவே நம் உடம்பில் நிகழும் எல்லாத் தொழில்களுமே இப்படி, பேசுதல் முதலான ஐந்தில் அடங்கிவிடும்.

## சிறப்பு இடத்தால் கருவிப் பெயர்

மேலே சொல்லியபடி யென்றால் அந்தக் கருவிகளுக்கு மற்றைய நிலைக்களன் ஆகிய உறுப்புக்களைக் கொண்டும் பெயர் சொல்லியிருக்கலாமே. ஏன் நாக்கு முதலிய இடங்களைக் கொண்டே பெயரிட்டிருக்கவேண்டும்? குறிப்பிட்ட அந்த இடங்கள் அந்தக் கருவிகளின் தொழிலுக்குச் சிறப்பிடங்கள். ஆதலால் சிறப்பிடப் பெயர்களே கருவிகளுக்குப் பெயர் ஆயின.

## கருவி உறுப்பிலிருந்தும் வேறு

நாக்கு, கால் முதலிய உறுப்பு இருந்தும் சிலருக்கு அவற்றிற்கு உரிய தொழில்கள் நடவாமல் ஊமையாகவும் முடமாகவும்

பிறவுமாக இருக்கக் காணுகின்றோம். ஆதலால், முன் சொல்லிய அறிகருவிகளைப் போலவே இச் செயற் கருவிகளும் அவற்றின் தொழிற் பாட்டுக்கு இடங்களாகிய உறுப்புக்களிலிருந்தும் வேறு என்பது தெளிவாகும்.

## செயற் கருவிகளும் வேண்டும்

அறிகருவிகளால் இன்னது என்ற தெளிவு இல்லாது அறியப் பட்ட பொருள்கள் பல. அவற்றுள் ஏதாவது ஒன்றைச் சித்தம் ஆராய்ந்துபார்க்கிறது. அதன்பின் மனம் இன்னதாக இருக்க வேண்டும் என்று நினைத்தும், அப்படி இருக்குமா என்று ஐயம் கொண்டும் நிற்கும். அதன் பிறகு ஆங்காரம் இது இன்னதுதான் என்று உறுதி செய்யவேண்டும் என்ற ஊக்கத்தை உண்டாக்கும். அடுத்து புத்தி இது இன்னது என்று துணியும்.

தொடக்கத்தில் அறிகருவிகளால் பொருளைத் தெளிவில்லாது அறிந்த உயிரறிவு மேற் சொல்லிய முறையில் புத்தியைக் கொண்டு அப்பொருள் இதுதான் என்று துணிந்த அளவில் அது இன்பம் அல்லது துன்பம் அல்லது மோகம் ஆகிய ஏதாவது ஒரு வடிவில் அந்த உயிருக்கு அனுபவப் பொருளாகும்.

இப்படித்தான் உலக அனுபவங்கள் உண்டாகின்றன என்றே முடித்து விட்டால் செயற் கருவிகள் தேவையில்லையாகும். உண்மை யில் பெரும்பான்மை அனுபவங்கள் இப்படி முடிவதில்லை. சிறு பான்மை மேலே சோல்லிய முறையில் உயிருக்கு அனுபவம் நிகழ லாம், என்றாலும் அப்படி நிகழ்வது சிறுபான்மையே.

இப்படித் துணியப்பட்ட பொருள் மறுபடியும் சில செயல்கள் நடந்தபின் அனுபவப்பொருளாகும். அதாவது: சிறுபான்மை அப் படிப் புத்தி இது இன்னது எனத் துணிந்தபின் ஆங்காரமானது மறு படியும் 'நான் துணிந்தேன்' என்றும், 'நான் இதனைச் செய்வேன்' என்றும் முனைத்து எழும். அதன்பின் மனத்தின் செயல்கள் நடக்கும்; அதன்பிறகு மறுபடியும் அறிகருவிகள் அறியும். செயற்பொறிகள் தொழிற்படும். மீண்டும் அப்பொருள் புத்தியில் வந்து நுகர்பொருள் ஆகும். இதுவே பெரும்பாலும் நிகழ்வது. ஆதலால் செயற்கருவிகள் எப்படியும் தேவையேயாகும்.

அறிவுப் பொருளுக்கு அல்லாமல், அறிவில் பொருளுக்குத் தொழிற்பாடு இல்லை. ஆதலாலும், அறிவு செயல் உருவாகிய ஆற்றல் உயிரைப் பற்றி நிற்கும் அல்லாமல் புத்தி முதலான உயிரில்

பொருளைப் பற்றி நில்லாது என்றும், அவை (அறிவு செயல்கள்) விளங்ுவதற்கு இவை கருவி மட்டுமே என்றும் தெரியலாம்.

## பொறிகளின் தொழிற்பாடு

உயிரின் அறிவு செயல் ஆற்றல்கள் ஆணவ மலத்தால் பண்டே தடை செய்யப்பட்டன. அதனால் அன்று முதலே உயிர் கல்லைப் போல எச்செயலும் இல்லாமல் கிடந்தது. அப்படிக் கிடந்த உயிருக்குத் தடைப்பட்டுக் கிடந்த அறிவு செயலாற்றல்களை விளங்கச் செய்தல் மட்டுமே பொறிகளின் (அறிகருவிகள், செயற்கருவிகள்) தொழிலாகும்.

## அறிவு செயல்கள் தோன்றி அழிவன அல்ல

இருண்ட பொழுதில் விளக்கு இருந்தால் மட்டும் அங்குள்ள பொருள்கள் தெரியும். விளக்கு நீங்கிய போது அவை தெரியா தெரியாது போனாலும் அது காரணமாகப் பொருள்கள் விளக்கு இருந்த காலத்தில் தோன்றின. அது நீங்கிய காலத்தில் அழிந்து போயின என்று சொல்லப்படுவதில்லை.

அதுபோல, மலத்தால் தடைப்பட்டு நிற்கும் கட்டுக்காலத்தில் உயிரின் அறிவு செயல்கள் கருவிகள் கூடிய போது விளங்கும், கருவி கள் நீங்கியபோது விளங்கா. அதனால் அவை (அறிவும் செயலும்) ஒரு காலத்தில் தோன்றி ஒருகாலத்தில் அழியும் என்று சொல்லப்படாது.

அறிவு செயல்களை விளக்கும் புத்தி முதலிய கருவிகளின் தொழிற்பாடு ஒன்றன்பின் ஒன்றாய்க் கணம் தோறும் வேறுபட்டு நடக்கும். அதனால் அறிவும் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாய் விளங்கும். ஆகையால், இமை கொட்டாமல் ஒரு பொருளை இடை விடாமல் நோக்கினாலும் அனுபவ அறிவானது கணந்தோறும் வெவ் வேறாகவே நிகழும்.

# 4. தன்மாத்திரை

## தோற்றமும் பெயரும்

தாமத ஆங்காரத்தில் தன்மாத்திரைகள் தோன்றும். அவை ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்ற ஐந்து கருவிகள்.

## பொறிகளுக்கு இடம்

அறிபொறிகள் செவி முதலான ஐந்து. செயற்பொறிகள் நாக்கு முதலான ஐந்து. இந்த இருவகையான பொறிகளுக்கும் இடமாவன தன்மாத்திரைகள்.

தேர் ஏறிச் செல்வானுக்கு ஏறி இருந்து கொள்வதற்கு இடமாயிருப்பது தேர். தேர் நிற்பதற்கும் செல்வதற்கும் இடமாவது நிலம். இந்த முறையில் பார்த்தால் ஏறிச் செல்வானுக்குத் தேரும் இடம், நிலமும் இடம்.

அதுபோல ஐம்பொறிகளுக்கும் செவி முதலான உறுப்புக்கள் தங்குமிடம். ஓசை முதலான தன்மாத்திரைகள் செல்லுமிடம்.

அறிதல் அறிகருவிகளின் தொழில். செய்தல் செயற்கருவிகளின் தொழில். இருவகைக் கருவிகளும் தம்தம் தொழிற்பாட்டைச் செய்தலில் ஊக்கமும் உரமும் உண்டுபண்ணி நிற்பதற்கு மட்டுமே தன்மாத்திரைகள் கருவியாகும். ஆதலால் இவை தாமத ஆங்காரத்தில் தோன்றியன.

1. ஓசை

வன்மையான ஓசை, மென்மையான ஓசை முதலான சிறப்பு வகையான ஓசைகளை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டு பொதுநிலையில் ஓசை என்ற மட்டில் நுண்ணியதாய் நிற்பது ஓசை என்னும் தன்மாத்திரை.

2. ஊறு

அந்த ஓசையொடு கூடக் குளிர்ச்சி, வெப்பம் முதலான சிறப்பு வகையான ஊறுகளை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டு பொதுநிலையில் ஊறு என்ற அளவில் நுண்மையாய் நிற்பது ஊறு என்னும் தன்மாத்திரை.

3. உருவம்-ஒளி

ஓசை, ஊறு இரண்டொடுகூட வெண்மை செம்மை முதலான சிறப்பு ஒளிகளையெல்லாம் அடக்கிக் கொண்டு பொதுநிலையில் ஒளி அல்லது உருவம் என்ற மட்டில் நுண்ணியதாய் நிற்பது ஒளி அல்லது உருவம் என்னும் தன்மாத்திரை.

4. சுவை

ஓசை ஊறு ஒளி மூன்றொடுகூட இனிப்பு புளிப்பு முதலான சிறப்பு வகைச் சுவைகளைத் தன்னுள் அடக்கிப் பொது நிலையில் சுவை என்னும் மட்டில் நுண்ணியதாய் நிற்பது சுவை என்னும் தன் மாத்திரை.

5. நாற்றம்

ஓசை முதலிய நான்கோடுகூட நல்ல மணம் கெட்டமணம் என்னும் இருவகைப்பட்ட சிறப்பு வகை மணங்களை யெல்லாம் தன்னுள் அடக்கிக்கொண்டு நுட்பமாய் நிற்பது நாற்றம் எனப்படும் தன்மாத்திரை.

## பெரும் பூதங்களுக்கு முதற்காரணம்

தன்மாத்திரை ஐந்தும் முறையே வான் முதலான ஐந்து பெரும் பூதங்களுக்கும் முதற்காரணம் ஆகும்.

வானம் அல்லது விசும்பு பல வேறு வகைப்பட்ட ஓசை என்னும் ஒரு குணத்தை உடையது

காற்று பலவேறு வகைப்பட்ட ஓசை, ஊறு, ஆகிய இரண்டு குணங்களை உடையது.

தீ பல வேறு வகைப்பட்ட ஓசை, ஊறு, ஒளி ஆகிய மூன்று குணங்களை உடையது.

நீர் பலவேறு வகைப்பட்ட ஓசை, ஊறு. ஒளி, சுவை என்னும் நான்கு குணங்களை உடையது.

நிலம் பலவேறு வகைப்பட்ட ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்து குணங்களை உடையது,

சொல்லப்பட்ட இந்தக் குணங்கள் முதல் [காரணம்] நிலையில் நுண்ணியதாக இருந்திருந்தால் அல்லாமல் ஆக்க [காரியம்] நிலையில் பருமையாக [தெரியும் நிலையில்] உண்டாகாது. இது பொருளின் தோற்றமுறை,

மயிலின் முட்டைநீரில் ஐந்து நிறங்களும் புலப்படாமல் நுட்பமாக இருக்கும். ஆதலால் பின்னர், மயில் வெளிப்பட்ட போது அந்த நிறங்கள் தெரியும்படிப் பருமை நிலையில் வெளிப்படும்.

தாமத ஆங்காரம் பிறவற்றோடு சேராத 'தனிநிலையில் நிற்பது. ஆதலால் அதனில் ஓசை முதலிய குணங்கள் நுட்பமாக இருத்தல் இல்லை. அங்கு அவை நுண்ணிய நிலையிலும் இல்லாததால் பிறகு விசும்பு முதலான பெரும்பூதங்களாய் நமக்குத் தெரிய வரும் பருமை நிலையில் ஆகிவரா. ஆதலால் தாமத ஆங்காரத்தி லிருந்து நேரே பூதங்கள் தோன்ற வாய்ப்பில்லை.

ஆனால் அப் பூதங்கள் தோன்றுவதற்கு அவற்றின் நுண்ணிய நிலை ஒன்று இருத்தல் வேண்டுமே. அந்த நிலையை உடையன தன்மாத்திரைகள்.

ஆகவே, பருமையான பெரும் பூதங்களின் நுண்ணிய நிலைகளை உடைய தன்மாத்திரைகளே பின்னர்ப் பெரும் பூதங்களாக ஆகிவரும் என்று கொள்ள வேண்டும். இதனால்தான் தன்மாத்திரைகளை நுண்பூதங்கள் என்றும் சில இடங்களில் சொல்லுகின்றனர்.

## தன்மாத்திரை ஐந்து

தன்மாத்திரை ஏன் ஐந்தாக வேண்டும்? தன்மாத்திரை ஒன்றே என்றால் அதன் ஆக்கமாகிய பெரும்பூதங்கள் ஐந்தில் ஒவ்வொன்றிலுமே ஐந்து குணங்களும் வேறுபடாமல் ஒத்திருக்கவேண்டும். அப்படியிருந்தால் பெரும்பூதமும் ஒன்று என்றே இருக்கும் அல்லாமல் ஐந்து ஆக முடியாது. ஆனால் அவை ஐந்தாகவே உள்ளன. அதனால் அதற்குத் தக்கபடி குணமும், விசும்பிற்கு ஒன்றும், காற்றிற்கு இரண்டும், தீக்கு மூன்றும், நீருக்கு நான்கும், நிலத்திற்கு ஐந்துமாகக் காணப்படுகிறது.

இப்படி இந்த வேறுபாடு இவற்றிற்கு முதலான பொருள்களில் இருந்தால் ஒழிய உண்டாகாது. ஆதலால் அவ்வாறு ஐந்து குணவேறுபாடு உடைய தன்மாத்திரைகள் ஐந்து இருத்தல் வேண்டும் என்பது உறுதியாகிறது.

## தன்மாத்திரை, பூதம்-வேறுபாடு

தன்மாத்திரைகளுக்கும் பூதங்களுக்கும் வேறுபாடு முளையும் மரமும் போல நுண்ணிய நிலையில் நிற்பதும் பருமை நிலையில் நிற்பதும் ஆகிய நிலைவேறுபாடே அல்லாமல் பொருளில் வேறு பாடில்லை.

## சிறப்புக்குணம் பற்றிப் பெயர்

தன்மாத்திரை ஐந்தும் தாமத ஆங்காரத்திலிருந்து ஒன்றன் பின் ஒன்றாக முறையாகத் தோன்றும். அப்படித் தோன்றும்போது ஒரொரு குணம் மிகுந்து தோன்றும். ஊறு ஓசை முதலான குணங் களில் எந்தத் தன்மாத்திரையில் எந்தக் குணம் மிகுந்திருக்குமோ அந்தக் குணத்தை முதன்மையாக வைத்து அந்தத் தன்மாத்திரைக்குப் பெயர் சொல்லப்பட்டது. ஒவ்வொரு தன்மாத்திரையிலும் மிகுந் திருக்கும் குணம் அதற்குச்சிறப்புக் குணம். மற்றைய நான்கு குணமும் பொது. சிறப்புக் குணத்தை வைத்தே தன்மாத்திரைக்குப். பெயர்,

## தன்மாத்திரையின் ஆக்கமே பெரும் பூதம்

புத்தியாகிய உட்கருவி முதலாக நிலம் என்னும் பூதம் முடிவாக உள்ள அனைத்தும் மூலப்பகுதியில் உள்ள முக்குணங்களின் ஆக்கம் என்பது ஏற்கெனவே அறியப்பட்டது.
உலகம் எல்லாம்

1. சத்துவகுண மயம் ஆன விளக்கம், அமைதி, இன்ப உருவங்களாகவும்
2. இராசதகுண மயம் ஆன - தொழில், கடுமை, துன்ப உருவங்களாகவும்
3. தாமதகுண மயம் ஆன - நியமனம், அறியாமை, மோக உருவங்களாகவும்

ஆக நிற்கும் ஆதலால் இப்படிப் பட்டவற்றிற்கு முதற்காரணம் முக்குண உருவான மூலப்பகுதியே அல்லாமல் வேறன்று.

இதனால் உலகம் எல்லாம் குணவடிவேயாம் என்பது தெரியும்

மனிதர் பலர் திரண்டு கூடியபோது படை என்ற பெயர் உருவாகிறது. மரங்கள் பல நெருங்கிச் சேர்ந்த இடம் சோலை என்று பெயர் பெறுகிறது. இதுவெல்லாம் நம் அனுபவச் செய்தி.

இதுபோலவே, குணங்கள் பல ஒன்றுதிரண்டு கூடியபோது குணி என்று பெயர் பெறும். பொருள் எனவும் பெயர் சொல்லப் படுகிறது. இதுவும் நம் அனுபவத்தில் உள்ள வழக்கு. இது அல்லாமல் குணி அல்லது குணத்தை உடைய பொருள் என்று தனியே எதுவும் இல்லை ஆதலால் குண குணிகளுக்கு இடையே பெரும் பாலும் வேறுபாடு கூறுவது சைவ சித்தாந்தத்திற்குப் பொருந்தாது.

ஆகவே தன்மாத்திரையாகிய ஓசை முதலான நுண்பொருளி லிருந்தும் வான் முதலான பெரும் பூதங்கள் தோன்றும் என்று சொல்லுவது சரியே.

## குணமும் குணியும்

கண் முதலான பொறிகள் அவற்றவற்றிற்கு உரிய ஒளி (உருவம்)முதலியவற்றை மட்டுமே அறியும் என்பது முறைமை. ஆகையால்,ஒளி முதலான குணங்களுக்கு வேறாகக் குணிப் பொருள் ஒன்று உண்டு என்று கொண்டாலும் அது பொறியால் அறியப்படுதல் இல்லை.

குணத்திற்கு வேறாகக் குணிப் பொருள் என்பதொன்று இல்லை என்று இங்கு எடுத்துரைத்த சான்றுகள் வலிமையானவை.

ஆதலால்,

அதனைக் கண்டேன். அதனைத் தொட்டேன் என்று சொல்லும் போது கண், தோல் ஆகிய இரண்டு பொறிகளாலும் அறியப்பட்டது. ஒன்றே என்று நினைக்கத் தோன்றும். இது உண்மை அன்று. மயக்கமே. கண்ணால் அறியப்பட்டது உருவம் அல்லது ஒளி. தோலால் அறியப்பட்டது ஊறு. ஒளிவேறு ஊறு வேறு.அறியப்பட்ட பொருள் வேறு வேறே. அன்று எனக் கருதினால் அதுமயக்க உணர்வே என்று கருத வேண்டும்.

இல்லையானால், குணங்கள் ஒன்றுகூடிய போது குணி என்று பெயர் பெற்று ஒரு பொருளாக நிற்பதுபற்றிக் கண்டேன் தொட்டேன் என்பன இரண்டு பொறிகளுக்கும் அறிபொருள் ஒன்றே என்று கருதுவது ஏற்றுரை என்று கொள்ளவேண்டும்.

அல்லாமல் குணிப் பொருள் குணத்திலிருந்தும் வேறானது என்று கொள்ளப் பொருந்தாது.

இதனால் இங்கு கொள்ளப்பட்ட முடிபு-

1. ஓசை முதலாக நாற்றம் முடிவான ஐந்து குணங்களும் பகுப்பில்லாமல் பொதுமையில் நின்ற நிலை நாற்றம் என்னும் தன்மாத்திரை.

2. ஓசை முதலாகச் சுவை முடிவான மூன்று குணமும் பகுப்பில்லாமல் பொதுமையில் கூடிநின்ற நிலை சுவை என்னும் தன்மாத்திரை.

3. ஓசை முதலாக ஒளி முடிவான மூன்று குணமும் பகுப்பில்லாமல் பொதுமையில் நின்ற நிலை ஒளி என்னும் தன்மாத்திரை.

4. ஓசையும் ஊறும் ஆகிய இரண்டு குணமும் பகுப்பு இல்லாமல் பொதுமையில் நின்ற நிலை ஊறு என்னும் தன்மாத்திரை.

5. ஓசையாகிய குணம் ஒன்றே வல்லோசை, மெல்லோசை முதலான பகுப்பு இல்லாமல் பொதுமையில் நின்ற நிலை ஓசையாகிய தன்மாத்திரை.

இதனால் குணமே தன்மாத்திரையாகும்; ஆகையால் ஓரொரு குணம் சிறந்து நிற்கும் விசும்பு முதலான ஐந்து பூதங்களுக்கும் இவை முறையே காரணமாகும் என்ற கருத்துக்கள் புலப்படும்.

## 5. பூதம்

### 1. விசும்பு-வான்

#### விசும்பு என்பது

நுண்ணிய ஓசையாகிய தன்மாத்திரையிலிருந்து பரியதாக விசும்பு தோன்றும். அது பல வேறு வகைப்பட்ட ஓசையை உடையதாகி உயிரினங்கள் போதல், வருதல் முதலிய தொழில்களைச் செய்வதற்கு இடம்கொடுத்து நிற்கும்.

## விசும்பு என்பது உண்டா?

வல் ஓசை, மெல் ஓசை முதலாகப் பல வேறு ஓசைகளை நாம் கேட்கிறோம். இவை ஓசையின் குணங்கள். இந்தக் குணங்கள் இவ்வாறு பிரிக்கப்படாமல் ஒன்றுகூடி நிற்பதாகிய குணிப்பொருள் இல்லாதபடி உண்டாகா.

இடம்கொடுக்கவேண்டாத போது இடைவெளி இல்லாத நிலத்திலும் போதலும் வருதலும் செய்யவேண்டும். அவ்வாறு செய்ய முடியாது. ஆதலால் போக்கு வரவு செய்வதற்கு ஏதுவாக இடம் கொடுத்தல் உண்டு என்பது உறுதியாகிறது. அப்படி இடம் கொடுப்பதற்கு விசும்பைத் தவிர வேறு எதுவும் இல்லை.

இக்காரணங்களால் விசும்பாகிய பூதம் உண்டு என்பது உறுதியாகிறது.

## ஓசை குணமே

வல்லோசை மெல்லோசை என்று சொல்லப்பட்டவை உயர்ந்ததும் தாழ்ந்ததுமான ஓசைகள். இந்த உயர்ச்சி, தாழ்ச்சி முதலான வேறுபாடுகள் நாற்றம் முதலான குணங்களுக்கே அல்லாமல் குணிப் பொருளுக்கு இல்லை.

பொன், இரும்பு முதலியவற்றிலும் உயர்ச்சி, தாழ்ச்சி குணம் பற்றிச் சொல்லப்படும் அல்லாமல் பொருள்பற்றி அன்று.

ஆகவே, வன்மை, மென்மை முதலிய வேறுபாடுகளே ஓசையானது ஒரு குணம் என்பதற்குச் சான்று ஆதலால் அது கொண்டு ஓசையைக் குணிப்பொருள் என்று கொள்ளப் பொருந்தாது.

# காற்று

## காற்று ஆவது

ஊறு என்னும் தன்மாத்திரையிலிருந்து வாயு என்னும் பூதம் தோன்றும். அதற்கு ஓசை, ஊறு இரண்டு குணமும் உண்டு. சலித்துத்

திரட்டுதல் அதன் தொழில். அது வெளியிடத்தில் நிலவும். உடம்புகளின் உள்ளும்உயிர்க் காற்று முதலான பத்து வகைப்பட்டு இயங்கும். உடம்பில் நிகழும் எழுதல், இருத்தல் முதலிய தொழில்களுக்கு ஏதுவாகி எல்லா உயிர்களுக்கும் உதவியாயிருக்கும்.

## தீ

### தீயாவது

உருவம் அல்லது ஒளி என்னும் தன்மாத்திரையிலிருந்து தீயாகிய பூதம் தோன்றும். அது ஓசை, ஊறு, ஒளி என்ற மூன்று குணங்களை உடையது. அது உணவைப் பக்குவம் செய்தல் முதலிய தொழில்களைக் கொண்டது. உலகில் மூவகை வைதிகத் தீயாகும்.

அதாவது வேத நெறிப்பட்ட வகை. சைவ நெறிப்பட்டது. வேறு, அது சைவத்தீ. இவை சமயச் செயல்களுக்கு உதவியாயிருப்பன. உடம்பின் உள்ளே விந்து என்ற தீயாகி நின்று நாம் உண்டவற்றையெல்லாம் பக்குவம் செய்து உயிர்களுக்கு மிகவும் உதவியாயிருக்கும். இவ்வாறு தீ பலவகையாகும்.

## நீர்

### நீராவது

சுவையாகிய தன்மாத்திரையிலிருந்து நீர் என்ற பூதம் தோன்றும். அது ஓசை, ஊறு, ஒளி, சுவை ஆகிய நான்கு குணங்களை உடையது அது பொருள்களை நெகிழச் செய்து பதம் பண்ணும் தொழிலை உடையது. உயிர்கள் எல்லாம் தன்னால் உயிர்வாழ்வதற்கு ஏதுவாய் நிற்கும்.

பனி, பனிக்கட்டி முதலியனவும் குளிர்ந்த ஊறு உடைமையால் நீரேயாம். ஆனாலும் அவற்றில் கடினப் பொருள் விரவி நிற்பதால் வன்மை அடைந்தன.

## நிலம்

### நிலமாவது

நாற்றம் அல்லது மணம் ஆகிய தன்மாத்திரையிலிருந்து நிலம் என்னும் பூதம் தோன்றும். அது ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்

என்ற ஐந்து குணங்களையும் உடையது. கடினமாகித் தரித்தல் அதன் தொழில்.

நிலம் முதலான ஐந்து பூதங்களும் உடம்பிலும் மயிர் எலும்பு ஒடு நீர் குருதி முதலியனவாக நிற்கும்.

விசும்பு உடம்பில் உள்ள எல்லா நாடிகளிலும் ஆங்காரத்தின். விரிவுக்கு இடமாய் நிற்கும்.

விசும்பிற்கு ஓசையாகிய குணம் நீர் அலைபோலத் தரையாய்த் தோன்றும் எதிரொலி மட்டுமே.

காற்றுக்கு ......ஊர்தலைத் தெரிவிக்கும் கசகச ஒலி.
தீக்கு......... எரிதலைத் தெரிவிக்கும் தம தம ஒலி
நீருக்கு...... ஒழுகுதலைத் தெரிவிக்கும் சளசள ஒலி.
நிலத்திற்கு...... கடினத்தைத் தெரிவிக்கும் கடகட ஒலி.

இவ்வாறு, ஐந்து பூதங்களிலும் ஓசைக் குணம் உண்டு என்றாலும் ஒன்றுக் கொன்று வேறுபட்டிருக்கும் இது போலவே பிறவும்.

(எ-டு) ஊறாகிய குணம்-காற்றுக்கும் நிலத்திற்கும் குளிர்ச்சியும் வெப்பமும் இல்லாத ஊறு. தீக்கு வெப்பமான ஊறு, நீருக்குக் குளிர்ச்சி ஊறு.

சுவை-நீருக்கு இனிப்பு. நிலத்திற்கு அறுவகைச் சுவையும்.

## தொகுத்துரை

தத்துவங்கள் எனப்படும் கருவிகள் முப்பத்தாறு. தோற்ற முறையில் முதலாவது சிவதத்துவம், முடிவானது நிலம் என்னும் பூதம்.

இவை-ஐந்தும் ஏழும் இருபத்து நான்கும் என்ற மூன்று கூறுகளில் அடங்கும். உயிர்களின் உலக நுகர்ச்சியில் இந்த முப்பத்தாறும் உதவியாகும். ஒன்று இல்லாத படியும் நுகர்ச்சி நடவாது.

மூன்று கூறும்

1. தூயது-சிவதத்துவம் - செலுத்தும் கருவி
2. விரவியது - வித்தியா தத்துவம் - நுகர்விக்கும் கருவி
3. மாசது - ஆன்மதத்துவம் - நுகர்ச்சிக் கருவி

என்ற வகைப்பாட்டை உடையன.

## ஒடுங்கும் முறைமை

தோன்றிய தத்துவங்கள் ஒடுங்கும் போது தோன்றிவந்த முறையிலேயே அதன் அதன் காரணத்தில்-முதலில்-ஒடுங்கும்.

## தத்துவங்களின் வகை

### நால்வகைக் கருவி

கீழிருந்து நிலம் முதல் கலை முடிவான கருவிகள் முப்பத்தொன்று. அவை நால்வகைப்படும்.

1. புறப்புறக் கருவி – பூதம் 5, தன்மாத்திரை 5 - 10
2. புறக் கருவி - அறிபொறி 5, செயற்பொறி 5 - 10
3. அகப்புறக் கருவி - மனம் முதல் 4 - 4
4. அகக் கருவி - அராகம் முதலிய 7 - 7

## தத்துவங்கள் - பொதுவும் சிறப்பும்

### பொது

தத்துவங்கள் உலக வடிவானவை, உடம்பு வடிவானவை என்று இருவகையாகும்.

உலக வடிவான தத்துவங்கள் உயிர்களின் உலக நுகர்ச்சியில் எல்லா உயிர்களுக்கும் பொதுவாக இருந்து நுகர்ச்சியைத் தரும்,

ஆதலால் அவை பொதுத் தத்துவங்கள் என்று சொல்லப்படும்.

### சிறப்பு

உடம்பு நுண்ணுடம்பு, மிக நுண்ணுடம்பு, பருவுடம்பு என மூன்று வகை. நுண்ணுடம்பும் மிக நுண்ணுடம்பும் எட்டால் உருவான உடம்பு [புரியட்டகாயம்] என்று சொல்லப்படும்.

1. தன்மாத்திரை ஐந்தும், சித்தம் தவிர மற்றைய உட்கருவி மூன்றும் ஆக இந்த எட்டும் கூடி உண்டானது நுண்ணுடம்பு.

2. பூதம், தன்மாத்திரை, அறிவுப்பொறி, செயற்பொறி, உட் கருவி குணம், மூலப்பகுதி, கலை முதலியன ஆக இந்த எட்டுவகைப் பட்ட முப்பத்தொரு தத்துவங்களால் ஆனது மிக நுண்ணுடம்பு இது பரவுடம்பு என்றும் சொல்லப்படும்.

இந்த எட்டு வகையான தத்துவங்கள் முப்பத்தொன்றும் உயிர் தோறும் வேறுவேறாய் நின்று அப்தந்த உயிர்க்கு வினைப் பயனாகிய நுகர்ச்சியைக் கொடுத்துவரும். இப்படி அந்தந்த உயிர்க் கென நின்று பயன்பட்டுவருவதால் இவை சிறப்புத் தத்துவங்கள் என்று சொல்லப்படும்.

  

ஒரு பொருளைப் பற்றிய தெளிவான உணர்வுக்கு ஏதுவாகிய பருவேரசை மட்டுமே பரவுடம்போடு கூடி உள்ளே விளங்கிநிற்கும் அல்லாத மற்றைய தூய தத்துவங்கள் அப்படி நில்லா,

## பொதுச் சிறப்பு

நமக்குத் தெரிகிற பருவுடம்பு வடிவான தத்துவங்கள் அவரவர் நுகர்ச்சிக்குச் சிறப்புவகையால் நிலைக்களம் ஆகும். அதனால் அவை சிறப்புத் தத்துவங்கள்.

அதே பொழுதில் மனைவி முதலிய பிறர்க்குச் சந்தனம் பூமாலை போன்ற பொருள்களைப் போலப் பொதுவான முறையிலும் நுகர்ச்சிக்கு இடமாகின்றன. ஆதலால் அவை பொதுத் தத்துவங் களும் ஆகும்.

இந்த இருவகை நிலையுமே ஒரே பருவுடம்பில் அமைவதால் பருவுடம்பு வடிவான தத்துவங்கள் பொதுச்- சிறப்புத் தத்துவங்கள் என்று சொல்லப்படும்.





உ

சிவமயம்

# செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம்



பூதமே என்றும்வரு பொறிஎன்றும் மனம்ஆதி
பொருள்என்றும் நீள்கலாதி
பொருள்என்றும் உயர்சுத்த மாயைபொருள் என்றும்இப்
புவியில் சிருட்டிசெய்யும்
நாதர்பொருள் என்றும்அரவு அணையில் துயின்றஒரு
நாரணன் பொருளதென்றும்
நாலுவி தம்குளறி னோர்குருடர் பலர்கூடி
நாடிஒளி தேடுமாபோல்
பேதம்உறு பிறவியில் சுழல்வதுஅல் லால்உண்மை
பெற்றிடுவது உண்டோ சொலாய்
பின்னும்முன் னும்பக்க மேல்கீழு மாய்அண்ட
பித்திகள் உடைத்துமண்டி
ஆதிநடு அந்தமும் இலாமல்அடி நாயேனை
அகலாமல் ஆண்டுகொண்ட
அருள்ஞான வாரியே ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே.

— அருள்திரு மாதவச் சிவஞானமுனிவர்.